ஸ்ரீ:

ஸ்ரியைநம:

ஸ்ரீமதேநாராயணாயநம:

ஸகல ஜகதுஜ்ஜீவந மூலமான,

# ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யம்.

இஃது

ஸ்ரீமத் கீதாபாஷ்ய பாகவதாதிகளைத் தமிழில்

மொழிபெயர்த்தவரான,

மூசுர்ப்பாக்கம் - கிடாம்பி,

உ. வெ. ரங்காசாரியரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

ஸ்ரீபெரும்பூதூர்

பிரஸந்ந-வெங்கடாசாரியரால்

ஸ்வகீய

ஸ்ரீஹயக்ரீவமுத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

MADRAS.



1896.

விலை ரூபாய் ௧—௪—0.

ஸ்ரீயை நம:

# விஜ்ஞாபநம்.

ஸர்வலோக சரண்யனான ஸ்ரீமந்நாராயணனுடைய 'அ
ம்சமான ஸ்ரீவேதவ்யாஸபகவான், தம்முடைய பரமகிருபைய
ஹிதார்த்தமாக வேதார்த்தத்தை விவரிக்கவேண்டி பஞ்சமவே
ஹாபாரதத்தைச் செய்தருளினார். ஸபாதலக்ஷம் கிரந்தங்க
அதில் ஸ்ரீகீதை, நாராயணீயம், ஸ்ரீஸஹஸ்ரநாமாத்தியாயம முதலாக
ஸாரமான பாகங்கள் பல உண்டாகிலும், அவற்றுள் ஸ்ரீஸஹஸ்ரநாமாத்தி
யாயம் மிகவும் ஸாரதமமானது. மற்றவைகளைக்காட்டிலும் இது ஸாரதமமா
கைக்குக்காரணம்:—பகவானுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளையே
பிரதிபாதிக்கையும் "கலௌஸங்கீர்த்ய கேசவம்" என்று ஸங்கீர்த்தந மாத்
திரத்தால் இக்கலிகாலத்தில் தர்மாதி ஸகல புருஷார்த்தங்களையும் ஸாதித்
துத்தருகையுமாம். இப்படி யிந்த ஸஹஸ்ரநாமம், கேவலம் ஸங்கீர்த்தந
மாத்திரத்தால் பலனை அளிக்கவல்லதா யிருந்ததாகில், இதின்பொருள் எத்
தகைத்ததாய் விளங்குமோவென்று, அர்த்தவிசாரம்பண்ணி அந்தசுகத்தை
அநுபவிக்க வேண்டுமென்கிற அவா, அனைவர்க்கு முண்டாமதே! ஆனது
பற்றியே இதற்கு மதத்திரயத்திலும் பாஷ்யமியற்றப்பட்டது.

இனி இதின்பொருள் அனைவர்க்கும் அவசியமானபின்பு, அதுதான்
பாஷ்யத்தைக்கொண்டு அறியவேண்டி, அந்த பாஷ்யம் கீர்வாணபாஷை
யாயிருப்பதுபற்றி அந்த பாஷையில் பரிக்ஞாநமில்லாதவர்கள் "இதின்
பொருளாசை நமக்கில்லை" என்கிற குறையுடன் கைவாங்கவேண்டியதாய்
நேரிட்டது. இக்குறைதீரவேண்டிய அனேகம் ஆஸ்திக சிகாமணிகளின்
நியமநத்தை அவலம்பமாகக்கொண்டு, நாயினேன் அவற்றுள் ஸ்ரீபராசர
பட்டாரக விரசிதமான விசிஷ்டாத்வைதபாஷ்யத்தைத் திருநாமந்தோ
றும் விடாமல் தமிழில் மொழிபெயர்த்து, ஆங்காங்கு மதபேதமுண்டான
விடங்களில் சங்கரபாஷ்யத்தையும் மொழிபெயர்த்துச்சேர்த்து அச்சிடத்
துணிபுற்றேன்.

பற்பநாபனுக்குப் பள்ளிகொள்ளிடமாய்ப் பரந்த பாற்கடலை, பகுத்
தறிவற்றதோர் பூனை, பருகப் புகுவதுபோல, பரிமிதகம்பீரபாஷிகளின்
பாஷ்யத்தை இப்புல்லறிவாளன் பகரமுயன்றது பரிஹாஸாஸ்பதமாயி
னும், "காக்கைவாயிலுங் கட்டுரைகொள்வர் காரணகருளக்கொடியானே"
என்கிறபடியே, தன்னைப்பழிச்சுவதா யிழிந்தது காக்கையாயினும் அதின்
மொழியைக் கட்டுரையாக்கிக் கொள்ளுகின்ற கார்முகில்வண்ணனைக் கட
கென்று நம்பியிழிந்தமைகொண்டு இது உசிதமேயாமென்று மதித்து குண
நிஷ்டர்களான மஹான்கள் இதில் குணத்தையே சீர்தூக்கிச் சிறியேனைச்
சிறப்பிக்கவேண்டுமென வேண்டிக்கொள்கின்றனன்.

వచసామమదూషితో౽పివిష్ణోర్గుణగుంఫోనజహాతి వైభవంస్వమ్ ।
శునకేనవిలీఢదుగ్ధసింధుర్నహిగంగా-పదమశ్నుతేప్రధృష్టః ॥

மு. கி. ர.

# விளம்பரம்.

| | ரூ. | அ. | தபாலுள்பட. | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யம், கிரந்தம் அல்லது தெலுங்கு சுலோகங்களுடன் | 1 | 12 | 2 | 0 | 0 |
| மேற்சொல்லியபடியே ஸ்ரீமத்கீதாபாஷ்யம் | 1 | 8 | 1 | 12 | 0 |

1. ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம் கிரந்தலிபி தெலுங்கு லிபிகளில் சுலோகங்களும், தமிழில் பதவுரையும், தாத்பரியார்த்த விசேஷார்த்தங்களுமாய் அச்சிடப்பட்டு வருகின்றது. இப்பொழுது நாலில் ஒருபாகம் ஆயிற்று; இன்னும் ஒருவருஷத்தில் முடிவுபெறும்; முடிவதற்குள்ளாக ஒரே தடவையாய் பணம் அனுப்புவோருக்கு ரூபாய் 6-க்கும், இரண்டுதடவையாய் அனுப்புவோருக்கு ரூபாய் 8-க்கும், முடிந்தபின்பு வேண்டுவோருக்கு ரூபாய் 12-க்கும் கொடுக்கப்படும். தபாலில் வரவழைக்க நினைத்தவர்கள் சார்ஜ் கொடுத்துக்கொள்ளவேண்டும்.

2. இன்னும் மதக்கிரந்தங்களும் விசேஷமாய் வைஷ்ணவமதக் கிரந்தங்களும் இவ்வச்சுக்கூடத் தலைவர்களில் ஒருவருக்கு எழுதினாலும் அனுப்பப்படும்.

இப்படிக்கு,

ரூ. கிடாம்பி. ரங்காசாரியர்.

ஸ்ரீ. பிரஸந்ந. வெங்கடாசாரியர்.

ஸ்ரீஹயக்ரீவமுத்திராக்ஷர சாலாதிகாரிகள்.

நெ. 101. சைனபஜார்தெரு மட்ராஸ்.



శ్రీరస్తు.

శ్రీమతేనారాయణాయనమః

హరిః ఓమ్॥ శుక్లాంబరధరంవిష్ణుంశశివర్ణంచతుర్భుజమ్।

ప్రసన్నవదనంధ్యాయేత్సర్వవిఘ్నోపశాంతయే॥ *

வெண்மையான வஸ்திரம் தரித்து சந்திரன் போன்ற திருமேனி காந்தியும் நான்கு திருத்தோள்களுமாய், தண்ணளி பொருந்திய திருமுகமண்டலத்தோடு விளங்குகின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவை ஸகலமான விக்நங்களும் சமிக்கைக்காக த்யானம் செய்யக்கடவன். (௧)

వ్యాసంవసిష్ఠనప్తారంశక్తేఃపౌత్రమకల్మషమ్।

పరాశరాత్మజంవందేశుకతాతంతపోనిధిమ్॥

வஸிஷ்டருடைய கொட்பேரனும், சக்தியினது பேரனும், பராசரர் மைந்தனும், சுகப்ரம்மத்தின் தாதையும், பாபரஹிதனும், தபோநிதியுமான வியாஸரை வணங்குகிறேன். (௨)

వ్యాసాయవిష్ణురూపాయవ్యాసరూపాయవిష్ణవే।

నమోవైబ్రహ్మనిధయేవాసిష్ఠాయనమోనమః॥

வியாஸர்தான் விஷ்ணுவோ! விஷ்ணுதான் வியாஸரோ! என்றுவிகற்பிக்கும்படியாய், தபோநிதியாய், விளங்குகிற வஸிஷ்டவம்சத்தில் தோன்றியவரான ஸ்ரீவியாஸபகவானை நமஸ்கரிக்கிறேன். (௩)

అవికారాయశుద్ధాయనిత్యాయపరమాత్మనే।

సదైకరూపరూపాయవిష్ణవేసర్వజిష్ణవే॥

ய், சுத்தனாய், நித்தியனாய், பரமாத்மாவாய், எப்பொழு
, திருமேனியைப் பரிக்கிரஹித்தவனாய், ஸகலத்தையும
ாயனாய் விளங்குகிற ஸ்ரீமகாவிஷ்ணுவின் பொருட்டு நமஸ்
(௪)

...గణమాత్రేణ జన్మసంసారబన్ధనాత్ ।
...తేనమస్తస్మైవిష్ణవేప్రభవిష్ణవే ॥

ఓన్నమోవిష్ణవేప్రభవిష్ణవే ।

எவனை ஸ்மரித்தமாத்திரத்தால் புருஷன் ஜன்மம்முதலான ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுபடுகிறானோ ஸர்வஸமர்த்தனான அந்தவிஷ்ணுவின்பொருட்டு நமஸ்காரம். (௫)

## இந்தக்கிரந்தத்தைப் படனம் செய்பவர் முதலில் தெரிந்துக் கொள்ளவேண்டிய விஷயம்.

1-வது. இதில் சேர்க்கப்பட்ட படத்தில சரதல்ப கதரான பீஷ்மர் ஸஹஸ்ரநாமோபதேசம்பண்ண, அதை தருமபுத்திராதிகளும் கண்ணபிரானும மற்றும் வியாஸாதி மஹர்ஷிகளும் சிரத்தையோடு கேட்கிறதும், அவர்கள் வந்திறங்கின வாஹநாதிகளும் காணப்படும்.

2-வது. ஒவ்வொரு பக்கத்திலும் மேலே மூலசுலோகங்களும், அதின் கீழ் அந்த சுலோகங்களுக்குப் பதவுரையும், அதன்கீழ் அதற்குண்டான விசிஷ்டாத்வைத பாஷியமும், அதன்கீழ் பெரும்பாலும் மதபேதமுள்ள விடங்களில் அத்வைத பரமானபாஷியமும், அதன்கீழ் அந்தபாஷியங்களில் உதஹரிக்கப்பட்ட ப்ரமாணவசநங்களுமாய் வரையப்பட்டிருக்கின்றன.

3-வது. பாஷியத்தில் உதஹரிக்கவேண்டிய வசநங்களுக்குப்பதிலாக நெம்பர் கொடுத்து, அந்தநெம்பருக்கு ஸரியாகக் கீழே அவ்வசநம் எழுதப பட்டிருக்கிறது.

4-வது. இப்படி பத்திரந்தோறும் கண்டிருக்கிற வசநங்களுக்குத்தக்க படியே கிரந்தத்தின் கடைசியில் நெம்பர்கொடுத்து அவ்வசநங்களுக்குப பொருள்கூறி, அதற்கு "பிரமாணார்த்த ஸங்கிரஹம்" என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

5-வது. பத்திரந்தோறும் விசிஷ்டாத்வைதபாஷிய மிதென்று காட்டுவதற்காக (வி.) என்கிற ஒரெழுத்தும், அத்வைதபாஷியமீதென்றுகாட்டுவதற்காக (அ.) என்கிற ஒரெழுத்தும் எழுதப்பட்டிருக்கும்.

6-வது. விசிஷ்டாத்வைத பாஷ்யத்தில், பத்து திருநாமம், பதினேந்து திருநாமம்சேர்த்து ஒரு ஸங்கதியாய் பகவானுடைய பரவ்யூஹ விபவாதி அவஸ்தைகளில் பிரகாசித்த குணசேஷ்டிதங்களைப் பிரதிபாதப்பதாய் சொல்லப்பட்டிருக்கும்.

ஸ்ரீ:

*ஸஹஸ்ரநாமார்த்தியாயத்தில் சேராத விஷயமாயினும், ஜபத்துக்குபயோகமாக சிஷ்ட ஸம்பிரதாய மாய் அநுஸந்திக்கப்படும் விஷயங்க ளாகையால் உரையப்படுகின்றன.*

---

విష్ణుంజిష్ణుంమహావిష్ణుంప్రభవిష్ణుంమహేశ్వరమ్ । అనేకరూ
పదైత్యాన్తంనమామిపురుషోత్తమమ్ ॥అస్యశ్రీవిష్ణోర్దివ్యసహస్రనా
మస్తోత్రమహామంత్రస్యశ్రీవేదవ్యాసోభగవానృషిః ॥ అనుష్టుప్ఛందః॥
శ్రీమహావిష్ణుః పరమాత్మా శ్రీమన్నారాయణోదేవతా ॥ అమృతాం
శూద్భవోభానురితిబీజం ॥ దేవకీనందనస్స్రష్టేతిశక్తిః ॥ ఉద్భవఃక్షో
భణోదేవఇతిపరమోమంత్రః ॥ శంఖభృన్నందకీచక్రీతికీలకం॥ శార్ఙ్గ
ధన్వాగదాధరఇత్యస్త్రం॥ రథాంగపాణిరక్షోభ్యఇతినేత్రే ॥ త్రిసామా
సామగస్సామేతికవచం॥ ఆనందంపరబ్రహ్మేతియోనిః॥ఋతుస్సుదర్శ
నఃకాలఇతిదిగ్బంధః॥ శ్రీవిశ్వరూపఇతిధ్యానం ॥ శ్రీమహావిష్ణుప్రీత్యర్థే
శ్రీసహస్రనామజపేవినియోగః ॥

*இது உபதேசகம்யமான ரஹஸ்யமாகையாலே இவற்றிற்குப் பொருள் வரையப்படவில்லை.*

ధ్యానం ॥ క్షీరోదన్వత్ప్రదేశేశుచిమణివిలసత్సైకతేమౌక్తి
కానాంమాలాక్లృప్తాసనస్థఃస్ఫటికమణినిభైర్మౌక్తికైర్మండితాంగః
శుభ్రైరభ్రైరదభ్రైరుపరివిరచితైర్ముక్తపీయూషవర్షైరానం
దీనఃపునీయాదరినలినగదాశంఖపాణిర్ముకుందః ॥ (౧)

*நிர்மலமான வஜ்ரமணிகளால் பிரகாசிக்கின்ற மணற் குன்றுகளை யுடையதான திருப்பாற்கடல கரையில், முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்ட திவ்யாஸனத்தில் எழுந்தருளி ஸ்படிகமணிபோல் பிரகாசிக்கின்ற முக்தாஹாரங்களால் பூஷிதமான திருமேனியை யுடையராய், மேற்புறத்தில் அனேகம் வெண்முகில்கள் அமிருத வருஷத்தை வருஷிக்க, அதனால் நிரம்பவும் ஆனந்தமடைந்தவராய், சங்கு, சக்கரம், கதை, நளினம், இவைகளைத்தரித்தவராய் மோக்ஷபூமியை அளிக்கவல்லரான ஸ்ரீமந் நாரயாணன் நம்மைப் பரிசுத்தராக்கவேண்டும்,*

భూఃపాదౌయస్యనాభిర్వియదసురనిలశ్చంద్రసూర్యౌచనేత్రే కర్ణావాశాశ్శిరోద్యౌ ర్ముఖమపిదహనో యస్య వాస్తేయమబ్ధిః । అంతస్థంయస్యవిశ్వంసురనరఖగగోభోగిగంధర్వదైత్యైశ్చిత్రంరంరమ్యతేతంత్రిభువనవపుషంవిష్ణుమీశంనమామి ॥ (౨)

*எவனுக்கு பூமியானது திருவடிகளோ, ஆகாசம் நாபியோ, வாயு பிராணனோ, சந்திரசூரியர்கள் நேத்திரங்களோ, திசைகள்செவிகளோ, சுவர்க்கம் திருமுடியோ, அக்னி முகமோ, ஸமுத்திரம் ஆடையோ, பிரபஞ்சமானது எவனுடைய கர்ப்பத்திலிருந்து தேவர், மனிதர், பறவைகள், பசுக்கள், பாம்புகள், கந்தருவர்கள், அசுரர்கள், முதலியவைகளால் பல்படியாலும் விசித்திரமாய், ரமிக்கப்படுகின்றதோ; எங்கும் பரந்து ஸகலத்துக்கும் நியாமகனான அந்தபகவானை நமஸ்கரிக்கிறேன்.*

శాంతాకారంభుజగశయనంపద్మనాభంసురేశంవిశ్వాకారం గగన సదృశం మేఘవర్ణం శుభాంగమ్ । లక్ష్మీకాంతంకమలనయనం యోగిహృద్ధ్యానగమ్యంవందేవిష్ణుం భవభయహరం సర్వలోకైక నాథమ్ ॥ (3)

*சாந்தமான ஆகாரத்தோடு அரவணையின்மீது கண்வளர்ந்து தாமரை பூத்த உந்தியும், பிரபஞ்சாகாரமாய் ஆகாயம்போல் அதிஸூக்ஷ்மமாய் எங்கும் பரந்து கார்மேகம்போல் அழகியதான திருமேனியுமாய், புண்டரீகாக்ஷனாய், யோகிகளால் சிந்திக்கப்படுமவனாய், ஸம்ஸாரபயத்தைப்போக்கடிப்பவனாய், ஸகல லோகத்துக்கும் தனியரசாய் விளங்குகின்ற ஸ்ரீமஹாவிஷ்ணுவை நமஸ்கரிக்கிறேன்.*

మేఘశ్యామంపీత కౌశేయవాసంశ్రీవత్సాంకంకౌస్తుభోద్భాసితాంగం । పుణ్యోపేతం పుండరీకాయ తాక్షంవిష్ణుం వందేసర్వలోకైకనాథం । (౪)

*காளமேகம்போல் கறுத்துப் பீதகவாடையுடுத்து, ஸ்ரீவத்ஸமென்னும் மறுவைத்தரித்து, கௌஸ்துபமென்னு மிரத்தினத்தால் பிரகாசிக்கின்ற திருமார்பும், புண்டரீகம்போல்நீண்ட திருக்கண்களுமாய் புண்ணியபுருஷர்களால் சூழப்பட்டு "ஸர்வலோகத்துக்கு மிவனே தனிக்கோல் செலுத்துமவன்" என்னும்படி விளங்குகின்ற விஷ்ணுவை நமஸ்கரிக்கின்றேன்.*

——ooooo——

శ్రీరస్తు,

శ్రీమతే రామానుజాయ నమః.

விசிஷ்டாத்வைத பரமான

# ஸ்ரீ ஸஹஸ்ரநாமபாஷ்யம்.

శ్రీపరాశరభట్టార్యశ్శ్రీరఙ్గేశపురోహితః ।
శ్రీవత్సాఙ్కసుతశ్శ్రీమాఞ్ఛ్రేయసే మేస్తుభూయసే ॥
ఓస్మై మోగజవక్త్రాద్యైః పారిషద్యైః ప్రశాసతే।
శ్రీరఙ్గరాజసేనాన్యే సూత్రవత్యాసమేయుషే॥
నమో నారాయణాయేదం కృష్ణద్వైపాయనాత్మనే।
యదాముష్యాయణా వేదా మహాభారతపఞ్చమాః ॥

## உபோத்காதப்ரகரணம்.

### ஸ்ரீராமாயணம்போல் ஸ்ரீமஹாபாரதமும் பிரமாணமென்கிறது.

பிரபஞ்சத்தில் பகுத்தறிவுடைய புருஷன் ஒவ்வொருவனும் பிரத்தியக்ஷாதிகளான * பிரமாணங்களைக்கொண்டு § பிரமேயத்தைப் பகுத்தறிந்து [அதாவது விஷயங்களை இதுநன்று இதுதீது என்று பிரித்தறிந்து] அப்படி அறியப்பட்டவிஷயம் சந்தந குஸுமாதிகளைப்போல் தனக்கு அநு

---

* பிரமாணமென்பது (விஷயங்களை) உள்ளபடியே யறிவிக்குமது. அது பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம் என்று மூன்றுவிதம். பிரத்தியக்ஷமாவது விஷயங்களைப் பிரத்தியக்ஷமாய் கிரஹிக்கும் செவி வாய் கண் மூக்கு முதலிய விந்திரியங்கள். அநுமாநமென்பது ஒரு குறியைக்கண்டு மற்றொன்றை ஊஹிக்கின்ற புத்தி விசேஷம். சப்தமென்பது சாஸ்திரம்.

§ பிரமேயமென்பது, பிரமாணங்களைக்கொண்டு அறியப்படுமது. இது தர்மம், அர்த்தம், காமம், பரதத்வம் என்று நான்குவிதம், இவற்றுள் அர்த்தம் காமம் என்கிற விரண்டும், பிரத்தியக்ஷம் அநுமாநம் என்கிற இருவகைப் பிரமாணங்களாலும் அறியக்கூடியது. தர்மம், பரதத்வம் என்கிற விரண்டும் சாஸ்திரத்தினாலேயே அறியத்தக்கது என்றறிக.

கூலமாயிருந்தாகில் அதைக்கொள்ளுகிறான்; அது விஷசஸ்த்ராதிகளைப் போல் பிரதிகூலமாயிருந்தாகில் அதை ஒழித்துவிடுகிறான்; காஷ்டலோஷ்டாதிகளைப்போல் அநுகூலமுமின்றி பிரதிகூலமுமின்றி இருந்தாகில் அதுவிஷயத்தில் உபேக்ஷையாயிருக்கிறான். அதில், பிரத்தியக்ஷம் முதலான இதரப்பிரமாணங்களுக்கு விஷயம் அர்த்தமும காமமும்; இவ்விரண்டுப் பிரமேயங்களும் மிகவும் அற்பங்களாயும் அநர்த்ததையுண்டு பண்ணுமவைகளாயும், ரஸாபாஸங்களாயும், நிலையில்லாதவைகளாயும், துக்கமிச்சிரங்களாயும், அதிகமாய் வருத்தப்பட்டு ஸாதிக்கவேண்டியவைகளாயும் இன்னுமிப்படி அபரிமித தோஷங்களுக்கிடமாயு மிருக்கின்றன; ஆனதுபற்றி, பிரதிகூலரூபமான இவைகளை ஒழித்துவிடவேண்டுமென்றேற்பட்டது. இனியிருந்த சாஸ்திரமென்னும் பிரமாணத்துக்கு விஷயம் தருமமும் பரதத்துவமும். இவ்விரண்டுப் பிரமேயங்களும் கீழ்ச்சொன்ன தோஷங்கள் சிறிதுமின்றி மஹா மங்களகரமாயிருக்கின்றன. ஆனதுபற்றி இவ்விரண்டையும் [அதாவது தருமத்தையும் பரதத்துவத்தையும்] கைக்கொள்ளவேண்டும்; மேலும் இதை யறிவித்துக் கைப்படுத்துவதான சாஸ்திரத்தையுங் கைக்கொள்ள வேண்டுமென்றேற்பட்டது. இப்படியே [1] இதிஹாஸபுராணஜ்ஞர்கள் சொன்னார்கள். இனி தருமத்தையும் பரதத்வத்தையும் அறிவிக்குமதான அந்த சாஸ்திரந்தான் பதினான்குவிதம்; அதில பிரதானமானது, வேதம். இதின்பொருளை [2] இதிஹாஸபுராணங்களைக்கொண்டே நிச்சயிக்கவேண்டி யிருக்கிறது. இதிஹாஸபுராணங்களுக்குள் புராணங்களைக்காட்டிலும் இதிஹாஸமே சிரேஷ்டமென்று பிராமாணிகர்கள் கொண்டாடிவருகிறார்கள். ஆகவிதனால தருமத்தையும் பரதத்துவத்தையும் அறிவிக்குமதான வேதத்தினுட்பொருளை நிர்ணயிப்பதற்கு ஸ்ரீராமாயணமென்னு மிதிஹாஸம் எப்படிபிரமாணதமமாயிருக்கிறதோ அப்படியே ஸ்ரீபாரதமுமாகையால் ஸ்ரீமஹாபாரதம் நமக்குத் தஞ்சமென்றதாயிற்று.

## ஸ்ரீமஹாபாரதத்தில் ஸ்ரீஸஹஸ்ரநாமாத்தியாயம் சிறந்ததென்பது.

இந்த மஹாபாரதமோ! இதைப்பலரும் அங்கீகரித்திருக்கின்றமைகொண்டு இது சிறிதும் பழுதின்றி முழுதும் ஸத்யவசநமாயிருக்குமென்று நிர்ணயிக்கப்பட்டு இதிஹாஸமென்னு மேற்றமுடையதாய், புராணங்க

---

1. సత్యంసత్యంపునస్సత్యముద్ధృత్యభుజముచ్యతే । వేదశాస్త్రాత్పరంనాస్తి నదైవంకేశవాత్పరమ్.

2. ఇతిహాసపురాణాభ్యాం వేదంసముప బృంహయేత్ । బిభేత్యల్పశ్రుతాద్వేదో మామయంప్రతరిష్యతి.

[இம்மாதிரியாகவே ஆங்காங்கு சுருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணாதிகளிலிருந்து பாஷ்யத்தில் உதகரிக்கப்படும் பிரமாணங்களுக்கு பதிலாக மேலே நெம்பர் கொடுத்து, அதற்குத் தக்கபடி கீழே நெம்பருடன் அந்தப் பிரமாணங்களெழுதப்படுமென்றறிக]

ளுக்குள் [3]வாயுபுராணத்திலும் சைவபுராணத்திலும் [4]பவிஷ்யத்புராணத்திலும் [5]மாத்ஸ்யபுராணத்திலும், [6]ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலும் [7]மார்க்கண்டேய புராணத்திலும் கொண்டாடப்பட்டிருப்பதோடு [8]இதற்குள்ளாகவும் அனேகவிடங்களில் கொண்டாடப்பட்டிருக்கிறது. இப்படி ஸகல அங்கத்தோடுங்கூடிய சுருதி ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் முதலானவைகள் ஒன்றைப்போல் யாவும் ஏககண்டமாய்ச் சொல்லுகையாலும், இது [9]லவுகிக வைதிகங்களான ஸகல அர்த்தங்களையும் நிர்ணயிப்பதற் கென்றேற்பட்டு ஓரிடத்திலும் பக்ஷபாதமின்றி யிருக்கையாலும், இது புராணங்களைக் காட்டிலும் மிகவும் சிரேஷ்டமென்று புத்திசாலிகளாயிருப்பார்பலரும் அத்தியவஸித்தார்கள். அப்படிப்பட்ட இதில் இதனுடைய ஹிருதயஸ்தானமாயிருக்கின்ற சாந்திபருவத்தில் தானதர்மவிஷயமாய் ஸகலசாஸ்திரார்த்தங்களையும் நிஷ்கர்ஷித்துச் சொல்லும்பொழுது ஸஹஸ்ரநாமமென்கிற இவ்வத்தியாயம் ஸாரஸங்கிரஹமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இதுப் பிரமாணம் என்பதற்கு வேண்டும் உத்கிருஷ்டகாரணங்களும், தத்வார்த்தத்தைப் பிரகாசப்படுத்துவதே இதற்கு முக்கியமான அபிப்பிராய மென்பதற்கு வேண்டும் அடையாளங்களும உண்டாயிருக்கையால், இந்த ஸஹஸ்ரநாமாத்தியாயம் பிரமாணமோ அன்றோ என்பதுமுதலான ஸந்தேஹங்கள் உண்டாகக் கொஞ்சமும் இடமில்லை. மேலும் இது அத்தியந்தம் உத்கிருஷ்டமான அர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றமையால போகத்தையும் மோக்ஷத்தையுங் கோரியவர்கள் இதையே அவசியம் கைக்கொள்ளவேண்டுமென்றதாயிற்று.

---

3. మతిమన్థానమావిధ్య యేనాసౌ శ్రుతిసాగరాత్ । జగద్ధితాయ జనితో మహాభారతచన్ద్రమాః.

4. బిభేతిగహనాచ్ఛాస్త్రాన్నర స్త్రీవాదివాషధాత్ । భారతశ్శాస్త్రసారో యమతః కావ్యాత్మనాకృతః.

5. యస్య ద్వైపాయనః పుత్రస్స్వయం విష్ణురజాయత । ప్రకాశో జనితో యేన మహాభారతచన్ద్రమాః

6. కృష్ణద్వైపాయనం వ్యాసం విద్ధి నారాయణం ప్రభుమ్ । కోహ్యన్యో భువి మైత్రేయ మహాభారతకృద్భవేత్.

7. వ్యాసవాక్యజలౌఘేన కుధర్మతరుహారిణా । వేదశైలావతీర్ణేన నీరజస్కా మహీకృతా.

8. యో విద్యాచ్చతురో వేదాన్సాఙ్గోపనిషదాన్ద్విజః । నచాఖ్యానమిదం విద్యాన్నైవ స స్యాద్విచక్షణః.

9. యదిహాస్తి తదన్యత్ర యన్నేహాస్తి న తత్క్వచిత్.

ஸஹஸ்ரநாமாத்யாயத்தை ருஷிகள் பலரும் கொண்டாடினார்கள் என்பது.

இவ்விஷயம் மேலே "ఋషిభిః పరిగీతాని" என்பதை வியாக்கியானஞ் செய்யுமிடத்தில் உபபாதிக்கப்படும்.

ருஷிகள் பலருஞ்சொன்ன பகவந்நாமங்களைத்திரட்டி வேதவியாஸர் ஸ்தோத்திரரூபமாக இதைச் சேர்த்தாரென்பது.

மேலும் கிருஷ்ணத்வைபாயநரென்னும் ஸ்ரீவேதவியாஸபகவான் ரொம்பவும் ஆப்தர்; [அதாவது தத்வார்த்தத்தை உள்ளபடியே பிசகாமல் சொல்ல வல்லவரென்றபடி] அதெப்படியெனில் — அவர் ஸ்ரீமந்நாராயணனவதாரமாயிருப்பதனால் அவருக்கு ஞாநமும் ஐசுவரியமும் மற்றும் கல்யாணகுணங்களும் நிரதிசயமா யுண்டாயிருக்கின்றமையாலும், முன்னுக்குப் பின் விரோதமாய்ச் சொல்வது முதலான தோஷங்கள் அவர் சொல்லில் சிறிதும் நேரிடமாட்டாவாகையாலும், கலியின் மஹிமையால் ஞாநம் குறைந்திருக்கின்ற மனுஷ்யாளிடத்தில் விசேஷகிருபையினால் வேதங்களைப்பிரித்துச்சொன்னாராகையாலும், வேதத்தில் சொல்லப்படும் அர்த்தத்தை யறிவதிலும் அதை யநுட்டிப்பதிலும் ஸந்தேஹாதிகளுண்டானால் அதைத்தெளிவிக்கவேண்டுமென்று ஐந்தாம்வேதமான மஹாபாரதத்தைச்செய்தவராகையாலும், க்ஷத்திரியனான விசுவாமித்திரனைத்தனது வாய்ச்சொல்லாலே பிராம்மணனாகச்செய்த ஸ்ரீவஸிஷ்டபகவானுடைய கொட்பேரனாகையாலும், வஸிஷ்டரும் புலஸ்தியரும் தந்த வரபலத்தால் பரதேவதையை உள்ளபடி யறியவும் புராண ஸம்ஹிதைகள் செய்யவும் வல்லராய் லிங்காதி புராணங்களில் பிரஸித்தமாய்க் கொண்டாடப்பெற்ற ஸ்ரீபராசரபகவானுடைய திருக்குமாரராகையாலும், ஒப்பற்ற தபஸ் ஸமாதி விசேஷங்களுடையவராதல்கொண்டு ஸகலருஷிகளாலும் பூஜிக்கப்பெற்றவராகையாலும், இவர் யதார்த்தவாதியென்னத் தடையில்லை. இப்படி மஹாவைபவசாலியான இந்தவியாஸபகவான் தம்மைப்போன்ற ருஷிகள் பலருங்கொண்டாடின பகவந்நாமங்களைத் திரட்டி இந்தஸ்தோத்திர ரூபமாகச் சேர்த்தருளினார். இத்தைப்பற்றவும் இது அவசியம் ஆதரணீயமாகிறது.

ஸ்ரீஸஹஸ்ரநாமத்தை பீஷ்மாசாரியர் தம்முடைய முக்கியமதமாக உகந்திருக்கிறபடி சொல்லுகிறது.

மேலும், பீஷ்மாசாரியரும் இவரைப்போலவே மிகவும் விசுவஸிக்கத்தக்க பரமஆப்தர். எப்படியெனில்:—தருமபுத்திரருக்கு ராஜதருமங்களை உபதேசிக்கையில் [10]ஸ்ரீவியாஸபகவானும், ஸர்வேசுவரனான ஸாக்ஷாத்

10. శ్రోతుమిచ్ఛసి చేద్ధర్మా న్నిఖిలేన నరాధిప । ప్రైహి భీష్మం మహాబాహో వృద్ధం కురుపితామహమ్॥ స తే సర్వరహస్యేషు సంశయాన్మనసిస్థితాన్ । ఛేత్తా భాగీరథీపుత్రస్సర్వజ్ఞస్సర్వతత్త్వవిత్ ॥ సాక్షా

[11] ஸ்ரீகிருஷ்ணபகவானும், [12] ஸ்ரீநாரதபகவானும், இவர் அநேகம் பிரும்மவித்துக்களை ஸேவித்து தீர்க்கமான பிரம்மசரியத்தைப்பெற்று தபஸ் ஸமாதிகளால் ஸகலத்தையும் ஸாக்ஷாத்கரிக்கும்படியான பிரபாவம்பெற்றவரென்று விசேஷித்து இவரைக் கொண்டாடினார்கள். மேலும் ஸ்ரீகிருஷ்ணபகவான், பரதத்வத்தையும் தருமத்தையும் பிரவர்த்திப்பிக்கும்படி இவருக்கு வரம்பிரஸாதித்து நியமித்தருளுகையாலும், மாதாபிதாக்களுக்கு சிச்ருஷைசெய்து அவர்களால் வரம்பெற்றவராகையாலும், இவர் தாமும் பரமார்த்தத்தைத் தாம் உள்ளபடியே கண்டுகொண்டதாகப் [13] பிர

---

ద్దదర్శయోదేవా న్సర్వా ఞ్ఛక్ర పురోగమాన్ ॥ యస్యబ్రహ్మర్షయః పుణ్యాః నిత్యమాసన్సభాసదః । యస్యానావిదితంకిఞ్చి త్ జ్ఞానంజ్ఞేయేషువిద్యతే॥ సతేవక్ష్యతిధర్మజ్ఞో ధర్మాన్సూక్ష్మార్థతత్త్వవిత్ ॥

11. శరతల్పగతోభీష్మ శ్శామ్యన్నివహుతాశనః ॥ మాంధ్యాతి పురుషవ్యాఘ్ర స్తతోమేతద్గతంమనః ॥దివ్యాస్త్రాణి మహాతేజాయో ధారయతిబుద్ధిమాన్।సాఙ్గాంశ్చచతురోవేదాం స్తమస్మిమనసాగతః॥ సహిభూతంభవిష్యచ్చ భవచ్చ భరతర్షభ ।వేత్తిధర్మభృతాంశ్రేష్ఠ స్తతోమేతద్గతంమనః॥ తస్మిన్నస్తమితేభీష్మే కౌరవాణాంధురన్ధరే। జ్ఞానాన్యల్పీభవిష్యన్తి తస్మాత్త్వాంచోదయామ్యహమ్ యచ్చత్వంవక్ష్యసేభీష్మపాణ్డవాయానుపృచ్ఛతే ! వేదప్రలాపాఇవతేస్థాస్యన్తివసుధాతలె ॥ యద్ధిభూతంభవిష్యచ్చ భవచ్చభరతర్షభ । సర్వంతత్ జ్ఞానవృద్ధస్య తవపాణావివాహితమ్॥అహంచత్వాభిజానామిస్వయం పురుషసత్తమ॥ తపసాసిభవాఞ్ఛక్తస్స్రష్టుం లోకాంశ్చరాచరాన్॥ నతేగ్లానిర్నతేమూర్ఛా॥సత్త్వస్థంచమనోనిత్యంతవభీష్మభవిష్యతి। రజస్తమోభ్యామస్పృష్టంఘనైర్ముక్తఇవోడురాట్ ॥

12. కృత్స్నా ఞ్శాన్తివిధాన్ధర్మాం శ్చాతుర్వర్ణ్యస్య వేత్త్యయమ్॥ తచ్ఛీఘ్రమనుయుఙ్క్ష్వం సంశయాన్మనసిస్థితాన్॥

13. దాహమోహశ్రమాశ్చైవక్లమోగ్లాని స్తథారుజః । తవ ప్రసాదాద్గోవిన్ద సద్యోవ్యపగతానిమే ॥ యచ్చభూతంభవిష్యచ్చ భవచ్చపరమచ్యుత । తత్సర్వమనుపశ్యామి పాణౌఫలమివాహితమ్॥

கைப்பண்ணுகையாலும் இவர் அத்தியந்தம் ஆப்தரென்னக்குறையில்லை. இப்படிப்பட்ட பீஷ்மர், [14]இதுதான் தமக்கு மிகவும் ஸம்மதமான மதமென்று இதை அறுதியிட்டார். ஆதலாலும் இது அவசியம் ஆதரணீயமாகக் கடவது.

### ஸஹஸ்ரநாமாத்தியாயத்தை சாஸ்திரங்களும் பாலர்களும் ஊமையரு முள்பட யாவரும் பரிக்கிரஹித்திருக்கிறார்களென்பது

இந்த பகவந்நாம ஸஹஸ்ரமோ புவனத்திலெங்கும் பரிக்கிரஹிக்கப்பட்டிருக்கிறது. எங்ஙனேயென்னில்-சாஸ்திரங்களுக்குள்ளாக ஸபாபருவத்தில் எம்பெருமானுக்குக்கூட இந்த திருநாமஸம்பந்தத்தைக்கொண்டு ஏற்றஞ் [15]சொல்லப்பட்டது. ஸ்ரீவிஷ்ணுதருமத்தில் ஸ்ரீகஜேந்திரமோக்ஷத்தில் [16]சொலலப்பட்டிருக்கிறது. இதற்குள்ளாகவும் முகவுரையிலும் இதின் பலன் சொல்லுமிடத்திலும் பகவத்குணங்கள் விசேஷமாய்க்காணப்படுகின்றன. [என்றால் குணங்களைச்சொன்னபோதே தத்வாசகங்களான திருநாமங்களும்பல உண்டென்று சொன்னதாக வபிப்பிராயம்.] திருஷ்டாதிருஷ்டசாஸ்திரங்களான ஆயுர்வேதம் முதலியவைகளுக்குள் [17]சரக ஸம்ஹிதையிலும், ஆங்காங்குசிதறுண்டுபோய் இப்பொழுது கொஞ்சம்காணப்படும் [18]மேஹப்பிராயச்சித்தத்திலும், [19]குஷ்டப்பிராயச்சித்தத்திலும், [20]ஜ்வரவிசேஷப்பிராயச்சித்தத்திலும், [21]கிரஹாதிப் பிராயச்சித்தத்திலும்,

---

వేదోక్తాశ్చైవయేధర్మాః వేదాన్తనియతాశ్చయే । తాన్సర్వాన్సంప్రవక్ష్యామివరదానాత్తవాచ్యుత॥ — యువేవచాస్మి సంవృత్తస్త్వదనుధ్యానబృంహితః।వక్తుంశ్రేయస్సమగ్రో౽స్మిత్వత్ప్రసాదాజ్జనార్దన

14. (ఏషమేసర్వధర్మాణాం ధర్మో౽ధికతమోమతః)

15. దేవోనామసహస్రవాన్॥

16. సహస్రశుభ నామానమాదిదేవమజంవిభుమ్

17. విష్ణుంసహస్రమూర్ధానం చరాచరపతింవిభుమ్ । స్తువన్నామసహస్రేణ జ్వరాన్సర్వాన్వ్యపోహతి

18. జప్యంపురుషసూక్తకమ్ — — తత్రైవభగవన్నామసహస్రంభారతోదితమ్.

19. తత్రైవభగవన్నామసహస్రంపరికీర్తయేత్,

20. హోమాన్తుపూర్వవజ్జప్యం త్వష్టూర్నామసహస్రకమ్.

21. ఆసత్మతంమరుత్సూక్తం విష్ణోర్నామసహస్రకమ్.

சொல்லப்படுகின்றது. இன்னுமிப்படி பலவிடங்களிலும் கண்டுகொள்ளலாம். ஸாதாரணமானகவிகளும் இதை ஸர்வஜ்ஞரக்ஷையென்று வருணித்திருக்கிறார்கள். எங்ஙனேயென்னில்:— பட்டபாணன் ஸௌதிகாகிருஹ வருணனையில்[22]சொல்லியிருக்கிறான். லோகத்திலும் இந்த ஸஹஸ்ரநாமத்தைக கிரஹித்தும், தரித்தும். கேட்டும், ஜபித்தும் ஸங்கீர்த்தநஞ்செய்தும், எழுதியும், வியாக்கியாநஞ்செய்தும், இதில் நிஷ்டைபண்ணியும், இதைப் பூஜித்தும், மற்றும் அநேகவிதஙகளால், விஷம், பிசாசம், வியாதி, கிரஹம், துஸ் ஸ்வப்நம், துர் நிமித்தம் முதலான அமங்களங்களெல்லாம் சமிப்பதற்காகவும் மஹாபாதகாதிகள் நசிப்பதற்காகவும் இஹபரங்களில் போகம் ஸித்திப்பதற்காகவும் ஸம்ஸாரபந்தம் அவிழ்வதற்காகவும் வைஷ்ணவமான பரமபதம் ஸித்திப்பதற்காகவும், பரமபதம்கிடைத்த பின்பும் எம்பெருமானுடைய குணாம்ருதத்தைப்பாநஞ்செய்வதற்காகவும், இப்படி எல்லாவற்றிற்கும் ஒரேமருந்தாய், பாலன்முதற்கொண்டு ஊமையன், மூர்க்கன், ஸ்திரீகள், நாஸ்திகனுள்பட யாவராலும் அதிக சிரத்தை, பக்தி, விசுவாஸத்துடன் பரிக்கிரஹிக்கப்படுகின்றது; இதற்குண்டான பரிக்கிரஹாதிசயம் வேதத்திற்குக்கூட கிடையாது; ஏனெனில:—வேதத்தை மூர்க்கன்முதலானோர் பரிக்கிரஹிப்பதில்லையன்றோ? மேலும் அதற்குக் குலமென்றும், சரணமென்றும், கோத்திரமென்றும் நாநாவித வ்யவஸ்த்தைகள் ஏற்பட்டு, இதை யின்னான் கிரஹிக்கவேண்டியதென்று சாகைகள் தோறும் நிர்ப்பந்தமுண்டாயிருக்கின்றது. இதற்கு அங்ஙனம் ஒரு நிர்ப்பந்தமில்லை. இப்படி இதற்குப் பரிக்கிரஹம் அதிசயிததிருக்கையாலும் இதை அவசியம் கைக்கொள்ளவேண்டுமென்றாயிற்று.

ஸஹஸ்ரநாமம் கீதை நாராயணீயம் முதலானவைகளோடு

ஸமாநார்த்தகமா யிருக்கிறதென்பது.

பாரதத்தினது ஸித்தாந்தமாய் விளங்கும் பகவத்கீதை, நாராயணீயம், யாநம், ஸந்தி, அக்கிரபூஜை, உத்தமாநுசாஸநம் முதலியவிடங்களில் நிஷ்கர்ஷிககப்பட்ட தாத்பரியம்போல் இது அவைகளோடு ஒத்திருக்கையாலும் அத்தியந்தம் உபாதேயமாயிருக்கிறது.

இப்படி யிந்த ஆறுகாரணங்களாலும் மிகவும் ஆதரிக்கத்தக்கதென்று நிர்ணயிக்கப்பட்டு, வியாஸர், தேவச்சிரவஸ், தேவஸ்தாநர், நாரதர், வாத்ஸ்யாயநர், அச்மர், "ஸுமந்து என்றுவித்தியாசாரியர்களாய் பிரம்மவித்துக்களானதேவரிஷிகளும், பிரம்மருஷிகளும், நம்பூர்வீகருக்கெல்லாம் ஆசாரியனாய் கீதோபநிஷத்தை யருளிச்செய்த ஸர்வேசுவரனும் சுரோதாவாயிருந்து பீஷ்மரிடத்தில் கேட்டு ஸந்தோஷித்ததான இந்த ஸஹஸ்ரநாமாத்தியாயம், எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை நன்றாய் தெளிந்தறிவதற்காக வியாக்கியாநம் செய்யப்படுகின்றது.

---

22. అవిచ్ఛిన్నపఠ్యమాన నారాయణనామసహస్రమ్.

அவதாரிகை—முன்னம் பலவிடங்களிலும் பரதத்வவிஷயமானப் பிரதேசங்களில் ஸகலார்த்தங்களையும் நிர்ணயிக்கக்கேட்டு அதனால் திருப்தியடைந்தவர்போல் யாதொருப்பிரச்நமும் பண்ணாமல் மவுநமாயிருந்த ஜநமேஜயரைப்பார்த்து ஸ்ரீவைசம்பாயநர் தம்முடைய கிருபாதிசயத்தால், இவருக்கு மற்றும் சிலரஹஸ்யார்த்தங்களை யறிவிக்க வேண்டுமென்று நினைத்துத் தாமே சொல்லுகிறார்.

మూలం ॥ శ్రుత్వా ధర్మా నశేషేణ పావనానిచ సర్వశః ।
యుధిష్ఠిర శ్శాన్తనవం పునరేవాభ్యభాషత ॥

(பதவுரை.) ధర్మాన్ - தர்மங்களை, అశేషేణ - அவ்வளவையும், పావనానిచ - சுத்திகரங்களையும், సర్వశః - ஸர்வப் பிரகாரத்தாலும், శ్రుత్వా - கேட்டு, యుధిష్ఠిరః - தர்மபுத்திரர், శాన్తనవమ్ - பீஷ்மரை, పునరేవాభ్యభాషత - மறுபடியும் சொன்னார்.

வாரீர் ஜநமேஜயரே! ஸ்ருதிஸ்மிருதி முதலியவைகளில் ராஜதர்மமென்றும் மோக்ஷதர்மமென்றும் தாநதர்மமென்றும் பல்படியாகச்சொல்லப்படும (தர்மங்கள்) எவ்வளவுண்டோ (அவ்வளவையும்,) தபஸ் என்றும் தீர்த்தஸேவை என்றும் மற்றும் பல்படியாகச்சொல்லப்படும் (சுத்திகரங்களான) வியாபாரங்களையும், பலம், அங்கம், சொரூபம், அதிகாரம் என்று அவைகளுக்குண்டான (ஸர்வப்பிரகாரத்தாலும் கேட்டு தர்மபுத்திரரானவர்,) சந்தநுமஹாராஜனுக்குங் கங்காதேவிக்குங் குமாரராய்த் தோன்றி மஹாகுலீனராய் விளங்குகின்ற (பீஷ்மரைப்) பார்த்து. அவர் தமக்கு இதமாகக்கைப்பற்றின மதம் இன்னதென்று தெரிந்துக் கொள்வதற்காக (மறுபடியும் கேட்கிறார்.) (க)

శ్రీ రస్తు.

శ్రీకృష్ణాయ పరబ్రహ్మణే నమః

## அத்வைதபரமான

## ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யம்.

సచ్చిదానన్దరూపాయ కృష్ణాయాక్లిష్టకారిణే ।
నమో వేదాన్తవేద్యాయ గురవే బుద్ధిసాక్షిణే ॥

(அவதாரிகை.) ஸ்ரீவைசம்பாயனர் ஜநமேஜயருக்குச் சொல்லுகிறார்.

பாவநாநி- பாபக்ஷயகரங்களான தர்ம ரஹஸ்யங்களை.

வி. பா. [ஸத்புருஷர்கள் தம் ஆசாரியன் உகந்து அநுட்டிக்குமதையநுட்டிப்பார்களே யல்லது கேவலம் பிரமாணத்தையே விசுவஸிக்கமாட்டார்களாகையால் பீஷ்மருடைய ஆசாரத்தில விருப்பத்தாலே கேட்டாரென றுணாக.]

(அவதாரிகை.) பகுத்தறிவுள்ள புருஷன் பிரமாணத்தைக்கொண்டு பிரமேயத்தைபபகுத்தறிந்து அதில அநுகூலமானபிரமேயத்தை யாதரிக்குமென்று ஆதியிலதானே சொல்லப்பட்டதன்றே? அபபடிப்பட்ட பிரமேயம் உபாயமென்றும் உபேயமெனறும் இரண்டுவிதமாயிருக்கும். [உபாயமென்றால் யாதேனும் ஒருபலனைச்சாதிக்கும் ஸாதநம், உபேயமென்றால அந்தஸாதநத்தால ஸாதிக்கப்படும் பலனென்றறிக] அதில் உபேயமானது ப்ரியம ப்ரியதரம் ப்ரியதமம் என்று மூனறுவிதம். அப்படியே உபாயமும், ஹிதம் ஹிததரம் ஹிததமம் என்று மூன்றுவிதம். [இவ்வுபாயோபேயஙகளிரண்டுக்கும் குணதோஷங்க ளுண்டாயிருக்கையால, அக்குண தோஷங்களின் ஏறறக்குறைச்சலுக்குததக்கபடி தார தம்மியமுண்டாய் அதனால்முற்கூறிய மூனறு பிரிவுகளும் ஏர்ப்படுகின்றன.] அதில் உபேயத்துக்கு தோஷங்கள்:—ஜந்மம், விருத்தி, பரிணமம், அழிவு, முதலிய அசேதநத்துக்குரியதருமஙகளும, கிலேசமமுதலானவைகளும, குணங்களோ.—தோஷங்கலவாமல் எந்நாளுமிருக்கும்படியான ஞாநம், ஆனநதம், ஐசுவரியம் முதலியவைகளாம; உபாயத்துக்கு தோஷங்கள்:— வியயம், பிகுநத ஆயாஸம, உததேசித்த பலனை யுதவாமை, அற்பபல னுடைமை இவைகளாம்; குணங்களோ.—பலனைத்தபபாது கொடுக்கை, அபாயமிலலாமை, ரொமபவும லகுவாயிருககை, அதிக பலனைத்தருகை முதலியவை. இபபடிபபட்ட குணதோஷங்கள் ஏறக்குறைய விருப்பதனுல் தாரதம்மியமுண்டாகக்கூடுமன்றே? அதில உத்கருஷட்ட தமத்தைவிட நிக்ருஷ்ட்டங்கள் எப்படி த்யாஜ்யமோ, அப்படி உத்க்ருஷ்ட உதக்ருஷ்டதரஙகளும் தியாஜ்ஜியங்களாகவன்றே யிருக்கும். ஆகையால தருமபுததிராதமக்கு இஷ்டமாயும் அநிஷ்டமாயு மிருக்கிற நிக்ருஷ்டவிஷயஙகளைத தள்ளி, மிகவும் உத்க்ருஷ்டதமமான விஷயததைப பெறவேணடுமென்று நினைத்து, உபாயோபேயங்களை அவற்றின் தார தமமியததோடே நன்றாகக்கேட்டுத் தெளியவேண்டுமென்கிற தம்மபிபபிராயபபடி அதை ஆறுவிதமாகபபிரித்து இரண்டு சுலோகங்களாலே கேட்கிறார். அதில் உபாயமென்பது உபேயத்தைப்பற்றி வருமதொன்றாகையால், பிரதாநமான அந்த உபேயத்தை முதலில்கேட்பதாக உத்தேசித்து, அது தத்துவ சாஸதிரங்களில் பர தத்வமென்றும் பரமப் பிராப்பியமென்றும் இரண்டு விதமாய்க்

அ. பா. [அற்பபபிரயாஸமாயும், அதிகப்பலனைத்தருமதாயும், சுகமாய்ச் சம்பாதிக்கக் கூடியதாயும், ஸகலபுருஷார்த்தங்களையும் ஸாதிப்பதாயுமிருக்கிற உபாயம் இதுவரையில சொலலபபட வில்லையென்று மறுபடியுங்கேட்டாரென்றறிக.] (க)

మూ॥ కిమేకం దైవతంలోకే। కింవాప్యేకం పరాయణం॥

(ப-ரை.) లోకే-லோகத்தில், ఏకం-ஒப்பற்ற, దైవతం-தேவதை, కిం-எது? ఏకం-ஒப்பற்ற, పరాయణం-மேலான புருஷார்த்தம், కింవా-எது?

---

வி. பா. கூறப்படுகையால பரதத்துவமென்னுமதை முதலில பிரச்நம் பண்ணுகிறார்.]

பரதத்துவமென்னும் உபேயவிஷயமானப் பிரசநம்.

சுருதி ஸ்மிருதி முதலான (சாஸ்திரங்களில்) தனக்கு ஸமமாவது அதிகமாவது வேறொரு வஸ்துவில்லாமல் (தன்னைத்தனியதாய்) பிரகாசம் முதலான பரமேச்சுவர குணங்களெல்லாம பொருந்தி யிருப்பதாகச் சொல்லப்படும (தேவதை) இதுதானென்று நீர் மிகவும் ஸம்மதித்தது (எது)?

[சாஸ்திரங்களிலும்அவ்வோ மதங்களிலும். பரதத்வம் ஒன்றுண்டென்று ஒப்புக்கொண்ட ஆஸ்திகர்களும், அந்த பரதத்வம் மாயை முதலிய உபாதிவசத்தால் விகாரமடைந்து ஞாந சக்தியாதிகளை யடைந்திருக்கிறதென்றும், ஸ்வபாவமாகவே ஸகல ஐசுவரியமு முடையதென்றும், இப்படி பொதுவில் ஸம்சயப்படுவதோடு, விசேஷித்து ஹரி, ஹரன், அயன் என்கிற தத்வங்களுக்குண்டான உச்சநீச பாவத்திலும் ஸம்சயங்கொளளக் காண்கையாலே அவ்விஷயந் தெளிவதற்காக இந்தப் பிரச்நம்பண்ணினாரென்றறிக.]

(அவதாரிகை.) பலனைச்சொல்லுகிற சாஸ்திரங்களில் மோக்ஷவிஷயமாய் ஸந்தேகஙகள் பலவுண்டாகின்றன, அதாவது:— மோக்ஷமென்பது ஸ்வரூபாவித்தையால்வருங் குணவிசேஷங்கள் நசிப்பதுதானென்றும், பரமாத்மாவுக்கு ஸமானமான தருமத்தைப் பெறுகைதானென்றும, பரமாத்மாவின் குணங்கள் இவனைப்பற்றுவதுதா னென்றும், பரமாத்மாவினது சாம்ய ஜீவனுக்குண்டாவதுதானென்றும், ஆநந்தம் முதலான தனது ஸ்வரூபம் மாத்திரம் பிரகாசிப்பதுதா னென்றும், பரமாத்மாவின் ஸந்நிதியில் நித்தியகைங்கரியம் பண்ணும்படியான தன் தன்மையைப் பெறுகைதானென்றும் இன்னுமிப்படி பல்படியாக ஸந்தேஹ முண்டாயிருக்கையால் அவ்விஷயம் தெளியும்பொருட்டு பரமபுருஷார்த்தம் ஏதென்று பிரச்நம் பண்ணுகிறார்.

பரமப்ராப்யமென்னும் உபேயவிஷயப் பிரச்நம்.

ஸமாதிகரஹிதமாய், தனித்ததாய், நிர்த்தோஷ நிரதிசய மங்களஸ்வபாவமா யிருக்கையாலே உத்கிருஷ்டமாய் விளங்கும் புருஷார்த்தம எது?

---

அ பா. (லோகே இத்யாதி) லோகத்தில் பரமான கதி எது? என்றால்.—

స్తువన్తః కం కమర్చన్తః ప్రాప్నుయుర్మానవాః శుభమ్॥ (௨)

(ப-ரை.) మానవాః - மனிதர்கள், కం - எவனை, స్తువన్తః தோத்திரஞ்செய்யுமவர்களும, కం-எவனை, అర్చన్తః-அர்ச்சனைசெய்யுமவர்களுமாய் శుభం-சுபத்தை, ప్రాప్నుయుః- பெறுவார்கள். (௨)

---

வி பா. [ஐஹிகம் ஆமுஷ்மிகமென்கிற விரண்டிற்குள் மிகவும் மேலான புருஷார்த்தம் இதுதானென்று நிருகந்தமேது ? என்றபடி. இப்படி உபேயம் இரண்டுவிதமாய் கேட்கப்பட்டது.]

(அவதாரிகை.) இனி உபாயமானது, அந்தந்த சாஸ்திரங்களில் கர்மயோகமென்றும் ஞாநயோகமென்றும் பக்தியோகமென்றும் சொல்லப்பட்டு, அவைகள் தனித்தனியே உபாயமென்றும், சேர்ந்து உபாயமென்றும், அங்காங்கி பாவத்தாலே உபாயமென்றும், விவாதமுண்டாயிருக்கையால் அவ்விஷயமாகப் பிரச்நம் பண்ணவேண்டியது ஆவசியகமாயிருக்கிறது; அதுவோ ஸித்தமென்றும் ஸாத்தியமென்றும் ஸாலம்பநமென்றும் மூன்றுவகை; அதில் ஸித்தமான உபாயம் - ஆராதநத்தாலே பிரஸந்நமாய் பலனைத்தருகின்ற தேவதை; அந்ததேவதையை லகுவாயும் குருவாயுமுள்ள இரண்டுவித உபாயங்களாலே ஸாதிக்கவேண்டுகையாலே அதை யிரண்டுவிதமாகப் பிரித்துப் பிரசநம் பண்ணுகிறார்.

லகுவாயும் குருவாயுமுள்ள உபாயங்களால் ஸாதிக்கவேண்டிய

ஸித்தோபாய விஷயப் பிரச்நங்கள்.

மநுஷ்யர்கள் எந்த தேவனை குணஸங்கீர்த்தந மாத்திரத்தால் ஆராதித்துமெவனை உபாஸநரூபமான பக்தியால்பூஜித்தும, போகமோக்ஷங்களென்கிற இருவகைச்சுபத்தையும்பெறுவார்கள் ? (௨)

(அவதாரிகை.) வாக்கு, மநஸ், காயம், என்கிற த்ரிகரணங்களாலும் ஸித்திக்கும்படியான ஜபம், தியாநம், அர்ச்சனை முதலான தேவதா வசீகரண வியாபாரத்தை ஸாத்திய தர்மமென்கிறது; இதில் உத்தமம் எதென்று கேட்கிறார்.

---

அ பா. எதினுடைய ஆக்ஞையால் பிராணிகள் பிரவர்த்திக்கின்றனவோ, எதைக்கண்டமாத்திரத்தில் இருதயத்திலுள்ளமுடிச்சு அவிழ்ந்து, ஸகலஸம்சயங்களுமற்று, ஸகல கர்மங்களும நசிக்குமோ, எதையறிந்தமாத்திரத்தில் ஆநந்தரூபமான மோக்ஷம் ஸித்திக்குமோ, எதை யறிந்தவன் மற்றையாதொன்றுக்கும் பயப்படானோ, எதில் புகுந்தவனுக்கு மறுபிறவியில்லையோ, எதை யறிவதனால் அதுவேயாய் விடுகிறானோ, எதைவிட்டால் மனிதர்களுக்குவேறுகதியில்லையோ, அப்படிப்பட்டது எது என்றபடி.

మూ॥ కోధర్మస్సర్వధర్మాణాం భవతః పరమోమతః।
కిం జపన్ ముచ్యతే జన్తుర్జన్మసంసారబన్ధనాత్ ॥ (౩)

(ப - ரை.) సర్వధర్మాణాం-ஸகலதர்மங்களிலும், కః ధర్మః- எந்த தர்மம், భవతః-உமக்கு, పరమః-மேலாக, మతః-ஸம்மதிக்கப் பட்டது, జన్తుః - ஜன்மமெடுத்தவன், కిం జపన్ - எதைஜபித்தால், జన్మసంసారబన్ధనాత్-ஜன்மமென்றும் ஸம்ஸாரமென்றுஞ்சொல்லப் படும பந்தத்தினின்று, ముచ్యతే - விடுபடுகிறான். (௩)

---

ஸகலமான தாமங்களிலும தனக்கு ஸமமும உயாவுமின்றி மேலாய் விளங்கும தர்மம் எது நீர் ஸமமதித்தது?

(அவதாரிகை.) அநந்தரம ஸ்தோத்திரம், மந்திரம், சுபாச்ரயம் [அதாவது பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹம் முதலியன] கெந்தம், புஷ்பம் முதலிய உபகரணங்களைக்கொண்டு செய்யவேண்டிய ஸாலம்பநோபாயங்களில் வாசிகமான ஜபமென்னும் ஸாலம் பநோபாய விஷயமானப் பிரச்நம் பண்ணுகிறார்.

[ஜபமென்பது மந்திரம் முதலியவற்றைச் சில நியமங்களோடு ஆவர்த்திபண்ணுவது; ஸாலம்பநோபாயங்களில் காயிக மாநஸங்களான மற்றவிரண்டிலுங்காட்டில் வாசிகம் சிரேஷ்டமென்று [23]சாஸ்திரமாகையால் அதைப் பிரச்நம் பண்ணுகிறாரென்றறிக.]

பரம பதத்தை யடையவொட்டாமல் தடைசெய்கின்ற (ஜந்மம்), ஜரை. மரணம், கர்ப்பவாஸம், நரகவாஸம், யாதனை முதலிய ஸம்ஸாரத்தின் காரியவர்க்கமென்ன; அவித்தை, கர்மவாஸனை, ருசி முதலான ஸம்ஸாரத்தினது காரணவர்க்கமென்ன இவ்விரண்டையும், லோகத்தில் பிறவியெடுத்தவன் எதைஜபித்தால் கடப்பான அதாவது மோக்ஷத்தை யடைவன். (௩)

[இங்கே மோக்ஷத்தைச்சொன்னது மற்றபலன்களையுஞ் சொன்னபடி; எனெனில் - ஜபம்முதலியவை, ஸகல பலங்களையும் ஸாதிக்குமென்பதாக மேலேசொல்லப்படுகிறதன்றோ? இது நிற்க, கீழே "அவ்வளவையும்" "ஸர்வப்பிரகாரத்தாலும்" என்று தொடங்கி, "லோகத்தில்" "மனிதர்கள்" "சுபத்தை" என்றிப்படிசொல்லி யிருக்கையால்

---

[23]జప్యేనైవతు సంసిద్ధ్యేత్ బ్రాహ్మణో నాత్ర సంశయః। కుర్యాదన్యన్నవాకుర్యాత్ మైత్రో బ్రాహ్మణ ఉచ్యతే ॥ ద్రవ్యయజ్ఞాజ్జపోయజ్ఞో విశిష్టో దశభిర్గుణైః ॥ యజ్ఞానాం జపయజ్ఞోస్మి ॥

மூ॥ శ్రీభీష్మ ఉవాచ॥ జగత్ప్రభుం దేవదేవమనన్తం పురుషోత్తమం।
స్తువన్నామసహస్రేణ పురుషస్సతతోత్థితః॥ (௪)

(ப - ரை.) జగత్ప్రభుం-லோகஸ்வாமியாய், దేవదేవం-தேவர்களுக்குத் தேவனாய், అనన్తం-அளவிடப் போகாதவனான, పురుషోత్తమం-புருஷச் சிரேஷ்டனை, పురుషః-புருஷன், సతతోత్థితః - எப்பொழுதும் ஊக்கமுடையனாய், నామసహస్రేణ - நாமங்களாயிரத்தாலும், స్తువన్-தோத்திரஞ் செய்வதனால், సర్వదుఃఖాతిగః - ஸகல துக்கங்களையுங்கடந்தவனாக, భవేత్-ஆகுவனென்றுமேலோடன்வயம.)

---

வி பா. காலம், அதிகாரி, அங்கம் என்கிற இவற்றுள்ளும் உதகிருஷ்டமானவைகளைவையென்று கேட்டதாக ஸூசிதமாகிறது.]

(அவதாரிகை.) இந்த ஆறுகேள்விகளுக்கும் பதில் சொல்லுவதாக பீஷ்மர்சொல்லுகிறார். அதில் உபாயத்தைக்கொண்டு உபேயத்தையடைய வேண்டுகையாலே முதலில் உபாய விஷயமான கேள்விக்குப் பதில்சொல்லுவதாக உத்தேசித்தது, அதில் கடைசியிலகேட்ட ஜபாலம்பநப் பிரச்நம், ஸமீபித்திருக்கையாலும், தாமும் அதை மிகவிரும்பி யிருக்கையாலும் முதலில் அதற்குப் பதில்சொல்லுகிறார்.

ஐசுவரியத்தாலும பரிசர்யையாலும தேவர்களெப்படி மனிதர்களைக்காட்டிலும உயர்ந்தவரோ, அப்படி அந்த தேவர்களுக்கெல்லாம் தேவனாய், ஒருபடியாலும அளவிடவொண்ணாத வைபவசாலியாய் பரமோதாரனாய் விளங்குகின்ற ஜெகதீசனை அவனது ஆயிரந்திருநாமங்களையுஞ் சொல்லி சேதனன் இடைவிடாமல் ஊக்கத்தோடு ஸ்தோத்திரஞ்செய்து வந்தானாகில் ஸகலமான துன்பங்களையுங் கடந்தவனாவான். (௫)

[எம்பெருமானைத் தியானித்தாலும் தோத்திரஞ் செய்தாலும் அது இடைவீடின்றி நடக்குமாகில் அது ரொம்பவும் பிரியமாயும் ஹிதமாயுமிருக்குமென்றும், இடையில் கொஞ்சம் ஓயுமாகில் அது பரம துக்ககரமாயிருக்குமென்றும் [24]சுருதியிலும [25]ஸ்மிருதியிலும் சொல்லப்படுகிறதன்றோ?]

---

[24]యదా హ్యేవైష ఏతస్మిన్నదృశ్యేఽనాత్మ్యేఽనిరుక్తేఽనిలయనే అభయం ప్రతిష్ఠాం విన్దతే । అథ సోఽభయం గతో భవతి । యదా హ్యేవైష ఏతస్మిన్నుదరమన్తరం కురుతే । అథ తస్య భయం భవతి ॥

[25]యన్ముహూర్తం క్షణం వాపి వాసుదేవో న చిన్త్యతే । సా హానిస్తన్మహచ్ఛిద్రం

మూ॥ తమేవచార్చయన్నిత్యం భక్త్యా పురుషమవ్యయం।
ధ్యాయన్ స్తువన్ నమస్యంశ్చ యజమాన స్తమేవచ॥ (౫)

(ப-ரை.) అవ్యయం-அழிவற்ற, తం-அந்த, పురుషం ఏవ - புருஷனையே, నిత్యం - எப்பொழுதும். అర్చయన్ - அர்ச்சிக்குமவன், భక్త్యా-பக்தியோடு, ధ్యాయన్ - தியானித்தும், స్తువన్ - தோத்திரஞ் செய்தும், నమస్యన్-நமஸ்கரித்தும், యజమానః - பூஜித்தும் (ஸகலமான துன்பங்களையும் கடப்பான்.) (௫)

வி. பா. [இப்படி ஸாதநியோபாயங்களுள் ஜபமென்னும் ஸாலம்பநோபாயம் சொல்லப்பட்டதென்றறிக.]

அவதாரிகை. அர்ச்சனையும் ஸ்தோத்திரமுமே பரம தர்மமென்று இவருக்குத் தாத்பரியமாகையால், தர்மவிஷயமான ஐந்தாவதுப் பிரச்நத்தைத்தள்ளி, முதலில் அந்த அர்ச்சனை விஷயமாயும் ஸ்தோத்திர விஷயமாயுமிருக்கின்ற நான்காவது மூன்றாவதுப் பிரச்நங்களுக்கு உத்தரஞ் சொல்லுவாராய், அர்ச்சிப்பதற்கு ரொம்பவும் தகுந்தவன் எவனோ அவனையர்ச்சிக்கும் பிரகாரத்துடன் கூடச்சொல்லுகிறார்.

கீழ்ச்சொன்ன ஜபத்துக்கு எவன் விஷயமோ அவனேதான் அர்ச்சனைக்கும் தகுந்தவன்; இப்படியே [26]பிரமாணங்கள் சொல்லுகின்றன. ஆகையால் புண்டரீகாக்ஷனைய் எத்தனைகாலம் அநுபவித்தாலும் குறைவுபடாமல் தனக்கேற்றபடி வளர்கின்ற கல்யாணகுண பூர்ணனைப் விளங்குகின்ற அந்த பரம புருஷனை ; பக்தி நிஷ்டனானவன், அவன் [27]நியமித்திருக்கிறபடியே அவனுக்குப் பரிசர்யை செய்தாலல்லது க்ஷணமும் தரிக்கமாட்டாதவனாய் தனக்கு நாதனான அவனிடத்தில் விசேஷ பக்தியுடன்கூட, இடைவிடாமல் பெருகுகின்ற அமிருததாரைபோல் இனியதாயும்

---

సాంఖ్యా న్తిస్సాచ విక్రియా ఇతి ॥ పరంహుతవహ జ్వాలా పఞ్జరా న్తర్వ్యవస్థితిః ॥ నశౌరిచిన్తావిముఖజన సంవాస వైశసమ్ ఇతి ॥ ఏకస్మిన్నప్యతిక్రాన్తే ముహూర్తే ధ్యానవర్జితే । దస్యుభిర్ముషితేనేవ యుక్తమాక్రన్దితుంభృశమ్ ॥

[26]తమిమంసర్వసమ్పన్న మాచార్యంపితరం గురుమ్ । అర్చ్యమర్చితుమిచ్ఛామ స్సర్వేసమ్యక్సమర్థ ఇతి ॥ తస్మాత్పూజ్యతమం నాన్య మహంమన్యే జనార్దనాత్ ॥ బ్రహ్మాణంశితికణ్ఠఞ్చ యాశ్చాన్యా దేవతాః స్మృతాః । ప్రతిబుద్ధా నసేవన్తే యస్మాత్పరిమితంఫలమ్ ఇతి ॥ అన్తవత్తుఫలం తేషామ్ ॥

[27]మచ్చిత్తా మద్గతప్రాణాః ॥

தாபத்ரயத்தையும் நிச்சேஷமாய் போக்கடிப்பதாயு மிருக்கின்ற அவன் குணத்தியானத்தைச்செய்துகொண்டு அந்தத் தியானத்தாலுண்டான ஸந்தோஷாதி சயத்தால் சரீரத்தில மயிர்க்கூச்செழுந்து வாயில் சொல்லெழாமல் தொண்டையில் தடரும்படி அநதக் குணங்களையே ஸங்கீர்த்தநஞ்செய்து, பக்தி பரவசனாயிருக்கையாலேமமகாரங் கொலைந்து வணக்கமுற்றிருக்கும் அந்தஃகரண பஹிஃகரணங்களாலும், சரீரத்தாலும், வாக்கினாலும் "எனதென்றுயான் அபிமானித்தவைகளையெல்லாம் நீயுனதாககக்கொண்டருளவேண்டு" மென்று எம்பெருமானுடைய திருவடிகளில் அஹங்காரத்தாலே தூஷிதமான தன்னை ஸமர்ப்பித்து, தன்னை அவன்விஷயீகரித்த மஹோபகாரத்துக்குத்தக்கப் பிரத்யுபகார மொன்று மில்லாமையிலுண்டான பரபரப்போடும நிஜமான பக்தியோடும் ஸமபாதிக்கப்பட்டனவாய், அதிமநோஹரமான அர்க்கியம், புஷ்பம, மதுபர்க்கம் தொடக்கமாய் ஔபசாரிகமென்றும ஸாம்ஸ்பரிசிகமென்றும் ஆப்யவஹாரிக மெனறுஞ் சொல்லப்பட்டவைகளாய், அவன் போகத்துக் கேற்றவைகளாயிருக்கின்ற போகோப கரணஙகள்கொண்டு எம்பெருமானுக்கு அத்தியந்தம் ஆதரத்தோடு திருவாராதநம் ஸமர்ப்பித்து வந்தானாகில ஸகலதுரிதங்களினின்றும் விடுபடுவன். (௫)

[இந்த பக்தியோகமேதான் முக்தியையடைவிக்கின்ற ராஜமார்க்கமென்று வேதாந்தங்களில் சொல்வதாய்க் காணப்படுகிறது. எங்ஙனேயென்னில்:— பரம்பரயாய் உபகரிக்கினற வர்ணாச்சிரமா சாரங்களாலும், அதியந்தோபகாரிகளான சமதமாதி ஆத்மகுணங்களாலும் ஸித்திப்பதாய்; வேதநம், தியாநம, த்ருவாநு ஸ்மிருதி, முதலான சப்தபேதங்களாலே சொல்லப்படும் புத்தி பரம்பரைகளாலே இடைவிடாமல் எப்போதும் வெள்ளம்போல் பலதடவைகளில ஆவ்ருத்தி பண்ணப்பட்ட ஆதரத்துடன் கூடிய புத்தி விசேஷததாலுண்டாகும ஸம்ஸ்காராதி சயத்தால் ஏர்படுகின்ற விலக்ஷண ப்ரத்யக்ஷத்தை முடிவாயுடையதாய்; ஸத்வித்தை, ஆநந்தவித்தை, புருஷவித்தை, உபகோஸலவித்தை, முதலான பரவித்தைகளில் ஏர்ப்பட்ட குணோப ஸம்ஹார நியாயஸித்தமாயிருக்கின்றபிரம்மோபாஸநத்தை, ஸ்ரீபாதராயண பகவான், [28]பிரம்ம ஸூத்திரநியாயங்களைக்கொண்டு வேதாந்த [29]வாக்கியங்களைக்கடைந்து மோக்ஷஸாதநமாக நிர்ணயித்தார்.

---

[28] సర్వాపేక్షా చ యజ్ఞాదిశ్రుతేరశ్వవత్ ॥ శమదమాద్యుపేతస్స్యాత్ ॥ ఆవృత్తిరసకృదుపదేశాత్ ॥

[29] తమేవం విద్వాన్ ॥ బ్రహ్మవిదాప్నోతి పరమ్ ॥ యజ్ఞేన దానేన తపసాఽ

வாக்யகாரரும் அப்படியே [30]நிர்ணயித்தார். இந்த உபாஸநந்தான் பழுத்ததாகில் இதை பக்தியென்கிறார்கள்; அதுவேயல்லது வேறில்லை ஏனெனில்:—ஸம்யோகமென்னும் விதி இரண்டுக்கு மொத்திருக்கின்றது. [அதாவது உபாஸநத்தைப்போலே பக்திக்கும் மோக்ஷ தாயகத்வமுண்டென்பதனால் இரண்டுக்கும் ஒருபலத்தோடே ஸம்யோகம ஒத்திருக்கிறதென்றபடி] இதுவுந்தவிர? இப்படியே [31]சுருதியிலும்[32]பகவத்கீதையிலும், [33]ஆங்கிரஸ ஸ்மிருதியிலும் [34]வைஷ்ணவ தர்மத்திலும், [35]ஸ்ரீநாராயணீயத்திலும, [36]ஸ்ரீவாமநத்திலும் சொல்லப்படுகிறது. விதியுமிப்படியேயன்றோ 'உபாஸி' என்றும் 'பஜி' என்றுமிருக்கிறது. உபாஸனையென்றாலும் பஜனையென்றாலும், இரண்டும் ஸேவையேயன்றோ? ஆகையாலன்றோ நிகண்டுக்காரரும், ஸேவை, பக்தி உபாஸனை, என்கிற மூன்றையும் ஸமாநார்த்தகமாக [37]எடுத்தார்கள். லிங்கபுராணத்திலும் மார்க்கண்டேயபுராணத்திலும், இப்படியே [38]சொல்லுகின்றது. உபாஸிக்கப்படுகின்ற பகவான் ஸீதற்ற மஹாகுணங்கள்பொருந்தி யிருக்கையாலே இந்த உபாஸநம் அளவற்ற ப்ரீதி ரூபமாயும், அவன் ஒருகாரணத்தாலின்றி ஸ்வபாவமாகவே ஸர்வ ஸ்வாமியாயிருக்கையாலே அடிமையில் ருசியுள்ளதாயு மிருக்குமென்று விவேகிக்கப்பட்டு இது பக்தியென்று சொல்லலாயிற்று.

---

నాశకేన॥ శాన్తోదాన్తః॥

[30]వేదనముపాసనంస్యాత్తద్విషయే శ్రవణాత్ ॥

[31]నసన్దృశే తిష్ఠతి రూపమస్య నచక్షుషా పశ్యతి కశ్చనైనమ్ । హృదా మనీషా మనసాభిక్లృప్తో య ఏనం విదురమృతాస్తే భవన్తి ఇతి ॥ న సన్దృశే తిష్ఠతీత్యుపక్రమ్య భక్త్యా చ ధృత్యా చ సమాహితాత్మా జ్ఞానస్వరూపం పరిపశ్యతీహ ॥

[32]పురుషస్స పరః పార్థ భక్త్యా లభ్యస్త్వనన్యయా ॥ భక్త్యా త్వనన్యయా శక్యః ॥ భక్త్యా మామభిజానాతి ఇతి ॥

[33]భక్త్యా ఽవిచ్ఛిన్నయా ముక్తిః ॥

[34]పరమాత్మని గోవిన్దే భక్తిరవ్యభిచారిణీ । ప్రయచ్ఛతి నృణాం ముక్తిం మా తే భూదత్ర సంశయః ॥

[35]యే త్వాం దేవం ధ్రువం భక్తాః పురాణం పురుషోత్తమమ్ । ప్రాప్నువన్తి సదా కామానిహ లోకే పరత్ర చ । అమోఘాస్తే భవిష్యన్తి భక్తిమన్తశ్చ యే నరాః ॥

[36]యేషాం విష్ణుః ప్రియో నిత్యం యే విష్ణోస్సతతం ప్రియాః । న తే పునస్సమ్భవన్తి తద్భక్తాస్తత్పరాయణాః ॥

[37]సేవా భక్తిరుపాస్తిః ॥

[38]భజ ఇత్యేష ధాతుర్వై సేవాయాం పరికీర్తితః । తస్మాత్సేవా బుధైః ప్రోక్తా భక్తిశబ్దేన భూయసీ ॥

(வி.) இப்படி பிரியனுயிருக்கின்றமையை யறிவித்துக்கொண்டுதான் உபாஸந விதியில் [39]வசநங்கள் பலவாகப் பிரவர்த்தித்தன.

இந்த உபாஸநம், அடிமையில்தானே ருசியுள்ளதா யிருக்குமென்கைக்கு [40]வசநங்களும்பல. பக்திக்கு, திருநாம ஸங்கீர்த்தநாதிகள் சரீர ஸ்தாநமென்கைக்கும் [41]வசநங்கள் ஸ்பஷ்டமாயிருக்கின்றன.

இந்தபக்தியே ஸகல சாஸ்திரார்த்தங்களிலும் ஸாரமாயிருக்கையால் இது பரம ரஹஸ்யமென்று [42]சொல்லப்பட்டது.

(அவதாரிகை.) ஓ! இந்த பக்தியானது [43]சாஸ்திரத்திற்சொன்னபடியே அநேகமாயிரம் ஜன்மங்களால் ஸம்பாதித்த ஸுக்ருத பரிபாகத்தால் ஸகலபாபங்களையும் போக்கடித்தவர்களும், நெடுநாள் இடைவிடாமல் ஸேவித்தால்மாத்திரம் நிலைக்கும் படியானது; ஆகையால் சாஸ்திரத்திற்சொன்ன யாதொரு உபாயத்தையும் அநுட்டிக்க மாட்டாதப் பிராணிகளுக் கென்ன

---

[39] ప్రియోహిజ్ఞానినోత్యర్థమ్ ॥
భజతాంప్రీతిపూర్వకమ్ ఇతి ॥
తుష్యన్తిచరమన్తిచ ఇతి ॥
నాథయోనిసహస్రేషు ఇతి ॥
యాప్రీతిరవివేకానామ్ ఇతి ॥
తత్స్మృత్యాహ్లాదసంస్థితః ఇతి ॥
తన్నామ స్మరణోద్భూత పులకశ్చాసురపుఙ్గవ ఇతి ॥
సేవాభక్తిసమాఖ్యాతా జ్ఞానవాసనయాకృతా। ఉత్పన్నాయాం తతస్తస్యాం
స్నేహభావస్స్వయంభవేత్ ఇతి ॥
పరమాత్మనియోరక్తో విరక్తోఽపరమాత్మని। సర్వేషణావినిర్ముక్తస్సభైక్షంభోక్తుమర్హతి ఇతి ॥
సనోదేవశ్శుభయాస్మృత్యాసంయునక్తు ఇతి ॥

[40] మామనుస్మర ॥ పార్థానుచిన్తయ ॥ కృష్ణానుస్మరణంపరమ్ ॥

[41] సతతంకీర్తయన్తః ॥ మన్మనాభవ ॥

[42] ఇదన్తుతేగుహ్యతమమ్ ॥ యద్జ్ఞాత్వానేహభూయోన్యత్ ॥ సర్వగుహ్యతమం భూయః ఇతి ॥

[43] బహూనాంజన్మనామన్తేజ్ఞానవాన్మాంప్రపద్యతే ॥ వాసుదేవస్సర్వమితిసమహాత్మాసుదుర్లభః ॥ నరాణాంక్షీణపాపానాం కృష్ణేభక్తిఃప్రజాయతే ।
జన్మాన్తరసహస్రేషు ॥ తపోధ్యానసమాధిభిః

3

అనాదినిధనం విష్ణుం సర్వలోక మహేశ్వరమ్ ।
లోకాధ్యక్షం స్తువన్నిత్యం సర్వదుఃఖాతిగో భవేత్ ॥ ౬
బ్రహ్మణ్యం సర్వధర్మజ్ఞం లోకానాం కీర్తివర్ధనమ్ ।

(ப-ரை.) అనాదినిధనం - ஆதியந்த மற்றவனாய், - విష్ణుం வியாபித்திருக்குமவனாய், సర్వలోకమహేశ్వరం - ஸகலலோகஈச்வரனாய், లోకాధ్యక్షం - லோகாத்தியக்ஷனாய், బ్రహ్మణ్యం வேதப் பிரதிபாத்தியனாய், సర్వధర్మజ్ఞం - ஸகலதாமங்களுமறிந்தவனாய், లోకానాం - ஜநங்களுக்கு, కీర్తివర్ధనం - கீர்த்தியை விருத்திபண்ணுமவ

(வி.) கதி என்கிற பயத்தைப் போக்குவதற்காக லகுவான உபாயத்தைக் காட்டாநின்றுகொண்டு மூன்முவது கேள்விக்குப் பதில் சொல்லுகிருர் "தமேவ" என்று தொடங்கி "ஸர்வபூதபவோத்பவம்" என்றுமளவாக.

[ஸர்வப்பிரகாரத்தாலும் புருஷோத்தமனே ஸ்தோத்திரார்ஹனென்கிற அபிப்பிராயத்தால், இதர தேவதைகளைவிட இவனுக்குண்டான பேதங்களை இதில் காட்டுகிருரென்றுணர்க.]

உபாய சூன்னியருக்குத் தியாகம் முதலான
லகூபாயத்தைக் காட்டுகிறது.

(ஆதியந்த மில்லாமையாலே) காலோபாதி ரஹிதனாய், எங்கும் வியாபித்தவனுகையாலே தேசோபாதிரஹிதனாய், (ஸர்வலோகங்களுக்கும் மஹேச்வரனுகையாலே) ஸ்தோத்திரஞ் செய்பவனுடைய மநோரதத்தைப் பூர்த்திபண்ணும் படியான ஐசுவரியமுடையனாய், (லோகத்தைப் பிரத்தியக்ஷமாய்க் காண்பவனுகையாலே) ஸ்தோதாவிற்கு உசித மின்னதென்பதைத் தானகவேசிந்திப்பவனாய், (அநந்த சாகைகளுடன்கூடிய வேதங்களால் பிரதிபாதிக்கப்படு மவனுகையாலே) ஸ்தோத்திரம் பண்ணுவதற்கு வேண்டும் விஷயங்களுள்ளவனாய், (ஸகலதாமங்களையு மறிந்தவனுகையால்) தன்னைத்துதிப்பது பரமதர்மமென் றறிபவனாய், [44]சாஸ்திரத்திற் சொல்லியபடி எந்தப் பிராணியானலும் தன்னைத் தோத்திரஞ்செய்தால் அதைத் தன்னைப்போலவே வேதங்களிலும் லோகங்களிலும் புகழும்படி அதற்குக் கீர்த்தியுண்டு பண்ணுமவனாய், (ஸர்வலோகநாதனுகையாலே) ஸ்தோத்திரம் முதலியஸகல பரிசரணைக்கும்தகுந்தவனாய், [45]உத்யோகபர்வத்தில சொல்லுகிறபடி (சிரத்தி

[44] యం స్తువన్ స్తవ్యతామేతి ॥

[45] అన్యత్పూర్ణా దపాం కుమ్భా దన్యత్పాదావనేజనాత్ । అన్యత్కుశల సంప్రశ్నాన్న చేచ్ఛతి జనార్దనః ॥

లోకనాథంమహద్భూతం సర్వభూతభవోద్భవమ్॥ (౭)
ఏషమేసర్వధర్మాణాం ధర్మోఽధికతమోమతః।

னாய், లోకనాథం - லோகஸ்வாமியாய், మహద్భూతం - பெரியதத்வமாய், సర్వభూతభవోద్భవం - ஸகலப்பிராணிகளுடைய ஸத்தைக்கும் காரணமாயிருக்கின்ற, తమేవ - அவனையே, నిత్యం - எப்போதும், స్తువన్ - ஸ்தோத்திரஞ்செய்தால், సర్వదుఃఖాతిగః - ஸகலதுன்பங்களையும் கடந்தவனாக, భవేత్ - ஆகுவன். (எ)

(ப-ரை.) ఏషః - இது, మే-எனக்கு, సర్వధర్మాణాం - ஸகலதருமங்களிலும், అధికతమః - மிகவுமசிரேஷ்டமான, ధర్మః - தர்மமாக, మతః - எண்ணப்பட்டது; యత్-ஏதென்றால், భక్త్యా -

வி. சயமானமஹத்வமுடையனாய்ப்பெரியனாகையாலே)யாதொரு வருத்தமு மின்றி கேவலம் ஸ்தோத்திரமாத்திரததாலே மனமுவக்குமவனாய், அசேதனங்கள்போ லாய்விடாமல் தங்களுக்குண்டான அறிவுக்குப் பிரயோஜநமாய் அவனைச்சிந்திக்கும (ஸகல சேதநாக்கும ஸத்தையையுண்டுபண்ணு மவனாகையாலே) அப்படிப்பட்டவர்களை அவசியம அநுகிரஹிப்பவனாய், விளங்குகின்ற பரமபுருஷனை பரிபூர்ண பக்தியில்லாமற போனபோதிலும் ஆனபடியே யாகிலும் குணஸங்கீர்த்தநஞ் செய்பவன்; தாபத்திரயமென்னும காட்டுத்தீயைக் கடந்து நிரதிசயாநந்த சீதளமான நீராழிபோல விளங்குகின்ற வெம்பெருமானையடைந்துவாழ்வான்.

[இங்கே "ஸ்துவந்" என்பதற்கு ஆனபடியாகிலும் ஸ்தோத்திரஞ் செய்பவனென்று வியாக்கியாநஞ் செய்வதேயுக்தம். ஏனெனில்.—இதற்கு முன்பு ஒருதடவை 'ஸ்துவந்'என்று தியாநம் முதலானவைகளுடன் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கையால் அதைப்பெரியஸ்தோத்திரமாகவும், இதையற்பமாகவும் கொள்ளவேண்டும்; அல்லாதபோது புநருக்தமாகும். மேலும், "ஸ்துவந்தஃகம" என்றுதனித்தப் பிரச்நமாயிருக்கையாலும் மற்றும் அநேகசாஸ்திராந்தரங்களோ டொத்திருக்கையாலும் இது யுக்தமாகிறது.]

(அவதாரிகை) ஐந்தாவது பிரச்நத்திற்கு பதில்சொல்லுகிறார்.

ஸ்மரித்தல், கீர்த்தித்தல், பிரணமஞ்செய்தல் இவறறைவிடப் பரிசர்யை ஏற்றமுடைய தென்கிறது.

அ. * 'ஸர்வபூதபவோத்பவம்' ஸகலப் ... ஸாரத்துக்குக் காரணமானவனை,

యద్భక్త్యా పుండరీకాక్షం స్తవైరర్చేన్నరస్సదా ॥౮.

பக்தியுடன், పుండరీకాక్షమ్ - புண்டரீகாக்ஷனை, నరః - நரன், స్తవైః - ஸ்தோத்திரங்களால, సదా - எப்போதும், అర్చేత్ - ஆர்ச்சிக்கக்கடவன். (அ)

---

(வி.) இதைத்தான் நான் ஸகலதர்மங்களிலும் சீரியதாக மதித்திருக்கிறேன்.

[காமங்கள்தான்-ஐஹிகமான புத்திரன், பசு, அன்னம் முதலியவைகளைச் சாதிப்பவையென்றும், ஆமுஷ்மிகமான ஸ்வர்க்காதிகளைச் சாதிப்பவையென்றும், பலத்தில் ஸங்கமின்றிக்கே எம்பெருமானுடைய ஆராதநரூபமென்கிற நினைவுடனே யநுட்டிக்கப்படும் இஷ்டாபூர்த்தாதி கர்மங்களாலே பரிஷ்கரிக்கப்பட்ட தத்வக்ஞான ஸமாதிரூபமாய்க்கொண்டு மோக்ஷத்தைச் சாதிக்குமவையென்றும், பிரீதியோடு எம்பெருமானை நினைப்பது, அவன் குணங்களைக் கீர்த்தநஞ்செய்வது, தன்னுடன் ஸமர்ப்பிப்பது முதலாய், அவனுக் கேகாந்தமானவடிமை செய்வதென்றும் நான்குவகை. அந்நான்கினுள் முதல் மூன்றைவிட இதற்கு மிகுந்தவேற்றஞ்சொன்னதென்று கண்டுகொள்வது.]

அவதாரிகை அதையே உபபாதிக்கிறார்மேல்.

அதாவது-நரனானவன் பக்தியுடன்புண்டரீகாக்ஷனை எப்போதுமஸ்தோத்திரங்களாலே அர்ச்சிக்கக் கடவன் என்பதாம். (அ)

[இங்கு 'பக்தியுடன்' என்றது அநுஷ்டாந ஸமயத்திலும் பிரீதியை யுட்கொண்டிருக்கையாலே சுகமாய் அநுட்டிக்கலாயிருக்குமென்கைக்காக. இப்படியே 46கீதையில் சொல்லப்பட்டது. மேலும் அத்யந்தம் பிரியனான நாயகனை ஸ்மரிப்பது நாயகிக்குப் பிரியமாகவேயன்றோ விருக்கும்? இதனால் அஸ்வாமிகளான தேவதாந்தரங்களைச் சேவிப்பது, கஷாயபானம் போல் விரஸமா யிருந்ததேயாகிலும் அதை ஹிதமென்கிற புத்தியோடே அநுட்டிக்க வேண்டுமென்கிற வருத்தமிதற்குச்சிறிதும்இல்லையென்கிறது.

'புண்டரீகாக்ஷனை' என்றதனால் ஸேவிக்கப்படுமவன் அழகாயிருக்கிறானகையாலே, விகாரமாய் பயங்கரமான தேவதாந்தரஸேவையைவிட இந்தஸேவைக்கு ஏற்றம் சொல்லப்பட்டது.

'ஸ்தோத்திரங்களால்' என்றதனால் ஸ்தோத்திரமென்பது வாக்குமாத்திரத்தாலே ஸாதிக்கலாமாகையாலே, விச்வஜித், சாந்திராயணம் முதலானவைகளைப்போல் இதற்குத் திரவ்யச்சிலவும் அதிக ஆயாஸமும் வேண்டுவதில்லை யென்கிறது, இப்படியே 47வியாஸபகவான் அருளிச்செய்தார்.

---

46 సుసుఖంకర్తుమ్ ।

47 ఘోరేషుచవ్యాధిషు వర్తమానాః । సజ్కీర్త్య

(வி.) ஸ்ரீவிஷ்ணு[48]புராணத்திலும், [49]வைஷ்ணவதர்மத்திலும், இன்னும் [50]ஸ்தலாந்தரத்திலும், [51]வைஷ்ணவஸூக்தத்திலும் இப்படியேசொல்லுகிறது.

அர்ச்சிக்கக் கடவன், என்றதனாலே— ப்ரத்யக்ஷத்தில் ஒருபுருஷ விசேஷத்தை ஆராதநம் பண்ணுகிற பாவனையாயிருக்கையாலே, கேவலம் பரோக்ஷமாய் வருத்தமாயிருக்கமாட்டா தென்றுமதையறிவிக்கிறார். இப்படியே [52]கீதையில் அருளிச்செய்தான்.

'நரன்' என்கையாலே ஸகலசேதநர்களுக்கும் அவரவர் யோக்யதைக்குத் தக்கபடி அர்ச்சனையில் அதிகாரமுண்டென்று தோற்றுவிக்கிறார்.

'நரன்' என்று ஒருவனைச்சொல்லுகையாலே மஹாயாகாதிகளைப் போல் பலரிருந்து செய்யவேண்டு மென்கிற ஸஹாயாபேக்ஷையில்லை யென்கிறது.

ஜன்மம், விருத்தி, குணங்கள், இவைகளால் நிந்திக்கும்படியானவனுக்கும் பக்தியென்னும் அபிருசிமாத்திர மிருக்குமாகில எம்பெருமானை நிர்ப்பயமாய்ஸேவிக்கக்கூடுமன்றோ? அப்படி ஸேவிப்பதனால், உடனேகங்காப்பிரவாஹத்தால் ஸகலகல்மஷங்களும ஒழிந்துபோவதுபோல், விஷயப் பிராவண்யங்கொலைந்து பரமதார்மிகனாகிறான். இப்படியே [53]கீதையில் குணஜந்ம விருத்தங்களால் குறைந்தவனும் பக்திபண்ணினானகில் சிறந்தவனே யென்றருளினான். ஆனால், இப்படி சொன்னேனென்று தார

---

[48] అవశేనాపియన్నామ్ని ॥

[49] అజ్ఞానతో జ్ఞానతో వా వాసుదేవస్యకీర్తనాత్ । తత్సర్వంవిలయంయాతి తోయస్థంలవణంయథా ॥

[50] శమాయాలంజలంవహ్నేస్తమసోభాస్కరోదయః । శాన్తిఃకలేరఘౌఘస్య నామసఙ్కీర్తనంహరేః ॥ యన్నామసఙ్కీర్తనతోపి ముచ్యతే ॥ యన్నామసఙ్కీర్తనతోమహాభయాత్ విమోక్షమాప్నోతి ॥ సకృదుచ్చరితంయేన హరిరిత్యక్షరద్వయమ్ । బద్ధఃపరికరస్తేనమోక్షాయగమనంప్రతి ॥ యస్యనామ్నిస్మృతేమర్త్యస్సముత్క్రాన్తేరనన్తరమ్ । ప్రాప్నోతివైష్ణవంస్థానం పునరావృత్తివర్జితమ్ ॥ అచ్యుతానన్తగోవిన్దనామోచ్చారణభేషజాత్ । నశ్యన్తిసకలారోగాః సత్యంసత్యంవదామ్యహమ్ ॥ సఙ్కీర్తయేజ్జగన్నాథం వేదంవాపిసమీరయేత్ ॥

[51] ఆస్యజానన్తోనామచి ద్వివక్తన-ధు)వాసోఅస్యకీరయోజనాసః ॥

[52] ప్రత్యక్షావగమం ॥

[53] సమోహంసర్వభూతేషు ॥ అపిచేత్సుదురాచారః ॥ మాం—
యేపిస్యుః పాపయోనయః ॥

(வி) சாரங்கள்கூட தர்மமாகட்டுமென்று நினைக்கவொண்ணுது, அது எம்பெருமானுக்கு அநிஷ்டமென்று [54]வசநங்கள் கோஷிக்கின்றன; ஆனதுபற்றி ஸ்ரீகீதையில அவ்வர்த்தஞ்சொன்ன வுடனே, 'தன்னிடத்தில் பக்திபண்ணுமவன் துராசாரனுயிருந்தால் அவன்சீக்கிரத்தில் தாமிகனுவா'னென்று [55]அருளிச்செய்தான். பக்திக்கு இன்னுன் அதிகாரியென்றுமது [56]ஸூத்திரங்களில் நிர்ணயிக்கப்பட்டுளது. மேலும் புருஷன் எந்ததசையிலிருந்தாலும், மாதாவைப்போல் அத்தியந்தம் வாத்ஸல்யமுடையனுய், ஸர்வபந்துவாய், விளங்கும் பரமஸௌஹ்ருத்தான பகவானைப் பெயர்சொல்லிக் கூப்பிடுவது யுக்தமேயன்றே! அதுவுமின்றி இவ்விஷயம் கஜேந்திராழ்வான், ஜடாயு, காகாஸுரன், இராவணுநுஜன், கோஸலதேசங்களில் பிரஜைகள், இடைப்பெண்கள், மாலாகாரர் முதலானவரளிடங்களில்கண்டுமிருக்கிறேம். ஆனல் உத்தர மீமாம்ஸையில அபசூத்திராதிகரணத்தில் பிரம்ம க்ஷத்ரிய வைச்யர்களென்கிற திரைவர்ணிகரையொழிய மற்றவருக்கு, அதிகாரமில்லை யென்று நிஷேதிக்கப்பட்டதே யென்றல் அங்கும் பகவத்ஸமாச்சிரயணத்தை நிஷேதிக்கவில்லை ; மற்றப்படி அவர்களுக்கு உபநிஷத்திற்சொன்ன ஸம்ஸ்காரமில்லாமையாலே வேதாந்தங்களா லறியவேண்டிய பரவித்தையை ஸம்பாதித்தும் காரியகரமாக மாட்டாதாகையால் அதிகாரமில்லையென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது. ஆகையால் அவர்களுக்கு உபநிஷத்தில் சொன்னப் பிரம்மவித்தையென்கிற மஹாபதத்தில் அதிகாரமில்லையேயன்றி பகவத்பஜநத்துக்கு யாதொரு தடையுமின்று. மேலும், இதிஹாஸ புராணுதிகளில் சண்டாளாதிகளுக்குக்கூட பகவத் பஜநத்தில் அதிகாரஞ்சொல்லப்பட்டது. [57]வைஷ்ணவதர்மத்தில் - 'அவனை வெகுமதிக்கத் தக்கதென்றும் அவனுக்கு மோக்ஷப்பிராப்தியுண்டென்பதாகவும்' சொல்லுகிற வசநங்களுங் கண்டுகொள்ளலாம். இப்படி இவ்விஷயம் வியவஸ்தை பண்ணப்பட்டதாகையால் சாஸ்திரம் கொஞ்சமும் விரோதிக்கமாட்டாது.

இங்கே 'எப்பொழுது' மென்கையாலே இன்னகாலத்தி லென்றுவது இன்னவிடத்தி லென்றுவது இதற்கு நிர்ப்பந்தமில்லை யென்கிறது. இதனுல் அயநம், ருது, மாஸம், பக்ஷம், நக்ஷத்திரம், முகூர்த்தம்என்று காலவிசேஷத்தையும், இன்னவிடமென்று தேசத்தையும் அபேக்ஷிக்கிற மற்ற வியாபாரங்களைக்காட்டிலும் இதற்கேற்றஞ் சொன்னபடி ; இவ்விஷயத்தி

---

[54]నావిరతో దుశ్చరితాన్నాశాన్తో నాసమాహితః ॥ అప్రాప్యః కేశవో రాజన్ని న్ద్రియైరజితైర్నృణామ్ ॥

[55]క్షిప్రం భవతి ధర్మాత్మా ॥

[56]శమదమాద్యుపేతస్స్యాత్ ఇతి ॥ అన్తరా చాపి తు తద్దృష్టేః ॥

మద్భక్తశ్శ్రద్ధయాన్వితః । తస్యాత్మ యోగ్యేలోకః

வி. லும் பிரமாணங்கள்பலவுண்டு. ஆசாரஹீநனைப்பஜித்தானென்று இவன் ஸம்ஸர்க்கத்தால எம்பெருமானுக்கு ஒருகுறையாவது, இவனுடையசத்தி முதலிய ஸஹாயம் குறைந்ததென்று அநுக்கிரஹிப்பதில் அஸாமர்த்திய மாவது வருமதன்றே! மற்றபடி தன் ஸம்பந்தத்துக்குத் தகாதவனாயினும் அவனைபபரிசுத்தனுக்கித் தனக்கு தக்கவனுகச்செய்து ஆள்கொள்ளுமவ னன்றே! ஆகையாலன்றே 'அவனைப்பாடுவதில் அசத்தியில்லை' யெனபது முதலான [58]வசநம் பிரவர்த்தித்தது.

ஆனல் ஸத்என்றும் அஸத்என்றும் அதிகாரிகளில் தாரதம்ய மெதற் காக ஏற்பட்டதெனில—உச்சமாயும் நீசமாயுமிருக்கும் அதிகாரிகளுக்கு பரஸ்பரம் சோக்கையுண்டாய் அதனுல் தர்மம் முழுகிப்போ மாகையால் அதைக்காப்பதற்காக.

ஸங்கீர்த்தநம் முதலானது, அல்பஸ்வரூபமா யிருந்ததேயாகிலும் பல ன் பெரியதாகவேயிருக்கும். இபபடியே [59]கீதையில் சொல்லப்பட்டது. மற்ற தர்மங்களைப்போல இதை ஆரம்பித்து இடையில் விடுவதனுல் கேடு மில்லை; இதற்கும [60]கீதையிலதானே வசநமிருக்கிறது. முறைப்படி யநு ட்டிக்கத் தவறுதலாலாவது,ப்ரபல விரோதத்தாலாவது இதற்குப் பிரத்ய வாயமில்லை; [61]இதற்கும் வசநமுண்டு. இவ்வசநங்களெல்லாம் அர்த்தவாத மாயிருக்கலாமோவென்று சங்கிக்கவேண்டாம். இது அதிவாதமாகிலன் றே சங்கிப்பது! மேலும் அர்த்தவாத பதங்களுக்குக்கூடப் பிரபலப் பிர மாணத்தோடு விரோதமில்லாதபோது,ஸ்வயம் பிரமாணமான அவற்றிற்கு அர்த்தமில்லையென்று சொல்வது, ஸாஹஸமும், அநியாயமுமேயாம்.

ஆனல் மிகவும் பெரியதாய் செய்தற்கரியதாய் தபஸ்என்றும், ஸமாதி யென்றுஞ் சொல்லப்படுகின்ற மஹாதர்மங்களால் ஸாதிக்கவேண்டிய தத்வ ஞானத்தை, கேவலம்வாக்கினுல்மாத்திரம் ஸாதிப்பதாகச்சொல்வது அதி வாதமன்றே! அதனுல் பெரியஸாதநங்களை யுபதேசிக்கும் சாஸ்திரங்கள் நி ஷ்ப்ரயோஜநமென்பதாய் முடிவதோடு பிரமாணுந்தரங்களோடும விரோதி யாதோவென்றொரு கேள்வி பிறக்கலாம், இது பகவத்பிரபாவ மறியாதவர் சொலலும் பேச்சாகையால் ஆதரிக்கத் தக்கதன்று. ஏனெனில்:— பக வத் ஸங்கீர்த்தநம் கேவலம் சிறியதே யாயினும் சுமக்கக்கூடாத சுமையை

---

[58] చక్రాయుధస్యనామాని సదాసర్వత్రకీర్తయేత్ । నాశౌచంకీర్తనేతస్యపవిత్రంభగవాన్హరిః ॥ ప్రాతర్దివేతికృష్ణేతి గోవిన్దేతిచజల్పతామ్।మధ్యాహ్నేచాపరాహ్ణేచయోవసాదస్స ఉచ్యతామ్ ॥

[59] స్వల్పమప్యస్యధర్మస్య త్రాయతేమహతోభయాత్ ॥

[60] నేహాభిక్రమనాశోస్తి ॥ నమేభక్తఃప్రణశ్యతి ॥ యంప్రణమ్యనసీదతి ॥ నవాసుదేవం ప్రణిపత్యసీదతి ॥ జనార్దనం ప్రణిపతితోనసీదతి ॥

[61] ప్రత్యవాయోనవిద్యతే ॥ బద్ధఃపరికరస్తేన మోక్షాయగమనంప్రతి ॥

[యోగో యోగవిదాం నేతా ప్రధానపురుషేశ్వరః]

యోగః - அடைவிக்குமவன், యోగవిదాం - யோகவித்துக்களை, నేతా - நடத்துமவன், ప్రధానపురుషేశ్వరః - பிரதாநத்திற்கும் புருஷனுக்கும் நியாமகன்,

---

(வி.) நியாயத்திற்கும் அதுவே விஷயமென்னும் பக்ஷத்தில், இனிமோக்ஷமென்பது இந்த சாரீரகசாஸ்திரத்திற்சொல்லவில்லையென்பதாய்முடியும்.]

(அவதாரிகை.) இப்படி முக்தர்களுக்குப் பிராப்யம் எவனோ அவனே தான்முக்திக்கு நிருபாதிகமான உபாயமுமென்கிறது மேல:—

யோகஃ—உபாயமானவன். என்றால் ஸாயுஜ்யபதவியை அடைவிப்பதற்கு இவன் சிறிதும அபேக்ஷயின்றி உபாயமாய் நிற்குமென்றபடி இதற்குப்பிரமாணம 135காண்க.

யோகவிதாம=இப்படி தன்னை யுபாயமாகப் பற்றுமல் கர்மக்ஞாநாதிகளை (உபாயமாகப்பற்றினவாகளுக்கும்) நேதா — பலங்கைக்கெட்டுமளவுங்கொண்டு நடத்துமவன்;) இதறகுப பிரமாணங்காண்க. 136இதையே உபபாதிக்கிறது மேல்:—ப்ரதாநபுருஷேச்வரஃ=பந்தத்துக்குக் காரணமானப் பிரகிருதியையும் அதனால் பந்தத்திலகப்பட்டிருக்கும் ஜீவகோடிகளையும ஸகலவிதத்தாலும்ஆளுமவன். இதற்குப் பிரமாணம் 137காண்க.

[இப்படியே யன்றோ ஈச்வரன் தனது மாயையினால் அபராதம்பண்ணவர்களை ஸம்ஸாரபந்தத்தில் கட்டுப்படுத்தியும், தன் திருவடியிணையைச்சேர்ந்தோரை அந்த ஸம்ஸாரத்தினின்று விடுவித்தும விளையாடுகிறனென்று சுருதி 138ஸ்மிருதிகளில் சொல்லுகின்றன.]

---

(அ.) யோகஃ=யோகத்தால் அடையத்தக்கவன்; யோகவிதாம்நேதா=ஞானிகளின் யோகக்ஷேமத்தைத்தான் வஹிப்பவன். ப்ரதாந புருஷ ஈச்வரஃ=மாயை ஜீவன் இவைகளுக்கீசன்;

---

135ఏష హ్యేవానందయాతి ॥ తద్ధేతువ్యపదేశాచ్చ ॥ అహంత్వాసర్వపాపేభ్యో మోక్షయిష్యామి ॥

136తేషామేవానుకమ్పార్థమ్ ॥ తేషామహంసముద్ధర్తా ॥

137సంయుక్తమేతత్క్షరమక్షరఞ్చ వ్యక్తావ్యక్తంభరతే విశ్వమీశః । అనీశశ్చాత్మా బధ్యతే భోక్తృభావాత్ జ్ఞాత్వాదేవమ్ముచ్యతే సర్వపాశైః ॥ ప్రధానక్షేత్రజ్ఞపతిర్గుణేశః ॥ క్షరాత్మానావీశతే దేవఏకః ॥

138ఈశ్వరస్సర్వభూతానామ్ ॥ దైవీ హ్యేషాగుణమయీ ॥ దైవీ దేవస్యక్రీడతః ॥ క్రీడనకమ్ ॥ సంసారమోక్షస్థితిబంధహేతుః ॥

[నారసింహవపుశ్శ్రీమాన్ కేశవః పురుషోత్తమః ॥]

నారసింహవపుః-நரஸிங்கமேனியன், శ్రీమాన్-அழகுடையவன், కేశవః-சிறந்தகுழலுடையவன், పురుషోత్తమః-புருஷரிற்காட்டில்சிறந்தவன்

(வி.) (அவதாரிகை.) தன்னிடத்தில் பக்திபண்ணுமவர்களுக்கு நேரிடும்பிரதிபந்தகங்களைப்போக்குமவனென்கிறதுமேல்.

நாரஸிம்மவபுः—பக்தனான ப்ரஹ்லாதாழ்வானுடைய பயத்தைப் போக்குவதற்காக அவன் அபேக்ஷித்தக்ஷணத்தில நரஸிங்கமென்கிற திவ்வியமான திருமேனியைத் தரித்தவன்.

ஸ்ரீமாந்— இப்படி ஒன்றுக்கொன்று சேராச் சேர்த்தியாயிருக்கின்ற நரரூபமும ஸிங்கரூபமும கலந்ததிருமேனி பெடுக்கச செய்தேயும், ஸௌந்தரியம் லாவண்யம் முதலானவைகளால் அதிமநோஹரமாய விளங்குமவன். அப்பொழுது நரங்கலந்த ஸிங்கமான அவ்வுருவம சேர்ந்திருக்கிற அழகைக கண்டவாகள் பிறகு சுத்த ஸிம்மத்தையாவது சுததநரனையாவது கண்டால இதென்ன விகாரமென்னும்படி அவ்வளவு ஸுந்தரமாய் விளங்கினனென்றறிக.

(அவதாரிகை.) இப்படிப்பட்ட ஸவுந்தரியாதிகளுக்குத் தகுந்த லக்ஷணமிதென்கிறதுமேல்:—

கேசவः— மிகவுங் கொண்டாடும்படி சுருசுகென்று நீலநிறத்தோடு அழகாய் விளங்குமபடியான குடிலகுந்தளங்கள் பொருந்தியவன்.

(அவதாரிகை.) பகவானுக்கு லோகத்தில் காணப்படும் லக்ஷணமுண்டாயிருப்பதாகச் சொல்லவே ஸாதாரணமாய் நினைக்கும்படி யிருக்குமென்று அவனை லோகவிலக்ஷணனென்கிறதுமேல்;—

புருஷோத்தமः—புருஷர்களெல்லாரையுங்காட்டில் ரொம்பவும் உத்க்ருஷ்டன்.

[இங்கே 'புருஷ' என்கிறதனால் அறிவுடைமையைச்சொல்லுகிறபடியால் அறிவிழந்த அசேதநத்தைக்காட்டிலும் பகவானுக்கு சிறப்புச்சொல்லி, 'உத' என்று ஏற்றஞ் சொல்லுகையாலே அறிவுடையரானசேதநரைக்காட்டிலும்பகவானுக்கு ஏற்றஞ்சொல்லி, 'தம' என்கிறவிகுதியின்ஸாமர்

(அ.) ஸ்ரீமாந்—நித்தியமாய் லக்ஷ்மீவாஸஞ் செய்யும்படியான மார்பையுடையவன். கேசவः—கः அः ஈசः ச ஏதே வசேவர்த்ததே என்றுதிரிமூர்த்திகளும் வசமாயிருக்கபபெற்றவன். அதவா—கः ஈசः—பிரமனும் சிவனும்; இவர்கள் வசமாயிருக்கப்பெற்றவனெனறுமாம். கேசியைவதம் பண்ணதனல் கேசவனென்றுமாம்.

[సర్వశ్శర్వః]

సర్వః- எங்கும் செல்பவன், శర్వః-ஹிம்ஸிப்பவன்.

(வி) த்தியத்தால கிடைத்த 'தர' என்னும் விக்ருதியால் முக்தாத்மாக்களைககாட்டிலும் ஏற்றஞ்சொல்லி, 'தம' என்பதனால் நித்தியர்களைவிட ஏற்றஞ்சொல்லிற்று. ஆதலால் ஸர்வோத்க்ருஷ்டனென்றதாயிற்றென்றறிக.]

இவ்வர்த்தம் மிகவும் மேலான ரஹஸ்யமென்று பகவான் கீதையில் "த்வாவிமௌபுருஷௌ" என்கிறவிடத்தில் அருளிச்செய்தார். இவ்விஷயமாய் 139பிரமாணங்கள் வெகுசாய்க்காணலாம். இந்தபுருஷோத்தமசப்தத்தாலும்; போக்தாவான சேதநனும், போக்கியமான பிரகிருதியும், ப்ரேரேபிக்குமவனான ஈசுவ்ரனுமாகிய மூன்று தத்வங்களும் ஒன்றுக்கொன்று பேதப்பட்டவை யென்பதாய் ஸ்பஷ்டமாய் விளங்குகிறது. இதனால பிரம்மமே விகாரப்படுகிறது என்கிறபக்ஷம் நிரஸிக்கப்பட்டதென்றுணர்க.

பிரம்மம் விகாரப்படுகிறதென்றும், பிரம்மந்தான் அஜ்ஞாநமாறும் ஸம்ஸாரத்தையடைகிறதென்றும், ஈச்வரனாய் விளங்குகிற ஸ்ரீமந்நாராயணனைக்காட்டிலும் யாதொரு தன்மையுமின்றிக்கே மற்றொரு பிரம்மம் இருக்கிறதென்றும், அவ்யக்தமும், அதில் நின்றும் விடுபட்ட முக்தரும் ஈச்வரனும் பிரம்மத்தில் லயித்து அங்கிருந்து முண்டாகின்றார்களென்றும் இப்படியெல்லாம் ஒப்புக்கொள்ளும் பக்ஷங்கள் இந்த புருஷோத்தமத்வத்தோடும் ஸகலமான வேதாந்த ஸித்தாந்தங்களோடும் விரோதிக்கும்.

(அவதாரிகை.) இப்படி ஒன்றையும் அபேக்ஷிக்காமல் லோகவிலக்ஷணனாயிருக்கிற தன் இருப்புக்குத்தக்கபடி உபேக்ஷயாயிராமல் ஸகலத்தையும் சரீரம்போல் அபிமானித்திருக்கிறானென்கிறதுமேல்:—

ஸர்வ:=ஸர்வத்திலும் வியாபித்திருப்பவன்.

[இந்த வியாப்தியைக் கொண்டுதான் பகவானை ஸர்வஸ்வரூபனாகச் சொல்லுகிறது. இதற்கு வசநம் 140.]

ஶர்வ:=(ச்ருணாதி) நாசஞ்செய்யுமவன். அதாவது தனக்குச் சரீரபூதங்களான பிராணிகளினது அனிஷ்டங்களை நாசஞ்செய்பவனென்றபடி.

---

(அ.) சர்வ:=ஸகலப்ரஜைகளையும் ஸம்ஹரிப்பவன்.

---

139 ద్వావిమౌపురుషౌలోకే ॥ భూమిరాపోఽనలోవాయుః॥ యోమామజమనాదిఞ్చ ॥ అవికారాయశుద్ధాయ ॥ పరఃపరాణాంపరమః ॥

140 అసతశ్చసతశ్చైవసర్వస్య ప్రభవాప్యయః। సర్వస్యచసదాజ్ఞానాత్ సర్వమేనంప్రచక్షతే ॥ యేనసర్వమిదంప్రోతమ్ ॥ సవైసర్వమిదమ్ ॥ సర్వంసమాప్నోషితతోఽసిసర్వః ॥

[శివః స్థాణుర్భూతాది]

శివః-மங்களகரன், స్థాణుః-நிலைநின்றவன், భూతాదిః-பிராணி

(வி.) சிவ:— அநேகருக்குமேல் சுபத்தையும் உண்டுபண்ணுகிறானென்கிறது. இதற்குப் பிரமாணம் [141] காண்க.

ஸ்தாணு:— அதில் நிலைநின்றவன். அதாவது அநுக்கிரஹிப்பதில் நிலைநின்றவனென்றபடி.

[பகவத்ஸம்பந்தமானது, பிராயச்சித்தம் முதலான ஸாமாந்ய தர்மம் போலாவது; காசீ, கிஸா, தர்சபூர்ணமாஸாதிகளைப்போலாவது. இதர தேவதைகளைப்போலாவது ஆசைப்பட்ட பொருளதுவோ அதொன்றைமாத்திரங் கொடுத்துவிட்டு அவ்வளவு மாத்திரத்தில் தன்கடன்தீர்ந்துவிட்டதாக நீள்வதில்லை; பிரபலமான விக்கினங்களால் தடைபடுவதும் இல்லை; அழிந்துபோவதுமில்லை. அபஹரிக்கப்படுவதுமில்லை மற்றப்படி ஸகலமான அசுபத்தையும் போக்கடித்து ஸகல அபீஷ்டத்தையும் ஸகல விததாலுங்கொடுத்து அப்பொழுதும் ஓய்வுறாமல் சாச்வதமாய் விளங்காநிற்கும். இவ்விஷயத்தில் பிரமாணங்காண்க [112].

(அவதாரிகை.) மேலும் மிகவும் இனியனாயிருக்கையாலே ஸகலபூதங்களாலும் கொள்ளப்படுகிறானென்கிறது மேல்:—

பூதாதி:— பூதங்களால் கிரஹிக்கப்படுமவன் இதற்குப் பிரமாணம் [143] பிருஹதாரண்யகம் முதலியன.

(அ.) சிவ:— குணத்ரயசூன்யனாய் சுத்தனாயிருக்கையாலே மங்களஸ்வரூபன் 'ஸபரம்மாஸசிவ:' என்று ப்ரம்மசிவாதிகளை விஷ்ணுவோடே அபேதமாகச் சொல்லுகையாலே சிவாதிநாமங்களைக்கொண்டு ஹரியையே ஸ்தோத்திரம்பண்ணுகிறது,

பூதாதி:— காரணமாகையாலே பூதங்களுக்கு ஆதியானவன்.

[141] శాశ్వతంశివమచ్యుతమ్॥ స్మృతే సకలకల్యాణభాజనమ్ ॥ మంగళంభగవాన్ విష్ణుః ॥ మంగళాయతనంహరిః ॥ మంగళానాంచమంగళమ్॥ మంగళ్యంమంగళంవిష్ణుమ్॥

[112] ఏకోబహూనాంయోవిదధాతికామాన్ ॥ ఏతద్ధ్యేవాక్షరంజ్ఞాత్వా యోయదిచ్ఛతి తస్యతత్ ॥ తస్మిన్ప్రసన్నేకిమిహాస్త్యలభ్యమ్ ॥ సకలఫలప్రదోహివిష్ణుః ॥ రత్నపర్వతమారుహ్య యథారత్నంనరోమునే। సత్త్వానురూపమాదత్తే తథాకృష్ణాన్మనోరథాన్ ॥ ధర్మంమనోరథంస్వర్గం స్వర్గిణావవ్యయాత్పదమ్।ప్రాప్నో త్యారాధితేవిష్ణౌ ముక్తిమప్యతిదుర్లభామ్ ॥ యద్దుర్లభంయదప్రాప్యంమనసోయదగోచరమ్ । తదప్యప్రార్థితంధ్యాతో దదాతిమధుసూదనః ॥

[113] కింప్రజయాకరిష్యామో యేషాం నోయమాత్మా ॥ ఏతేవయంసర్వసమృద్ధకామా యేషామయంనోభవితా ప్రశాస్తా ॥

[నిధిరవ్యయః సంభవో భావనో భర్తా ప్రభవః]

களால் அடையப்படுமவன், అవ్యయః నిధిః-அழிவற்ற நிதியாயிருப்பவன், సంభవః-எங்கும் அவதரிப்பவன், భావనః-உஜ்ஜீவிக்கச் செய்பவன், భర్తా-போஷிக்குமவன், ప్రభవః-உயர்ந்தபிறவியுற

(வி.) (அவதாரிகை.) ஆனதுபற்றியே மஹத்தான ஆசையோடு அருமைச் செல்வமாய் பத்திரம் பண்ணப்படுகிறு னென்கிறதுமேல.

அவ்யய: நிதி:=ஸர்வதா ஸகலவிதத்தாலும அநுபவித்தாலும் ஒரு கலைகூடக் குறையாமலிருக்கின்ற நிதிபோல விளங்குமவன். இப்படி [144] சாந்தோக்யத்தில் சொல்லுகிறது.

ஸம்பவ:=ஆங்காங்கு ஸர்வதேசங்களிலும ஸர்வகாலங்களிலும ஸகல அவஸ்தைகளிலும் மத்ஸ்ய கூர்ம வராஹ நரசிம்ம வாமந ராமகிருஷ்ணாதி ரூபங்கள் ஒவ்வொன்றையும பலதடவைகளி லெடுத்து அடிக்கடி ஆவிர்பவிக்குமவன். இதற்குச்சுருதி [145]

(அவதாரிகை.) இப்படி, தான் பத்ரமாய் நிதிபோல வைக்கப்பட்டிருக்கச செய்தேயும் தன்னை யிரந்தோராக தானனுகவேணுமென்கிற த்வரையாலே தோன்றித்தன்னைப்பிரகாசிப்பிக்கிறு னென்கிறதுமேல்:—

பாவந:=எப்புறத்திலும தோன்றுமவன்.

(அவதாரிகை.) இப்படி அவதரித்து அநிஷ்ட நிவாரணாதிகளாலே ஸாதுக்களை உஜ்ஜீவிப்பிக்கிறு னென்கிறதுமேல்.

பாவந:=காக்குமவன்; இப்படியேகீதையில் [146] சொல்லுகிறது.

(அவதாரிகை) மேலும் அவர்களுக்குத் தன்னைக்கொடுத்து வளர்க்கிறுனென்கிறதுமேல்.

பர்த்தா=வளர்ப்பவன்.

(அவதாரிகை.) இப்படி யவன் அவதரிப்பது அவனுக்கு மேன்மை யென்கிறதுமேல்:—

ப்ரபவ:=உத்கிருஷ்ட ஜன்ம முடையவன்.

[இவன் ஜந்மத்திற்கு உத்கர்ஷமாவது-தோஷமென்கிற கெந்தமுமில்லாமலிருக்கையும், இதையறிந்தமாத்திரத்தில் விலங்குபோல் வலியவான

(அ.) நிதி:=பிரளயகாலத்தில் ஸகலமும் இவனிடத்தில் வைக்கப்படுகிற தாகையாலே நிதியென்கிறது பர்த்தா=பிரபஞ்சத்தைத்தரிப்பவன்.

ப்ரபவ:=மஹாபூதங்களை மிகுதியும் உண்டாக்குமவன்.

[144] తద్యథాహిరణ్యనిధిన్నిహితమ్ ॥

[145] బహుధావిజాయతే ॥ బహూని మేవ్యతీతాని । యదాయదాహిధర్మస్య ॥

[146] పరిత్రాణాయసాధూనామ్ ॥

[ప్రభురీశ్వరః॥ స్వయంభూ ]

றவன், ప్రభుః-ஸமர்த்தன், ఈశ్వరః-ஐசுவரியமுடையவன், స్వయంభూః தானுய்ப் பிறப்பவன்.

(வி.) ஸகல ஜந்மங்களும் நிர்மூலமாய்ப் போகுகையுமென்றறிக. இப்படியே [147]புருஷஸூக்தம் முதலியன.

(அவதாரிகை) இப்படி சொல்லத்தரமல்லாத பாரதந்திரியத்தோடிருக்கின்ற மனுஷ்யாதிகளைபபோல் பிறந்தாலுகிலும்:—

ப்ரபுஃ=ஸமர்த்தன. அதாவது அவ்வோ பிறவியிலும் பிரம்மேந்திராதிகளுக்கு அதிதுர்லபமான போகத்தையும் மோக்ஷத்தையுங் கொடுக்கவல்லவ னென்றபடி. இந்தவிருத்தாந்தம் சிசுபாலன் சிந்தயந்தி முதலானவர்களுககு ஸாயுஜ்யம்தந்ததில் ஸ்பஷ்டமாயிருக்கும.

(அவதாரிகை) பரமபதத்தில் பரமேஷ்டியா யிருப்பதைப் பார்க்கிலும் அவதரிப்பதில் தனது ஐசுவரியம் அதிகமாய்ப் பயன்படுகையாலே:—

ஈச்வரஃ=(அவதாரத்திலும்) ஐச்வரிய முடையவன்.

[இதற்குக் கீதையில வசநம் காணலாம். [148]]

(அவதாரிகை.) இவ்வளவு வைபவமும் எதினுல் வந்தது? என்றல்:—

ஸ்வயம்பூஃ=தானுயப்பிறப்பவன்.

[என்றல், லீலைமுதலிய தன் பிரயோஜநத்துக்காகத் தனது இச்சையால் தனக்கே அஸாதாரணமான பரமஸத்வ மயமானப் பிரகிருதியை தேவதிர்யங் மனுஷ்யாதி ஸஜாதீயமாய்ப் பண்ணிக்கொண்டு தானுகவே அவதரிக்கிறபடியால், பிரம்மாதிகளைப்போல் மற்றொரீசனுக்குஆட்படாமையாலே இவ்வளவு வைபவமும் வந்ததென்றபடி. இதற்குப பிரமாணம் [149]சுருதியிலும் [150]ஹரிவம்சாதிகளிலுங்காண்க.]

(அ.) ஸ்வயம்பூஃ=தானுய் உண்டானவன்; ஸகலத்திற்கும் மேலாய் விளங்குமவனென்றுமாம், அல்லது பரமேச்வரன்.

[147]అజాయమానః ॥ తస్యధీరాః పరిజానన్తి యోనిమ్ ॥ నైవకర్మత్వమూపేదేన యోన్యామవసత్ప్రభుః । ఆత్మన స్తేజసాకృష్ణస్సర్వేషాంకురుతేగతిమ్ ॥ అప్రమేయ మనాద్యన్తం కామాజ్ఞాతమజన్ప్రభుః । పాణ్డవ స్తర్కయామాసకర్మభిర్దైవసమ్మితైః ।

[148]మానుషీం తనుమాశ్రితమ్ । పరంభావమజానంతః ॥ భూతానామీశ్వరోపి సన్ ॥

[149]స్వయమ్భూర్బ్రహ్మపరమంతపీనామ్ ॥ ప్రకృతింస్వామధిష్ఠాయ సమ్భవామి

[150]బ్రహ్మతేజోమయందివ్యమాశ్చర్యం దృష్టవానసి । అహంసభరతశ్రేష్ఠమత్తేజస్తత్సనాతనమ్ । ప్రకృతిస్సామమపరా వ్యక్తావ్యక్తాచభారత । తాంప్రవిశ్యభవన్తీహ ముక్తాభరతసత్తమ ॥

[శ్శంభురాదిత్యః పుష్కరాక్షో మహాస్వనః ।]

శంభుః ஸுகத்தை யுண்டுபண்ணுமவன், ఆదిత్యః - சூரியமண்டலவாஸி, పుష్కరాక్షః - தாமரைக்கண்ணன், మహాస్వనః - பெரியசப்த

(வி.) (அவதாரிகை.) இப்படி யவதரித்து, தனது ஸவுந்தரியம் சீலம் முதலிய குணங்களைக் காட்டுவதால் சுகத்தைத்தருகிறு னென்கிறது:—

சம்புః—சுகத்தைப் பிறப்பிக்குமவன். இதற்குப்பிரமாணம [151]

(அவதாரிகை.) அநந்தரம் இவ்வவதாரங்களுக்கெல்லாம் உதாஹரணமாக ஆதித்ய மண்டலவாஸியான புருஷனைச் சொல்லுகிறது:—

ஆதித்யః—சூரியமண்டலத்தி லிருப்பவன்.

[இப்படி பகவான்சூரியமண்டலத்திலிருப்பதாகப்பிரம்ம மீமாம்ஸையில் [152]சொல்லப்பட்டது? இன்னும் சாந்தோக்யம் முதலான விடங்களிலுங்காண்க.]

(அவதாரிகை.) ஸௌர்யமண்டல வர்த்தியான பகவானைத் தியானிக்க வேண்டுமென்பதாகச்சொல்லி, அவனுக்குத் தாமரை மலர்போன்ற திருக்கண்களுண்டென்பதாய் [153]சுருதியிலோதப்பட்டது. ஸர்வேச்வர லக்ஷணமான அவ்வர்த்தத்தைச் சொல்லுகிறதுமேல்:—

புஷ்கராக்ஷః—தாமரைக்கண்ணன.

(அவதாரிகை.) அவனுக்கே மற்றொரு லக்ஷணமுஞ்சொல்லுகிறது.

மஹாஸ்வனః—பெரும்சப்தமுடையவன்.

[என்றால் [154] சுருதியிற் சொல்லுகிறபடி 'உத்' என்கிற திருநாமமுடையவனென்றபடி; மேலும் சூரியமண்டலவர்த்தியான பகவானுடைய

(அ.) ஆதித்யః—ஸௌர்யமண்டலத்தி லிருக்கும், ஸுவர்ணமயமான புருஷன்; அல்லது அதிதியென்று அகண்டமான பூமியாய் அந்தபூமிக்குப் பதியென்கிறது; அல்லது. எப்படி ஆதித்யன் ஒருவனே அனேக ஜலபாத்திரங்களில் அனேகமாகப் பிரதிபலிக்கிறுனே அப்படியே பகவானும் அனேக சரீரங்களில் ஒருவனே அனேகமாகப் பிரகாசிக்கிறுனென்று ஆதித்யனென்கிறது.

[151] విశాలాక్షం విశ్వశంభువమ్ ॥ రూపౌదార్యగుణైః పుంసాం దృష్టిచిత్తాపహారిణమ్ ॥ చన్ద్రకాన్తాననం రామమతీవ ప్రియదర్శనమ్ ॥

[152] అన్తస్తద్ధర్మోపదేశాత్ ॥ య ఏషోఽన్తరాదిత్యే హిరణ్మయః పురుషో దృశ్యతే ॥ స యశ్చాయం పురుషే - యశ్చాసావాదిత్యే - స ఏకః ॥ ధ్యేయస్సదా సవితృమణ్డలమధ్యవర్తీ ॥

[153] తస్య యథా కప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ ॥

[154] తస్యోదితి నామ ॥

[అనాదినిధనో]

முடையவன், అనాదినిధనః - ஆதியந்த மற்றவன்,

(வி.) நாமமும் ரூபமும் [155] சுருதியிலோதப்படுகையாலே வேதமெனகிற பூஜ்யமான சப்தமுடையவனென்றுமாம். அன்றியும் ஸாவித்ரி சப்தசதுக்குப் பொருளாயிருக்கையாலே பூஜ்யதமனென்றுமாம். ஆனதுபற்றியே மோக்ஷதர்மத்தில் [156] சொல்லுகிறது.]

(அவதாரிகை.) இப்படி திவ்யமான நாமரூபங்களுடனே சாச்வதமாய் விளங்குகிறுனென்கிறதுமேல்:—

அநாதி நிதநः—ஆதியந்தமற்றவன், அதாவது:—நித்திய யவ்வநனுகையாலே பிறப்பு மூப்புமுதலியதோஷங்கள் அண்டாமல் நித்தியமாய் விளங்குகிற திவ்ய மங்கள விக்கிரஹமுடையவனென்றபடி. [விக்கிரஹம்=சரீரம்]

[இத்திருநாமம் எம்பெருமானுடைய ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லுகிறதென்ன வொண்ணுது; ஆத்மஸ்வரூபம் ஆதியந்தமற்றிருக்குமென்கிறவிஷயம், பிரம்மாதிகளான ஸகலாத்மாக்களுக்கும ஸமமாகையால் அதைச்சொல்வதில் சிறிதும் ஏத்தமாகமாட்டாதாகையால் இது திவ்யமங்களஸ்வரூபமான திருமேனிவிஷயமென்றே கொள்ளத்தக்கது. இப்படியே [157] சுருதி ஸ்மிருதிகளில் பலவிடங்களில், எம்பெருமானுக்கு அதி நிர்மலமாய்நீலமாய்பிரகாசித்து, மிகவும்ஸவுந்தரியலாவண்யயவ்வநாதிகளான அவன் உகந்தகுணங்களெல்லாம் பொருந்தியிருப்பதுபற்றி அவனும் விடமாட்டாமல் நித்தியமாய் அங்கீகரிக்கும்படியான திவ்யமங்கள விக்கிரஹமிருப்பதாகச் சொல்லுகிறது. மேலுமிது [158] ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஸ்ரீராமாயணம் பாராசர்யம் முதலான விடங்களில் வெளிப்படையாய்ச் சொல்லப்படுகையாலும், ஸர்வதா காரணுவஸ்த்தையி லிருக்கையாலும், ஞாநாதிகளைப்போலே பகவத்ஸ்வரூபத்துக்கு நிரூபகமாயிருக்கையாலும், தமஸ்ஸை

[155] సైషాత్రయ్యేవవిద్యాతపతి యఏషోఽన్తరాదిత్యే హిరణ్మయః పురుషః ॥

[156] విద్యాసహాయవన్తమ్మాం ఆదిత్యస్థం సనాతనమ్ ॥

[157] భారూపస్సత్యసఙ్కల్పః ॥ హిరణ్మయః పురుషః ॥ విద్యుతః పురుషాదధి ॥
ఆదిత్యవర్ణన్తమసః పరస్తాత్ ॥
సర్వకర్మా సర్వగన్ధస్సర్వరసః ॥
రుక్మాభం స్వప్నధీగమ్యం విద్యాత్తు పురుషం పరమ్ ॥
పురుషః పుణ్డరీకాభః ॥

[158] సదైకరూపరూపాయ ॥ శ్రీవత్సవక్షా నిత్యశ్రీః ॥ సఏవభగవాన్ కాలస్సర్వమాత్మవశన్నయేత్ ॥
నాస్తినిష్ఠాః పరన్తత్త్వం తస్య కాలాత్పరాత్మనః ॥

[ధాతా।]

ధాతా-தரிப்பவன்,

(வி.) விட்டு அப்புறத்திலிருக்கையாலே ஜநநம்முதலியவிகாரமற்றிருக்கையாலும், அக்ஷரமென்றும் காலாதீதமென்றும் விசேஷித்துச் சொல்லப்படுகையாலும், இந்த விக்கிரகவிசிஷ்டனாயிருக்கிற பகவானை உபாஸிப்பவருக்கு இப்படிப்பட்ட நித்தியமான திவ்யமங்கள விக்கிரஹங்கிடைக்குமென்று சத்க்ருது நியாயமிருக்கையாலும், இத்திருமேனி நித்தியமாய் விளங்குமென்பது திடமாய் ஏர்ப்படுகிறது. இப்படி இவ்விஷயத்தில் [159]சுருதிஸ்மிருதிகள் பலமாயிருக்கும்பொழுது, திருமேனி வந்தேறியென்றும் அநித்தியமென்றுஞ் சொல்லுகிற யுக்திகள் சிறிதும் முளைக்கவிடமில்லை. இதற்கிணங்கவே சிலவிடத்தில் பகவானுக்கு ரூபமில்லையென்கிற வசநங்களுக்கும், ஹேய ரூபமில்லையென்பதாகப் பொருள் கொள்ளவடுக்கும். ஸூத்திரகாரரைப்போலே வாக்கியகார பாஷ்யகாரர்களும் ஆதித்யமண்டலவர்த்தியான பரப்பிரம்மத்துக்கு நித்தியசரீரமுண்டென்பதாக [160]நிரூபித்தார்கள். ஆகையாலே அவதாரங்களில்கூட திருமேனிக்கு ஆதியந்தமில்லை; மற்றப்படி லோகத்திலொருவன் திரைக்குள்ளிருந்து வெளியில் வருவதுபோல பரமபதத்தினின்று வந்துபோவது மாத்திரந்தான். இப்படியேதான் [161]ருஷிகளும் இதை ரஹஸ்யமாய்ச் சொன்னார்கள்.]

(அவதாரிகை.) எம்பெருமான் காரணனானவிடத்தில அவனுக்குப் பிரம்மாதிகளிற்காட்டில் வாசிசொல்லுகிறதுமேல்:—

தாதா=தரிப்பவன், அதாவது ஸகலகாரணமாய் அசேதந ஸமஷ்டியானப் பிரம்மாவென்கிற கர்ப்பத்தைத் தரிக்கிறானென்றபடி. இப்படியே[162] பகவத்கீதை மநுவாதிகளில காண்க.

[159]నభూతసఙ్ఘసంస్థానో దేహో౽స్య పరమాత్మనః । నతస్య ప్రాకృతా మూర్తిః మాంసమేదో౽స్థిసమ్భవా ॥

[160]రూపం వా౽తీన్ద్రియమన్తఃకరణ ప్రత్యక్షనిర్దేశాత్ ॥ ఆజ్ఞా సైవ విశ్వసృజో రూపమ్ ॥

[161]భుజైశ్చతుర్భిస్సముపేతం మమేదం రూపం విశిష్టం దివి సంస్థితఞ్చ । భూమౌ గతం పూజయతా ప్రమేయం సదాపి తస్మిన్నివసామి దేవాః ॥ స్వర్లోకమాగచ్ఛ గతజ్వరశ్చిరం సురేన్ద్రగుప్తం గతదోషకిల్బిషమ్ ॥
వివేశ వైష్ణవం తేజస్సశరీరస్సహానుగః ॥

[162]మమ యోనిర్మహద్బ్రహ్మ తస్మిన్గర్భం దధామ్యహమ్ ॥
ధాతా క్షేత్రే కర్త్ర బీజభూతం గర్భం దధాతి ॥
అప ఏవ ససర్జాదౌ తాసు వీర్యమపాసృజత్ ॥

[విధాతా ధాతు రుత్తమః । అప్రమేయో]

విధాతా-பல்படியாகச்செய்பவன், ధాతుః-பிரமனைக்காட்டிலும், ఉత్తమః-உத்கிருஷ்டன், అప్రమేయః-அளவிடப் போகாதவன்,

(வி.) (அவதாரிகை.) அந்த கர்ப்பத்தை விகாரப்படுத்தி ஆவிர்ப்பவிக்கச் செய்கிறானென்கிறதுமேல்:—

விதாதா=ஆவிர்ப்பக்கச்செய்பவன். [163]இதர்க்குப்பிரமாணம்

(அவதாரிகை.) இந்தஸ்ருஷ்டிக்குந் தன்மையானது பிரம்மாதிகளுக்கும் ஸமானமாயிருக்கையாலே இவனும் அர்களிலொருவனேவென்னில்:- இவன் அவர்களைக்காட்டிலும் விலக்ஷணனென்கிறது.

தாதுः உத்தமः=பிரமனிற சிறந்தவன்.

[இதற்குப் பிரமாணம் [164]ச்வேதாச்வதரம், புருஷஸூக்தம், தைத்திரீயம்முதலான விடங்களில் பரக்கக் காணலாம்.

அப்ரமேயः= அநதப் பிரம்மாதிகளாலே இவ்வளவென்று (அளவிடப்போகாதவன்) இதற்கு[165]வசநங்காண்க.

(அ.) அப்ரமேயः—ஒரு ப்ரமாணத்துக்கும் விஷயமாகாதவன். என்றால்:- சப்தம்முதலிய குணங்களற்றவனாகையாலே பிரத்யக்ஷப் பிரமாணத்துக்கு விஷயமல்லன்; "இதுகாண்கையாலே இப்படி யிருக்கு"மென்று அறியும்படியான அடையாளமில்லாமையாலே அநுமானப்பிரமாணத்துக்கு விஷயமல்லன், பாகமற்றிருப்பதுபற்றி ஸாத்ருச்யமில்லாமையாலே உபமானப் பிரமாணத்துக்கு விஷயமல்லன்; அவனன்றி யிதுகூடவில்லை யென்பதற்கு ஒன்றும் ஸம்பவிக்கமாட்டாமையாலே அர்த்தாபத்தியென்கிற பிரமாணத்துக்கு விஷயமன்று; பாவரூபமாய்த் தோற்றுகையாலும் அபாவத்திற்கு ஸாக்ஷியாயிருக்கையாலும் அவனை அபாவத்துக்கு விஷயமென்னவும்போகாது; பிரமாணத்தாலுண்டான வதிசயம் யாதொன்றுங் காணாமையாலே சாஸ்திரமும் பிரமாணமாகமாட்டாது. இப்படியானால் 'சாஸ்த்ரயோநித்வாத்' என்று ஸூத்திரகாரர் சாஸ்திரத்தைப் பிரமாணமாகச் சொன்னாரோ எப்படி கூடுமென்னில்-சொல்லுகிறோம்; பிரமாணப் பிரமேயங்களுக்கு ஸாக்ஷியாய் பிரகாசரூபமாயிருக்கையாலே பரமாத்மா பிர

[163]యో బ్రహ్మాణం విదధాతి పూర్వమ్ ॥ అథ పునరేవ నారాయణః ॥ తత్ర బ్రహ్మా చతుర్ముఖోఽజాయత ॥ హిరణ్యగర్భం పశ్యత జాయమానమ్ ॥ తస్మాద్విరాడజాయత॥

[164]తత్త్వం నారాయణః పరః॥ ఏతేషాం కతమో దేవః పరః కోఽవాఽథవాఽపరః ॥ పరో నారాయణో దేవః తస్మాజ్జాతశ్చతుర్ముఖః ॥

[165]యన్నారాయణం భగవాన్ బ్రహ్మజానాతి పురుషోత్తమమ్ ॥

[హృషీకేశః పద్మనాభోఽమరప్రభుః। విశ్వకర్మా మనుస్]

హృషీకేశః-புலன்களை நியமிப்பவன், పద్మనాభః-கமல உந்தியோன், అమరప్రభుః-தேவநாதன், విశ్వకర్మా ஸகல வியாபாரமு முடையவன, మనుః-மநநஞ்செய்பவன்,

(வி·) ஹ்ருஷீகேசः=விஷயேந்திரியங்களை நியமிப்பவன்.

(என்றால:—பிரம்மாதிகளினது கரணங்கள் இவன் வசமான பின்பு அவர்கள் இவனையளவிடுவதெப்படி? யென்றபடி; இதற்குப் [166]பிரமாணங் காண்க.)

(அவதாரிகை.) கீழ்ச்சொன்ன அவர்த்தங்களையேவிவரிக்கிறார்மேல்:-

பத்மநாபः=பிரமனது உதபத்திஸ்தாநமான (பத்மத்தை நாபி)யிலுடையவன். [167] இதற்குவசநங்காண்க.

அமரப்ரபு:=அந்தபிரம்மாதி(தேவர்களுக்கெல்லாம்) ஸ்ருஷ்டிமுதலிய வதிகாரங்களைக்கொடுத்து (நிர்வஹிக்குமவன்)

[இப்படியே ஸ்ரீராமாயணத்தில் [168]பிரம்மா சொல்லுகிறார். பாரதத்திலுங்காண்க.]

விச்வகர்மா=எல்லாக்கருமமும் செய்பவன்.

[என்றால் கீழ்ச்சொன்னபடி பிரம்ம ஸ்ருஷ்டிக்கு முன்னும் பின்னுமுண்டான ஸகலவியாபாரங்களும் செய்பவனென்றபடி. இதற்குப் [169]பிரமாணங்காண்க]

மநு:=மநநஞ்செய்பவன், என்றால் ஸங்கல்ப லேசமாத்திரத்தால் இவ்வளவு வியாபாரங்களையுஞ் செய்யுமவனென்றபடி.

(அ.) மாணத்துக்கு விஷயமாகாமலிருக்கச்செய்தே, பிரமாணத்துக்கு விஷயமென்பதாக நினைக்கும் பிரமாம்சத்தை நிவர்த்திப்பண்ணுகிற விஷயத்தில் சாஸ்திரம் பிரமாண மாகின்றமையால் சாஸ்திரம் பிரம்மத்தில் பிரமாண மென்கிறது.

ஹ்ருஷீகேசः—இந்திரியங்களுக்கு ஈசனான ஜீவஸ்வரூபன். இந்திரியங்களை வசப்படுத்திய பரமாத்மா வென்னவுமாம்; யத்வா—ஸகல ஜகத்துக்கும் ஹர்ஷத்தை யுண்டுபண்ணும்படியான கேசமென்கிற கிரணங்களுடையரான சூரியசந்திர ரூபனென்னவுமாம். இவ்வர்த்தம் மோக்ஷதர்மத்தில் சொல்லப்பட்டது.

[166]హృషీకాణీన్ద్రియాణ్యాహుః తేషామీశో యతో భవాన్। హృషీకేశస్తతో విష్ణుః ఖ్యాతో దేవేషు కేశవ ॥ [దుర్భవతి ॥

[167]ధాతో త్తానస్సంవిశతి పఞ్చవర్షశతానితు॥ ధాతుర్నాభ్యాం పుష్కరం ప్రా

[168]మహార్ణవే శయానోఽప్సుమాం త్వం పూర్వమజీజనః... ప్రాజాపత్యం త్వయా కర్మ సర్వమ్మయి నివేశితమ్ ॥

[169]విశ్వకర్మణస్సమవర్తతాధి॥ పురుషం విశ్వకర్మాణ మాదిదేవమజం విభుమ్ ॥

[త్వష్టా స్థవిష్ఠస్స్థవిరో ధ్రువః ।]

త్వష్టా-வகுத்துப்படைப்பவன், స్థవిష్ఠః-மிகவுமபருத்தவன், స్థవిరః -எக்காலத்திலுமிருப்பவன் ధ్రువః சலிக்காதவன்,

---

(வி.) (அவதாரிகை.) இபபடி நிர்மிக்கப்பட்டதைநாமரூபகங்கள்கொண்டு தேவனென்றும் மனிதனென்றும், திர்யக்கென்றும், தாவரமென்றும் பல்படிவிசித்திரமாகச் சமைக்கிருனென்கிறதுமேல்:—

த்வஷ்டா=நாமரூபங்களாலே வகுப்பவன். இதற்குவசநம்[170]

ஸ்தவிஷ்டః—ஆனதுபற்றியே (பருத்தவன்)

[என்ருல்:—தன்ஸங்கல்பப் பிரகாரம் பல்படியாகப் பரவுவதாயுத் தேசித்து, ஸூக்ஷ்மமான அவ்யக்தம் முதலானக் கிரமத்தாலே தேவர் மனிதர், திரியக்கு, தாவரம் என்றும், அவற்றிற்கு விஷயமான சப்தம் பரிசம் முதலான குணங்களென்றும், அவற்றிற்கு இடமாய் பதிநான்குலோகங்களையுமுட்கொண்ட பிரம்மாணடமென்றும், அதற்கு ஆவரணமான ஸூக்ஷ்மவ்யக்தமான விபஷ்டிகாரியமென்றும் இபபடி விஸ்தாரமாய்ப் பரந்தவனென்றபடி. இதில் பிரமாணம் 171.

(அவதாரிகை.) இப்படி ஸங்கல்ப மூலமாய்க் காரணமாகாநின்றும் லோகத்தில காணப்படும் மண்முதலிய காரணத்தைக் காட்டிலும் வைலக்ஷண்யங்காட்டுகிறதுமேல்:—

ஸ்தவிரః=ஸகலகாலத்திலும் இருப்பவன்.

[என்ருல்:—லீலையாலே காலத்தை யபேக்ஷித்தாலுகிலும் அதற்கு வசப்பட்டவனல்ல னென்றபடி; இதனுல் காலவிசேஷத்தை யபேக்ஷிக்கின்ற தயிர், பால் முதலிய காரண த்ரவ்யங்களைக் காட்டிலும் இவனுக்கு வைலக்ஷிண்ணியஞ் சொல்லிற்று. ஏனெனில்; ஸர்வப்பிரகாரத்தாலும் இவனுக்கு காலமும் வசப்பட்டதன்ருே? இதற்குப [172]பிரமாணமகாணக.

த்ருவః=அளவின்றி பரிணமித்தாலும விகாரமில்லாமையாலே ஸ்வருபத்திலிருந்து நழுவாமல (நிலையாயநின்றவ)னென்றபடி. இதில்பிரமாணம் [173]

---

(அ.) த்வஷ்டா—ஸம்ஹார ஸமயத்தில் ஸகலபூதங்களையும்(சின்ன சின்னதாய்ச்செய்பவன்) அதாவது அழிப்பவனென்றபடி.

---

[170] త్వష్టారం రూపాణి వికుర్వన్తం విపశ్చితమ్ ॥

[171] నాస్త్యన్తో విస్తరస్య మే ॥ విస్తారస్సర్వభూతస్య విష్ణోస్సర్వమిదం జగత్ ॥

[172] కాలచక్రం జగచ్చక్రం యుగచక్రఞ్చ కేశవః । ఆత్మయోగేన భగవాన్ పరివర్తయతేऽనిశమ్ ॥

[173] అజయ్యశ్శాశ్వతో ధ్రువః ॥ అవికారాయ శుద్ధాయ ॥

[అగ్రాహ్యశ్శాశ్వతఃకృష్ణోలోహితాక్షః ।]

అగ్రాహ్యః—கிரஹிக்கமுடியாதவன், శాశ్వతః—எந்நாளுமுள்ளவன், కృష్ణః-ஆநந்த முறுமவன், లోహితాక్షః-செங்கண்ணன், ప్రతర్దనః-நாசஞ்செய்பவன், ప్రభూతః-பெரியவன், త్రికకుద్ధామ

---

(வி) (அவதாரிகை.) மண்ணும் நூலும் குயவன் சேணியனுக்கு வசப்படுவதுபோல் இவன் காரணனாயிருக்கின்றமை கொண்டு யாருக்காகிலும் வசப்படவேண்டுமோவென்னில்:—

அக்ராஹ்ய:=ஒருவரால கிரஹிக்க முடியாதவன். இதில் [174] பிரமாணங்காண்க.

சாச்வத:=இப்படியே பிரவாஹம்போல் (எந்நாளும்) ஜகத் வியாபாரஞ்செய்துகொண (டிருப்பவன்.) இதில்பிரமாணம [175]காண்க. க்ருஷ்ண:=இப்படிப்பட்ட லீலா ரஸத்தால் ரொம்பவும் (ஆநந்தமுற்றிருப்பவன.) இதற்கு ருஷிகள் செய்த நிருக்தியே [176] பிரமாணம். லோஹிதாக்ஷ:=இப்படிப்பட்ட ஆநந்தத்தையறிவிக்குமதான (சிவந்த திருக்கண்களுடையவன்.)

(அவதாரிகை.) இப்படி ஸகல ஸ்ரஷ்டாவான தானே ஸகலத்தையும் ஸம்ஹரிக்கிறானென்கிறதுமேல்:—

ப்ரதர்தந:=ஹிம்ஸிப்பவன. இதற்கு [177]வசநங்காண்க.

ப்ரபூத:=இப்படி ஸர்வ ஸம்ஹாரம் பண்ணினாலும், எந்நாளு மழியாமல் அநந்தமான போகத்துக்கும் உபகரணமாய் பரமபதமுண்டாயிருக்கையாலே (ஸம்ருத்தியுடையவன்.)

(அவதாரிகை) இப்படி விச்வத்தை ஸ்ருஷ்டிப்பதும் ஸம்ஹரிப்பதுமாகச்சொன்னதெல்லாம் அவன்விபூதிகளில அணுமாத்திரமான லீலாவிபூதியையன்றோ? அதைவிவரிக்கிறது:—

த்ரி ககுப்தாம=முக்கால்பங்கான பரமபதமென்னும்ஸ்தாநத்தையுடையவன்.

இப்படியே "பாதோஸ்ய விச்வாபூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" என்று இவனது விபூதி கால்பங்குதான் விச்வாபூதங்களென்கிற பிரபஞ்

---

(அ.) ப்ரபூத:=ஞாநம் ஐசுவரியம் முதலியவைகளாலே ஸம்பூர்ணன்.

---

[174] నైనమూర్ధ్వన్న తిర్యఞ్చనమధ్యే పరిజగ్రభత్ ॥

[175] అవ్యుచ్ఛిన్నాస్తతస్త్వేతే సర్గస్థిత్యన్తసంయమాః ॥

[176] కృషిర్భూవాచకశ్శబ్దో ణశ్చనిర్వృతివాచకః । కృష్ణస్తద్భావయోగాచ్చ ॥

[177] యస్యబ్రహ్మచక్షత్రఞ్చ ఉభేభవతఓదనః ॥

[పవిత్రంమఙ్గళంపరమ్]

மூக்கால்பங்கிடமுடையவன், పవిత్రమ్-பரிசுத்தன், పరమ్మఙ్గళం - மிகவும் மங்களமானவன்,

(வி.) மென்றும்,மூககாலபங்கு அழிவுறாமல்நித்தியமாய்மேலேவிளங்குகிற தென்றும் 178 சுருதியில் ஓதப்படுகிறதன்றோ? இதனால் இது அணுமாத்திர மென்றும் அது பரம மஹத்தென்கிற பெரிய பரிமாணமென்றுஞ் சொன்னதாயிற்று. இதில் ஸ்ரீவிஷ்ணுபுராணோக்திசள் 179பிரமாணம். அதவா, 'த்ரிககுப்' என்று ஞாநம் பலம் ஐசுவரியம வீரியம் சக்தி தேஜஸ் என்கிற மூவிரண்டுகளாய், அதற்குத் தர்மியானவனென்றுமாம்; அல்லது ருஷிகள் 180நிருக்தியின்படி வாராஹ அவதாரத்தில் மூன்று முசுப்புகளுடையனென்றுமாம். அந்தபக்ஷத்தில் 'தாம' என்று தனிப்பதமாய் அதற்கு 'தேஜஸ்' என்று பொருள்கொள்ளவேணடும்.

(அவதாரிகை.) இப்படி குணவிபவரூபமான நிரூபகதர்மங்களைச் சொல்லி அவ்வழியே அப்படி நிரூபிக்கப்படும் ஸ்வரூபத்தில் பிரவேசிக்கிறது:—

பவித்ரம்—யாதொன்றிலுந் தட்டாமல் (பரிசுத்தமாய்விளங்குமவன்) பரம்மங்களம்— ஸ்வயம பிரகாசாநந்தரூபமாய் (கலியாணமே வடிவானவன்)

[ஸ்வபாவஸித்தமாய் நித்யமாய் நிரவத்யமாய் எல்லையற்றுக் கணக்கிடக்கூடாமல் குணங்களும் விபவங்களும் அநுபவவைபவங்களும் பகவானுக்கு எந்நாளு முண்டாயிருந்ததேயாகிலும், தனக்குத்தானே ஸகலதோஷங்களுக்கு மெதிர்த்தட்டாய் ஈடின்றி மிகவும் அநுகூலமாய் ஸ்வயம் ப்ரகாசமாய் விளங்கும் ஆதமாநுபவத்தாலுண்டான நிரவதிசமான ஆநந்தத்தால் அமுதக்கடலைக் கீழ்ப்படுத்துமதுபோல் விளங்கும் பாரவஸ்த்தை மாத்திரத்தால் பகவான் யாதொன்றையும் அபேக்ஷிக்காமல் நித்திய திருப்தனாய் விளங்குகிறானென்று நிரூபிக்கை யுசிதமேயன்றோ?]

இப்படியே ஸூத்திரகாரர் 181நிரூபித்திருக்கிறார். 182சுருதியிலுமோதப்பட்டது.

(அ.) பவித்ரம் பரிசுத்தன்— பவி' யென்கிற வஜ்ஜிராயுதத்தினின்று 'த்ர' காக்குமவன்; என்றால் அநிஷ்ட நிவர்த்தகனென்றபடி.

178పాదోఽస్య విశ్వా భూతాని- త్రిపాదస్యామృతం దివి॥

179యస్యాయుతాయుతాంశాంశే విశ్వశక్తిరియం స్థితా ॥

180తద్వా ఏష త్రికకుద్వారాహం రూపమాస్థితః । త్రికకుత్ తేన విఖ్యాతః శరీరస్య ప్రమాణతః ॥ 181ఆనన్దమయోఽభ్యాసాత్ ॥

182ఆనన్దం బ్రహ్మ ॥ అతిరమణీయ నిర్దోష మఙ్గలగుణనిధేయ లక్షణమ్ ॥

[ఈశానః]

ఈశానః - ஆளுந்தன்மையன்,

(வி) இங்கே பிரம்மஸ்வரூபம் ஞானமாத்திரரஸமென்றும் ஞானம் முதலிய குணங்களில்லையென்றும் சிலர் சொல்வார்கள்; அதை அகண்ட கண்டந மென்கிற கிரந்தத்தில் அனேகவிதமாய் கண்டித்திருக்கிறது.

பிரம்மம் ஞானஸ்வரூபம் ஆநந்தஸ்வரூபமென்று சுருதியில் சொல்வதற்குக் கருத்தென்னெனில்-ஞானம் ஆநந்தம் ஐசுவரியம் முதலான குணங்களிருக்கச்செய்தேயும் மிகவும் அநுகூலமாய் தனக்குத்தானே பிரகாசிக்கின்றஞானவடிவமாய் ஆத்மஸ்வரூப மிருக்குமென்றுமதாம. என்போலெனில்:—

இரத்தினம், தீபம், சூரியன் முதலியவைகள் தமது ஒளிக்குவிஷயமானவைகளையும் பிரகாசப்படுத்துகின்றன; தாமும் அந்த ஒளியை அபேக்ஷிக்காமலே பிரகாசிக்கின்றன; அதனால் ஒளியென்றும் ஒளியுள்ளதென்றும் வியவஹாரமுண்டாயிருக்கிறது; அதுபோல பரமாத்மா குணத்தாலும் ஞானத்தாலும் ஸகலத்தையும் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறான்; தானும் அவற்றை யபேக்ஷிக்காமலே பிரகாசிக்கிறான்; அதுகொண்டு ஞானமென்றும் ஞானமுடையவனென்றும் சொல்லுகிறது; மேலும் ஞானஸ்வரூபன் என்றுசொல்வதற்கே மற்றொரு அபிப்பிராயம்: என்னவெனில்:—அவனுக்குண்டான குணங்களில் ஞானமென்கிற குணம் ஸாரமாயிருக்கையால் அதைக்கொண்டு ஞானஸ்வரூப னென்கிறதாம். இதற்கு [183]ஸூத்திரகாரரும் நியாயஞ்சொன்னார். இதனால் பிரம்மம் ஞானஸ்வரூபமென்றும் ஞானமுடையதென்றும் ஒன்றுக்கொன்று விரோதமாய் தோற்றுகிறதே யென்று ஸந்தேகிக்க விடமில்லை யென்றதாயிற்று; எப்படியெனில்—ஒன்று ஸ்வரூபஞானத்தைச் சொல்லுகிறது; மற்றொன்று குணஞானத்தைச்சொல்லுகிறதென்று இரண்டுக்கும்வழி தாராளமாய்ச்சொன்னோமன்றோ? இப்படியே வார்ஷ்ணேயாத்தியாயத்தில் ஜீவப்ரஸங்கம் வந்தபொழுது [184] சொல்லப்பட்டது.

(அவதாரிகை.) இந்தஸ்வபாவம் ஜீவர்களுக்கும் ஒருவேளை பிரகாசித்தும் ஒருவேளை மறைந்து மிருக்கிறபடியால் அவர்களைவிட பரமாத்மாவுக்கு பேதஞ்சொல்லுகிறது இதில்:—

ஈசாநஃ=தன்னையும் மற்றும் பதார்த்தங்களையும் ஸகலாவஸ்த்தைகளிலும வைத்து (ஆளும் ஸ்வபாவன்) இதற்குச் [185]சுருதிஸ்மிருதிகள் அநந்தம. இப்படி ஆளுந்தன்மை பகவானுக்கு ஸவ

[183] తద్గుణసారత్వాత్తు తద్వ్యపదేశః ప్రాజ్ఞవత్ ॥

[184] యథాజీవః ప్రశాన్తాత్మా మహాన్త్వాయదివామహాన్ ॥ జ్ఞానాత్మానన్తథావిద్యాత్ పురుషం సర్వజన్తుషు ॥

[185] తమీశ్వరాణాం పరమం మహేశ్వరమ్ ॥ సర్వస్యవశీసర్వస్యేశానః సర్వ

[ప్రాణదః ప్రాణో జ్యేష్ఠః]

ప్రాణదః-பிராணனைத்தருமவன, ప్రాణః-பிராணனாயிருப்பவன், జ్యేష్ఠః-மிகவுங்கொண்டாடத்தக்கவன்,

---

(வி.) பாவமென்றுஸ்பஷ்டமாயிருக்கையாலே பிரமமத்துக்குஐசுவரியமும் ஸர்வஜ்ஞத்வமும் மற்றுங்குணங்களும் கால்பநிகமென்றும உபாதிவசத்தால் வந்தவைகளென்றும் பரிணாமமென்றும் சொல்லுமவர்களுக்கு மூன்றுகையெள்ளுந்தண்ணீரும் விட்டதாயிற்று.

(அவதாரிகை.) இவனுடைய ஐசுவரியங்களில் முதன்மையான ஐசுவரியத்தைச்சொல்லுகிறது:—

ப்ராணதஃ=பெலனைத்தருமவன்.

[என்றால, நித்தியஸூரிகளுக்கு எப்போதும் தனது ஸேவையென்கிற அநுபவத்துக்கும் கைங்கரியத்துக்கும் வேண்டும்பெலனைக் கொடுக்கிறானென்றபடி. இதில் பிரமாணம 186

ப்ராணஃ=அப்படியே அவர்களுக்கு உஜ்ஜீவநஹேதுவானவன். இதற்குப்பிரமாணம் 187

ஜ்யேஷ்டஃ=கொண்டாடப்பெற்றவன்.

[என்றால்:—தானும் ஸூரிகளும் ஸர்வதா ஸர்வப்பிரகாரத்தாலும் அநுபவித்தாலும் கரைதட்டாமல் அளவற்ற ஐசுவரியம் பொருந்தி யிருக்கையாலே மிகவுங் கொண்டாடத்தக்கவனென்றபடி. இதற்கு வசநம் 188காண்க. அல்லது யாவர்க்கும் முற்பட்டவனாகையாலே விருத்தனென்னவுமாம். இப்படி பாரதவசநம் 189இருக்கிறது.

---

(அ.) ப்ராணதஃ—பிராணன்களைக் காலரூபியாய்க்கொண்டு கண்டிக்கிறானென்றும், சோதிக்கிறானென்றுஞ் சொல்லலாம் ப்ராண்தஃ—ப்ராணன்களை யசைவிக்கிறவன் ஜ்யேஷ்டஃ—ஸர்வகாரணன்.

---

స్యాధిపతిః సనసాధునాకర్మణాభూయాన్నో ఏవాసాధునాక నీయాన్ । ఏషసర్వేశ్వరఏషభూతాధిపతి రేషభూతపాల ఏషసేతుర్విధరణ ఏషాంలోకానా మసమ్భేదాయ ॥ ఈశతేభగవానేకస్సత్యమేతద్బ్రవీమితే ॥

186యఆత్మదాబలదాః ॥ సహైవః ప్రాణమవిశతి ॥

187తతోదేవానాన్నిరవర్తతాసురేకః ॥

188భగవాన్ వాసుదేవోజ్యాయసీవిభూతిః ॥

189ఏషః ప్రకృతిరవ్యక్తః కర్తాచైవసనాతనః। పరశ్చసర్వభూతేభ్యస్తస్మాద్వృద్ధతమోఽచ్యుతః ॥

[శ్రేష్ఠః ప్రజాపతిః । హిరణ్యగర్భో భూగర్భో]

శ్రేష్ఠః - மிகவும் துதிக்கத்தக்கவன், ప్రజాపతిః - ஸூரிகளுக்கிறைவன், హిరణ్యగర్భః-பொன்னுலகுள்ளுறைபவன், భూగర్భః- பூமியைக்கர்ப்பத்தில்வைத்துக்காப்பவன்,

---

(வி.) ச்ரேஷ்ட:=அந்த நித்யஸூரிகள், அநவரதமும் அநுபவிப்பதினாலுண்டாகும ப்ரீதிக்குப் போக்குவீடாய் ஸ்தோத்ரஞ் செய்யப்பெற்றவனென்றபடி. இதற்கு வசனமே [190]காண்க.

(அவதாரிகை.) இப்படியவர்கள் ஸ்தோத்திரம் செய்யும்படி இவனுக்கும் அவருக்குமுண்டான ஸம்பந்தமேதென்னச் சொல்லுகிறதுமேல்:—

ப்ரஜாபதி:=உத்கிருஷ்டமாகப் பிறந்தவர்களுக்குத தலைவன் (ப்ரகர்ஷேணஜாயமாநாநாம் பதி:)

[என்றால்:—பத்தரும்முக்தருமான ஆத்மகோடிகளைவிட உத்கிருஷ்டமாய் விளங்கும் நித்ய ஸூரிகளால ஸர்வதாபரிசர்யை பண்ணப்படுமவனென்றபடி. இதற்குப் பிரமாணம் [191]காண்க.]

(அவதாரிகை.) இப்படி அநுபவிக்கத்தகுந்த தேசவிசேஷத்தைச் சொல்லுகிறதுமேல்:—

ஹிரண்யகர்ப்ப:=நிர்த்தோஷமாய் நித்யமாய் பரமஸத்வமயமாயிருக்கையாலே ஸுவர்ணம்போல் விளங்குகின்ற பரமபதத்தினடுவே நித்தியவாஸம் பண்ணுமவன். இதற்குச் சுருதிஸ்மிருதிகள் அநந்தம் [192]

(அவதாரிகை.) அநந்தரம் அவனுக்கு திவ்யமஹிஷிகளுண்டாயிருக்கின்றமையைச் சொல்லுகிறது.

பூகர்ப்ப:=ஹ்ரீயென்றும் க்ஷமையென்றும் சுருதியிற் [193] சொல்லப்படுகிற பூமிப்பிராட்டிக்குத் தனது ஸர்வதா அநுபவத்தைத் தந்து அவளைக் கர்ப்பம்போல் பரிபாலிக்குமவன்.

---

(அ.) ஹிரண்யகர்ப்ப:—பிரம்மரூபியாய்க்கொண்டு ஸுவர்ணமயமான அண்டத்திலிருப்பவன்.

---

190 తద్విప్రాసోవిపన్యవో జాగృవాంసస్సమిన్ధతే- విష్ణోర్యత్పరమంపదమ్ ॥

191 ఋక్షంరక్షీ నామ్నోత్యేతపస్తమ్-ఋతస్యపదేకవయోనిపాన్తి ॥ యత్రపూర్వే సాధ్యాస్సన్తిదేవాః ॥

192 హిరణ్మయేపరేలోకే విరజం బ్రహ్మనిష్కళమ్। తచ్ఛుభ్రంజ్యోతిషాంజ్యోతిః యదాత్మవిదోవిదుః ॥ నతత్రసూర్యోభాతి ॥

193 మహీందేవీం విష్ణుపత్నీమజూర్యామ్ ॥

[మాధవో మధుసూదనః । ఈశ్వరో విక్రమీ]

మాధవః லக்ஷ்மீவல்லபன், మధుసూదనః - இந்திரிய ங்களை சிக்ஷிக்குமவன், ఈశ్వరః - ஸ்வச்சந்தமாயி ருப்பவன், విక్రమీ - விரோதிநிரஸநசீலன்,

---

(வி.) மாதவः=மா எனெகிற லக்ஷ்மிக்கு நாயகன்; ஸ்ரிய:பதி யென்றபடி. இதற்குப் பிரமாணம் 194காண்க.

இவளுக்கு ஸ்வரூபத்தைப்போலவே நித்திய நிர்மலமான ரூபமும், ஸ்வாபாவிகமான பரமைசுவரியமும், ஸகல ஜகத்துக்குந் தாயாயிருக்குந் தன்மையும், எம்பெருமானோடு நித்திய ஸம்பந்தமும், அதுவும் ஸ்வாபாவிகமென்றமதுவும் தத்வபர 195சாஸ்திரங்களான ஸ்ரீஸூக்தம் மேதாஸூக்தம் சிரத்தாஸூக்தம், உத்தரநாராயணம், கவுஷீதகீபிராம்மணம் முதலான வேதங்களிலும், விஷ்ணுபுராணம் முதலான ஸ்மிருதிகளிலும் பரக்கச்சொல்லபபடுகின்றன.

(அவதாரிகை.) இப்படி ஸர்வநிர்வாஹகனாயிருப்பதோடு அசுரநிரஸநாதிகளைச் செய்வதனால் எதிரிலலாமல் விளங்குகிறானென்கிறதுமேல்:-

மதுஸூதனः=மதுவைப்புடைத்தவன். அல்லது மதுவென்று இந்திரியமாய் அவற்றைததன்னுள்ளொடுக்குமவனென்றுமாம்.

[இதற்கு ருஷிகள் 195சொன்ன நிருக்தம் பிரமாணமாகக்கடவது. இதனால் நித்திய ஸூரிகளினது இந்திரியங்களுக்கு விஷயமாய் எப்போதும தன்னைத்தந்து ரக்ஷிப்பவனென்றபடி.]

ஈசவரः=இப்படி போகபூமி அபாரமாயிருந்ததே யாகிலும் அதில் ஸ்வேச்சையாய விளங்குமவன். இதற்கு 196வசநங்காண்க.

விக்ரமீ=தனது ஸங்கல்பத்துக்கு விரோதமா யேதேனுஞ் சிறிதுநேரிடுவதாக ஸம்பவித்தாலும் அதை நிரஸிக்கும்படியான பராக்கிரமஸ்வபாவன். இதற்கு வசநம் 197

---

(அ.) மாதவः—மதுவித்தையா லறியப்படுமவன். அதவா வியாஸவசநத்தின்படி மவுநமாயிருக்கையாலும் தியாநம் செய்கையாலும், யோகத்தாலும் மாதவனென்றுமாம்.

---

194హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ ॥ నిత్యైవైషా జగన్మాతా విష్ణోః శ్రీరనపాయినీ ॥

195మదుర్గం ద్రియనామాసతతో మధునిషూదనః ॥

196యత్ర కామగమా వశీ ॥

197మనసైవ జగత్సృష్టిం సంహారఞ్చ కరోతి యః । తస్యారిపక్ష క్షపణే కియా నుద్యమవిస్తరః ॥

[ధన్వీమేధావీవిక్రమఃక్రమః । అనుత్తమోదురాధర్షః ॥]

ధన్వీ -வில்லாளி, మేధావీ-கூர்மதியன், విక్రమః - பரவைகொண் டோவோன், క్రమః-மிகவும்பருத்தவன், అనుత్తమః-தன்னை விட மற் றொருத்தமனில்லாதவன், దురాధర్షః - அலைக்கமுடியாதவன்,

(வி.) தந்வீ=இப்படி ஈடில்லாத பவுருஷத்தோடு கூடியிருப்பதற்குத்தக்க படி சாரங்கமென்னும்வில்லை எப்போதுமுடையவன். இப்படிசொன்னது மற்றுமுண்டான திவ்யாயுதங்களுக்கும் லக்ஷணம் இதற்குவசநம் 198காண்க

மேதாவீ=ஸ்வபாவஸித்தமான அளவற்ற ஸர்வக்ஞதையுடையவன் இதற்கு வசநம் "யஸ்ஸர்வக்ஞஸ்ஸர்வவித்"

விக்ரம:=வி என்றுபக்ஷியாய் அதைக்கொண்டு 'க்ரம:' செல் பவன்; என்றால். வேதமயனான கருடன் மேலேதழுந்தருளி ஆங்கா ங்கு ஸ்வேச்சையாய் விஹரிப்பவனென்றபடி இதற்குவசநம் 199

க்ரம:=இப்படிப்பட்ட மஹாவிபூதியையுடைத்தா யிருக்கையாலே பருத்தவன்:—

அநுத்தம:=தன்னைத்தவிர மற்றொரு தன்னைப்போ லுத்தம னை யில்லாதான். இதில் 200பிரமாணங்காண்க.

துராதர்ஷ:=காம்பீர்யா திசயத்தாலே ஸமுத்திரம்போல் ஒருவரால் அலைக்கமுடியாதவன். இதற்க்கும் வசநம 201காண்க.

இவ்வளவாகச்சொன்ன இந்த கட்டத்தில் ஏற்பட்ட வர்த்தம் என்ன வெனில்; சொல்லுகிறோம்:—

கீழ்ச்சொன்ன சுருதிஸ்மிருதி முதலிய வசந ஸஹஸ்ரங்களால் கோ ஷிக்கப்பட்டதாய், காலங்கடந்து விகாரநாசங்க ளொன்றுமின்றிக்கே தம ஸஸுக்கு அப்பால் நித்தியமாய் புநராவர்த்தியில்லாமல் பகவத்ஸ்வரூபம்

(அ.) மேதாவீ—பலக்கிரந்தங்களையும் தரிக்கும்படியான வல்லமையுடைய வன். விக்ரம:—பக்ஷியால் செல்பவன்.

க்ருதஜ்ஞ:—பத்திரம் புஷ்பம் பலம் முதலிய அற்பத்திரவியங்கள் கொடுத்தார்க்கும் மோக்ஷத்தைத் தருமவனென்றுமாம்.

198 శార్ఙ్గధన్వా హృషీకేశః పురుషః పురుషోత్తమః । అజితః ఖడ్గధృగ్విష్ణుః

199 తత్పురుషాయ విద్మహే సుపర్ణపక్షాయ ధీమహి । తన్నో గరుడః ప్రచోదయాత్ ॥

200 తస్మాద్ధాన్యన్న పరః కిఞ్చనాస॥ తేనార్హతి బ్రహ్మణా స్పర్ధితుం కః ॥

201 గమ్భీరః పరమో దేవః ॥ మహోదధిరివాక్షోభ్యః ॥

[కృతజ్ఞః కృతిరాత్మవాన్ । సురేశః]

కృతజ్ఞః-செய்நன்றியறிபவன், కృతిః-செய்விப் பவன், ఆత్మవాన్ ஆத்மாக்களை யுடையவன், సురేశః - தேவரையாள்பவன்,

---

(வி.) போல்விளங்கும் பரமபதமென்கிற ஸ்தாநவிசேஷத்தில் ஸ்ரீ, பூமியென்கிற திவ்யமஹிஷிகளோடேகூடி, கௌஷீதகியிற்சொன்ன பாயங்கவிதத்தையின்படி ரத்நமயமான திவ்யா ஸ்தாநத்தில திவ்யமான மஞ்சத்தின் மீதெழுந்தருளி, அநந்தவைநதேய விஷ்வக்ஸேநாதிகளான முன்சொன்ன நித்திய ஸூரிகளாலே எப்பொழுதும் பரிசர்யை பண்ணப்பட்ட சரணங்களிநறாய் விளங்கும் பகவானுடைய ஸகலவேத ரஹஸ்யமான ஸர்வைச்வரியம் விவரிக்கப்பட்டதாயிற்று. இவ்வர்த்தம் [202]சைவபுராணத்தில் ஸபஷ்டம்.

(அவதாரிகை.) அநந்தரம், கீழ்ச்சொன்னபடி ஆத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபம் எம்பெருமானுக்கு அடிமைசெய்வதென்பதையும், தனக்கென்று ஒன்றுமில்லையென்பதையும் மறந்து, அநாதியான அவித்தையின் மஹிமையாலே தங்களை ஸ்வதந்திரரென்பதாக மதித்து ஜநநமரணாதி ரூபஸம்ஸாரத்தி லகப்பட்டுழலும் ஆத்மகோடிகள் தன் விஷயத்தில் ஏதேனும் சிறிதுசெய்தாலும் அதையுணர்கிறானென்கிறதுமேல்:—

க்ருதக்ஞ:=செய்ததையறிபவன்.

[இப்படியேயன்றோ [203]கீதையிலருளிச்செய்தான்.]

க்ருதி:=செய்விப்பவன; என்றால் இப்படி அவர்கள் பண்ணும ஸுக்ருதமும் அவனுடைய ப்ரஸாதாதிசயத்தால் வருமென்றபடி. அதற்குப் [204]பிரமாணம். ஆத்மவாந்—ஆத்மாக்களையுடையவன்; என்றால் அப்படிப்பட்ட ஸுக்ருதத்தைப் பண்ணுமாத்மாக்களுடைய ஸ்வரூபம் ப்ரவிருத்தி முதலியவைகள் இவனிட்ட வழக்காயிருக்குமென்றபடி.

ஸுரேச:=தேவநாதன். என்றால்- அந்த ஸம்ஸாரிகளுக்குள் அற்பபலனை யபேக்ஷிக்கின்ற ப்ரம்மாதிகளுக்கு அவரவர் அபேக்ஷிதங்களைக் கொடுத்து ரக்ஷிக்குமென்றபடி [205]இப்படியே

---

(அ.) ஆத்மவாந்—தனது மஹிமையில் தானே பிரதிஷ்டிக்கப்பட் டிருப்பவன். இதற்குச்சுருதிப் பிரமாணம்.

---

[202] నైకస్తే తు పరే లోకే శ్రియా సార్ధం జగత్పతిః । ఆస్తే విష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ ॥

[203] అపి చేత్సుదురాచారః ..సమ్యగ్వ్యవసితో హి సః ॥

[204] ఏష ఏవ సాధు కర్మ కారయతి - తం యమేభ్యో లోకేభ్య ఉన్నినీషతి ॥

[205] యస్య ప్రసాదా దహమచ్యుతస్య భూతః ప్రజాసర్గకరో౽న్తకారీ । క్రోధాచ్చ రుద్రః స్థితిహేతుభూతః ॥

[శరణంశర్మ విశ్వరేతాః ప్రజాభవః]

ஶரணம் - ரக்ஷகன், ஶர்ம - ஆநந்தரூபன், விஶ்வரேதா: - ஸகல காரியமுந் தனக்காக உடையவன், ப்ரஜாபவ: - பிராணிகளெல்லாந் தனக்காடையவன், அஹ: - ஊனமில்லாதவன்,

(வி.) ஶ்ரீவிஷ்ணுபுராணத்தில் ப்ரும்மா சொல்லுகிறார். ௧

சரணம்=உபாயம்; அதாவது ஸகல ப்ராணிகளுக்கும் நிருபாதிகமான உபாயமாய் நின்றவனென்றபடி; இதற்கு ப்ரமாணம [206] ச்வேதாச்வதராதிகளில் கண்டுகொள்வது.

சர்ம=ஸுகம; பரம புருஷார்த்தமென்றபடி; இதற்கு ப்ரமாணம் [207] சாந்தோக்கியாதிகள்

(அவதாரிகை.) இனி அவன் உபாயமாமதையும் உபேயமாமதையுமே விசாரிக்கிறது:—

விச்வரேதா:=விச்வத்தைக் காரியமாயுடையவன். என்றால்: தன்னையறிந்து தன் திருவடிகளில் பரிசர்யை பண்ணுவதற்கென்றே பிரஜைகளுக்கு ஞானேந்திரிய கர்மேந்திரியாதிகளான ஸகலத்தையும் செய்பவனென்றபடி. இப்படியே சாஸ்திரத்தில [208] சொல்லுகிறது.

ப்ரஜாபவ:=பிரஜைகளெல்லாம் தனக்கேயானவன். அதாவது ஸகலமான பிரஜைகளும் அவன் தந்த அந்த உபகரணங்களைக்கொண்டே அவனுக்கு அபிமுகமாவதற்குத் தக்கவைகளாகின்றனவென்றபடி.

அஹ:=ஹீநமாயொருவனையுமுடைய 'னல்லன்' என்றால்— [209] கீதையிலருளிச்செய்தபடி இவன் விஷயத்தில் சிறிது சுகிருதம் செய்தவனும் துர்க்கதியடைய மாட்டானென்றபடி. அதவா, 'அஹ:' என்று பகலாகையால் அநாதியான அவித்தையென்கிற நித்திரையினின்று விழித்தவனுக்குப் பகலாய் நின்றவனென்றபடி.

(அ.) ப்ராஜாபவ:—பிரஜைகளுக்குப் பிறப்பிடம்.
அஹ:—பிரகாசரூபனாகையாலே பகல்போன்றவன்.

[206] తంహ దేవమాత్మబుద్ధిప్రసాదమ్ ముముక్షుర్వై శరణ మహం ప్రపద్యే ॥

[207] సర్వగన్ధస్సర్వరసః ॥ కం బ్రహ్మ ఖం బ్రహ్మ ॥

[208] ఏతస్మాజ్జాయతే ప్రాణో మనస్సర్వేన్ద్రియాణిచ । ఖం వాయుర్జ్యోతిరాపః పృథివీ విశ్వస్య ధారిణీ ॥

[209] నహి కల్యాణకృత్కశ్చిత్ దుర్గతిం తాత గచ్ఛతి ॥

[అహస్సంవత్సరో వ్యాళః ప్రత్యయస్సర్వదర్శనః అజస్సర్వేశ్వర]

సంవత్సరః-நாற்புறமும்வஸிப்பவன், వ్యాళః-தனக்காக்கிக்கொள்பவன், ప్రత్యయః- நம்பச்செய்பவன், సర్వదర్శనః - ஸகலத்தையுங்காட்டுமவன், అజః-நிரஸிப்பவன், సర్వేశ్వరః-ஸகலரையுமவேகமா யடைபவன்.

---

(வி.) ஸம்வத்ஸரः=வஸிப்பவன், அதாவது—இப்படி ஆத்மாவானது அவித்தையென்னும் நித்திரையைவிட்டு விழித்துக்கொள்ளுமபொழுது அதற்குத் தன் விஷயமான புத்தியைக்கொடுத் தாளுவதற்காகப் பிரதிக்ஷித்துத்திரியு மவனென்றபடி. இப்படி [210] கீதையில் அருளிச்செய்தான்.

வ்யாளः=அப்படி நேர்ந்தோரை வழியே நடத்தித் தன் அதிநமாக்கிகொள்ளுமவன்.

ப்ரத்யயः=அநந்தரம் அவர்களைத் தன்னிடத்தில் நம்பச்செய்பவன். இவ்விஷயத்தில் சுவேதாசுவதரம் முதலிய விடங்களில் [211]பிரமாணங்காண்க.

ஸர்வதர்சநः=அதற்குமே லவர்களுக்குத் தனது மஹிமையெல்லாவற்றையுங் காட்டுமவன். இதற்கும [212]வசநம்.

அஜः=(அஜ, கதிக்ஷேபணயோः) நிரஸிக்குமவன். அதாவது அவர்கள் தன்னை யணுகவொட்டாதபடிக்குத் தகைக்கின்ற ஸகலவிரோதிகளையும போக்குமவனென்றபடி. இப்படியே கீதையில் [213]அருளிச்செய்தான்.

ஸர்வேச்வரः=சக்தியுள்ளவைகளும் சக்திஹீநங்களுமான ஸகலப்பிராணிகளையும் சரணாகதியென்கிற அடைக்கலாத்திரத்தில்

---

(அ·) அஜः—பிறப்பற்றவன்.

---

[210] దదామి బుద్ధియోగం తం యేన మాముపయాన్తి తే ॥

[211] తం హ దేవమాత్మబుద్ధిప్రసాదమ్ ॥

[212] తమక్రతుం పశ్యతి వీతశోకో ధాతుః ప్రసాదాన్మహిమానమీశమ్ ॥ తస్యైష ఆత్మా వివృణుతే తనూం స్వామ్ ॥

[213] తేషామేవానుకమ్పార్థ మహమజ్ఞానజం తమః । నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేన భాస్వతా ॥ అహం త్వా సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి మా శుచః ॥

[సిద్ధస్సిద్ధిస్సర్వాదిః]

సిద్ధః-ஸித்தமானவன், సిద్ధిః-ஸாதிக்கக்கூடியவன்,
సర్వాదిః-எல்லாவற்றிற்கும் முதன்மையானவன்,

---

(வி.) அவைகளுடைய அநிஷ்டத்தைப் பரிஹரிப்பதற்கென்று, வேகமாய் வந்தாட்கொள்ளுமவன். இப்படி [214]ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டது.

ஸித்த:—அப்படி சரணாகதர்களுக்கு ஒரு ஸாதநவிசேஷத்தாலே ஸாதிக்கவேண்டாதபடி ஸித்தமாயிருப்பவன். இதற்குத் தைத்திரீயத்தில் [215]வசநங்காண்க.

ஸித்தி:—இதரோபாயங்களாலும் ஸாதிக்கக்கூடியவன். இதற்கு [216]வசநங்காண்க.

ஸர்வாதி:—இவர்களனைவர்க்கும் ஸகல புருஷார்த்தங்களையுமுண்டுபண்ண முதன்மையாய் நின்றவன். இதற்கு [217]ஸ்ரீராமாயணாதிகளில் வசநம் கண்டுகொள்வது.

ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யத்தில்

ப்ரதமசதகம்.

ஸம்பூர்ணம்.

---

(அ.) ஸர்வாதி:—ஸகல பூதங்களுக்கும் ஆதிகாரணன்.

---

214విభీషణేనాశుజగామసఙ్గమమ్ ॥

215న్యాసఇత్యాహుర్మనీషిణోబ్రహ్మాణమ్ ॥

216యదిచ్ఛన్తో బ్రహ్మచర్యఞ్చరన్తి ॥

217యేత్వాం దేవంధ్రువంభక్తాః పురాణంపురుషోత్తమమ్ । ప్రాప్నువన్తిసదా కామానిహలోకేపరత్రచ ॥

ஸ்ரீ:

# த்விதீயசதகம்.

[రచ్యుతః। వృషాకపిరమేయాత్మా సర్వయోగవినిస్సృతః।]

అచ్యుతః-நழுவவிடாதவன், వృషాకపిః-தர்மவராஹ ஸ்வரூபன், అమేయాత్మా - அளவிடப்போகாத ஸ்வபாவன், సర్వయోగవినిస్సృతః-ஸகல உபாயங்களாலும்கிட்டக்கூடியவன்,

(வி.) அச்யுதஃ—கீழ்ச்சொன்னபடி சரணாகதரானப் பிராணிகளைக் கைவிடாதவன். இதற்கு [218]வசநங்காண்க.

(அவதாரிகை.) அச்சுதனையே தர்மவராஹனென்பதாய் ஸமர்த்திக்கிறதுமேல்:—

வ்ருஷாகபிஃ—தர்மவராஹன். இதற்கு ருஷிகளின் நிருக்தம் பிரமாணம் [219]

அமேயாத்மா—அளவிடவொண்ணாத ஸ்வபாவன்.

[அதாவது ஆச்ரிதாளை அநுக்ரஹிக்கிற விஷயத்தில் [220]புருஷசூக்தத்திற்சொல்லியபடி அளவிடப்போகாதபெரியஸ்வபாவனாயிருக்குமென்றபடி.]

(அவதாரிகை.) அதாவதெப்படி என்றால்;—

ஸர்வயோக விநிஸ்ருதஃ—ஸகல உபாயங்களாலும் அடையக்கூடியவன்.

(அ.) வ்ருஷாகபிஃ—வ்ருஷஃ என்று தர்மத்தைச் சொல்லுகிறது, கபிஃ என்றால்-கம் என்று ஜலத்தைச்சொல்லி அதினின்றும் 'அயாத்' என்று உத்தரிப்பவனைச் சொல்லுகையால், கபிஃ என்று ஜலத்திலிருந்து பூமியை யெடுத்தவரைச் சொல்லுகிறது ஆக வ்ருஷாகபிஃ—என்று இரண்டும்சேர்ந்து ஒருநாமமாய் தர்மஸ்வரூபியான வராஹபகவானைச் சொல்லிற்றாகிறது. இதற்கு வியாஸபகவான் வசநமிருக்கிறது.

ஸர்வயோகவிநிஸ்ருதஃ—பலவகையாய் சாஸ்திரங்களிற் சொல்லிய ஒருயோகத்துக்கு மெட்டாதவன்.

[218]యస్మాన్న చ్యుతపూర్వోహమచ్యుతస్తేనకర్మణా। తస్యాహంన ప్రణశ్యామి ॥ సత్యజేయంకథంచన ॥

[219]కపిర్వరాహశ్శ్రేష్ఠశ్చ ధర్మశ్చవృష ఉచ్యతే। తస్మాద్వృషాకపింప్రాహ కశ్యపోమాంప్రజాపతిః ॥

[220]అతోజ్యాయాంశ్చపురుషః ॥ భూయాంశ్చాతో జనార్దనః ॥

[వసుర్వసుమనాస్సత్యస్సమాత్మాసంమితస్సమః।అమోఘః]

వసుః-வஸிப்பவன், వసుమనాః-ப்ரீதியில் மனமுடையவன், సత్యః-ஸாதுக்களுக்கேற்றவன், సమాత్మా-ஸமமான மனமுடையவன், సమ్మితః -அளவிடப்பட்டவன், సమః-ஸமமானவன்; అమోఘః-வியர்த்தமாகாதவன்

(வி.) [அதாவது:—சாஸ்திரோக்தமான உபாயங்களென்ன, தந்தாமுக்குத் தோற்றிய உபாயங்களென்ன எதினாலும் சிறிதும வருத்தமின்றி யடையக் கூடியவனென்றபடி. இப்படியே [221]சொல்லுகிறது.]

வஸு:—அவர்களிடத்தில் மஹாப்ரீதியோடு வஸிப்பவன்.

வஸுமநா:—ப்ரீதியில் மனமுற்றவன். என்றால், ப்ரீதியினிடத்தில் எவ்வளவு ப்ரீதியிருக்குமோ அவ்வளவு அவாளிடத்தில் ப்ரீதி பண்ணுமென்றபடி. கீதையிலிப்படி [222]அருளிச்செய்தான்.

ஸத்ய:—அந்தஸாதுக்களுக்கேற்றவன்.

ஸமாத்மா—ஸமமான மனமுடையவன்.

[அவர்கள் குணாதிகளால் சிறிது ஏறக்குறைய விருந்தபோதிலும் அதைக் கணிசிப்பவனல்ல னென்றபடி. [223]இப்படி கீதையில் அருளினானன்றோ?]

ஸம்மித:—அவர்களால் (அளவிடப்பட்டவன்.) இவ்விஷயம் தசரதாதிகளிடத்தில் [224]காணலாம்.

ஸம:—அவாளிடத்தில் ஸமமாயிருப்பவன்.

அமோக:—அவர்களுக்குத் தன்னிடத்தி லுண்டான ஸம்பந்தத்தைப் பலிப்பிக்குமவன். இவ்வாத்தம் [225]யுத்தகாண்டத்தில் காணலாம்.

(அ.) வஸு:—ஸர்வபூதங்களிலும் வஸிக்கிறானென்றும் இவனிடத்தில் ஸர்வமும் வஸிக்கிறதென்றும் வஸுஎன்கிறது. வஸுமநா:—ப்ரசஸ்தமான மனமுடையவன். ஸம்மித:—ஸகல அர்த்தங்களையுங்கொண்டு இவ்வளவென்று அளவிடப்பட்டவன். அதவா-அஸம்மித:-என்று ஒன்றாலும் அளவிடப்போகாதவனென்றுமாம்.

ஸம:—நிர்விகாரன்; லக்ஷ்மியோடு கூடியிருப்பவனென்றுமாம்.

[221]స్వబుద్ధిమాత్రనిజ్ఞాతః పరమాత్మాజగత్ప్రభుః । స్వైశ్వర్యానుభవప్రీతో జ్ఞాతారమనుసేవతే ॥

[222]సమహాత్మాసుదుర్లభః ॥

[223]సమోఽహంసర్వభూతేషు ॥

[224]ఊనషోడశవర్షో మేరామోరాజీవలోచనః ॥ మమాయత్తనయోనిజః ॥

[225]అమోఘన్దర్శనం రామనచమోఘస్తవస్తవ । అమోఘాస్తేభవిష్యన్తిభక్తిమన్తశ్చయేనరాః ॥

[పుండరీకాక్షో వృషకర్మా వృషాకృతిః॥రుద్రో బహుశిరా]

పుణ్డరీకాక్షః பரமபதவாஸிகளுக்குக்கண்ணானவன், వృషకర్మా-தர்மமானசெயலுடையவன், వృషాకృతిః-தர்மமான ஆகாரமுடையவன், రుద్రః - அழச்செய்பவன், బహుశిరాః-பன்முடியன்,

---

(வி.) புண்டரீகாக்ஷ:—ஸ்ரீபாரதத்திற் [226]சொன்னபடி புண்டரீகமென்கிற பரமபதவாஸிகளுக்கு நேத்திரம் போன்றவன். [227]இவ்வர்த்தம் சுருதியிலுங்காணலாம்.

வ்ருஷகர்மா=தர்மமான கர்மமுடையவன். என்றால் இவன் இப்படி பரம உத்க்ருஷ்டனா யிருந்தானாகிலும் கீழ்ச்சொன்னபடி நமக்கெல்லாம் நன்மையுண்டாக்குகையாலே தர்மமானகருமங்களைச்செய்யு மென்றபடி.

வ்ருஷாக்ருதி:—அப்படியே திருமேனியும் தர்மரூபமா யிருக்குமென்கிறது.

[அதாவது—தாபத்திரயத்தைப் போக்கும் அமுதவெள்ளம்போல் குளிர்ந்த செயலும் அழகிய வடிவமுமா யிருக்கையால், தர்மமானசெயலும் சரீரமுமுடைய னென்கிறதென்றவுமாம். இவ்விஷயமாய்ப் பிரமாணம் 228 காண்க.]

ருத்ர:=இப்படிப்பட்ட ரூபத்தையும் செயலையுங் காட்டிக் கண்டவர் சிந்தையைக்கரைத்து அவர்களை ஆநந்தக்கண்ணீருடன் அழும்படி செய்விக்குமவன். இப்படிக்கு 229 வசநங்காண்க.

பஹுசிரா:=பலதிருமுடியுடையவன்.

---

(அ.) புண்டரீகாக்ஷ:=ஹ்ருதயமென்கிறபுண்டரீகத்தில் வியாபிக்கிறவன். அல்லது அதில் காணப்படுகிறவன். வ்ருஷகர்மா—தர்மார்த்தமான கருமத்தைச் செய்பவன். வ்ருஷாக்ருதி:—தர்மத்துக்காகச் சரீரமெடுப்பவன். ருத்ர:=ஸம்ஹாரகாலத்தில் பிரஜைகளை யழச்செய்பவன்; துக்கஹேதுவைப் போக்குமவன் என்றுமாம்.

---

[226] పుణ్డరీకంపరన్ధామనిత్యమక్షరమవ్యయమ్ ॥ తద్భవాన్ పుండరీకాక్షః॥

[227] దివీవచక్షురాతతమ్ ॥

[228] విశ్వమాప్యాయయన్ కాన్త్యా పూర్ణేన్ద్వయుతతుల్యయా ॥

[229] ఆహ్లాదశీతనేత్రామ్బుః పులకీకృతగాత్రవాన్ । సదాపరగుణావిష్టో ద్రష్టవ్యస్సర్వదేహిభిః ॥

బభ్రుర్విశ్వయోనిశ్శుచిశ్రవాః। అమృతశ్శాశ్వతః
[స్థాణుర్వరారోహో మహాతపాః]

బభ్రుః-பரிப்பவன், విశ్వయోనిః - ஸகலரையுங்கலப்பவன், శుచిశ్రవాః-தூயகேள்வியன், అమృతః-அமுதமானவன், శాశ్వతః స్థాణుః - என்றுமழியாதான், వరారోహః-சிரேஷ்டமான பிராப்தியுடையவன்,

(வி.) பப்ரு:—அவ்வுருவத்தோடு பூமியைத் தாங்குகிறவன். இதற்கு வசநம் [230]காண்க.

(அவதாரிகை.) அந்தத்தர்மவராகன் பக்த ஸம்ச்லேஷ விசேஷத்துக்காக திருவனந்தாழ்வான் திருமேனியோடொக்க ஸர்வஸாதாரணமாயிருக்கும்படியைச் சொல்லுகிறது:—

விச்வயோநி:— தன்னைச்சேவிப்போரனைவரையும் தன்னோடு சேர்த்துக்கொள்ளுமவன்-

சுசிச்ரவா:—அவர்கள் ஹ்ருதய சுத்தியோடு சொல்லுமவைகளை அவசியங்கேட்பவன். இதற்கு வசநம் [231]காண்க.

(அவதாரிகை.) அவர்களுக்கு மிகவும் இனியனாய்க்கொண்டு ஜரைமரணம் முதலியவற்றை யொழிக்கையாலும், ஸர்வதா அநுபவித்தாலும் போரும் என்று பர்யாப்தி பிறவாதபடியிருக்கையாலும்,

அம்ருத:—அமுதமாயிருப்பவன். இதற்குப் பிரமாணம் [232]ல் காண்க.

இந்தமாதுர்ய சக்தியினது அற்பாம்சத்தைக் கொண்டு ஸமுத்திரஸாரத்தைக்கூட அமுதமென்று வழங்குகிறார்களன்றோ? ஆகையால் அதைவிட இவனுக்கு விசேஷம் சொல்லுகிறது.

சாச்வதஸ்த்தாணு:—நித்தியமாய் அழிவுறாம லிருப்பவன்.

அதாவது அந்த வமுதத்தைப்போல் அநித்தியமின்றிக்கே மறுபடி மீளவொட்டாமல் நித்திய போக்கியமாயிருக்குமென்றபடி.

ஆனதுபற்றியே, வராரோஹ:—உத்கிருஷ்டமானப் பிராப்தியையுடையவன்; என்றால்—மற்றபுருஷார்த்தங்களைப் பெறுவதென்பது நிக்

(அ.) சுசிச்ரவா:—நல்லநாமங்களுடையவன். அம்ருத:—மரணமற்றவன்.

230 యస్యసా సకలా పృథ్వీ ఫణామణిశిలారుణా । బిభర్తి మాలాం లోకానామ్ ॥

231 శుచీని శ్రావణీయాని శృణోమీహ ధనఞ్జయ ॥ న చ పాపాని గృహ్ణామి తతోఽహం వై శుచిశ్రవాః ॥

232 అమృతస్యేవ నాతృప్యన్ ప్రేక్షమాణా జనార్దనమ్ ॥

(வி.) ருஷ்டமாய் இவனைப்பெறுவதானது அதிஉத்க்ருஷ்டமா யிருக்குமென்றபடி. இவ்விஷயத்தில் [233]ல் பிரமாணங்காண்க.

[பரப்பிரம்மமானது பரம், வியூஹம், விபவம் என்று மூன்றுவித மென்பதாய் பாகவத ஸித்தாந்தம்; பரமாவது:—காரியமன்றிக் காரணமாய்மாத்திரமிருப்பதோடு காரியத்தோடு, ஸம்பந்தப்படாமல், ஷாட்குண்ய பூர்ணமாய் மஹார்ணவம்போல் விளங்கி, அநந்தமாய் நித்தியமாய் விளங்கும் போகவிபூதியை ஒருகுடையின்கீழ் ஆள்வதும், முக்தபுருஷர்களால் ஸேவிக்கப்படுவதும், உபாதி ரஹிதமுமான விருப்பு.

வியூஹமாவது:—மோக்ஷகாமர்களை யுண்டாக்கவேண்டி, அதற்காக ஸ்ருஷ்டிஸ்திதிலய மென்றும், சாஸ்திரமென்றும், அதின் பொருளென்றும், அதற்குப் பயனென்றும், தியாநமென்றும், ஆராதநமென்றும் லீலையென்று மிப்படி செய்யவேண்டும காரியத்துக்கு உபயோகமாய் பரஸ்வரூபத்தினது குணங்களைச் சிறிது பிரித்துக்கொண்டு லீலாவிபூதியை நிர்வஹித்து முக்திக்கு ஸாதநமாய்க்கொண்டு நான்குபடியா யிருக்குமிருப்பு

விபவமாவது:—அந்த வியூஹச்சாயையோடேதேவர் மனிதர் திர்யக்கு என்று சொலலுகிற தனது விபூதியைப்போலவே தன் இச்சையால் எடுக்கும் அவதாரவர்க்கம். இவ்விஷயம் ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதையில் [234]காணலாம்.

அப்படிப்பட்ட விபவாவதாரங்கள்தான், சிலவைகள் மத்ஸ்யம் கூர்மம முதலியவைகளைப்போல் ஸாக்ஷாத்தாயிருக்கும். மற்றும் சிலவைகள் ருஷியென்னும்படியான மஹிமைதங்கிய புருஷாளிடத்தில் (அதாவது பரசுராமன் வியாஸர்முதலானவாளிடத்தில்) அதிஷ்டித்திருக்கும். மற்றும் சிலவைகள், திரிபுர ஸம்ஹாரகாலத்தில் சிவனுடைய பாணத்தில் தனது சக்தியை ஆவேசிப்பித்தாப்போல் அந்தந்தகாரியகாலத்தில் தனது சக்தியை மாத்திரம் ஆவேசிக்கச்செய்யும். மற்றும் சிலவைகள் அர்ச்சாவிக்கிரஹம் முதலான வியக்திகளில்தானே நேராகவந்து அவதரிப்பதாயிருக்கும்; என்றிப்படி வியூஹம் நான்குவகை.

நல்லதாகட்டும்; பிரம்மாதிகளைப் பரம புருஷனோடு அபேதமாகச் சுருதியிற் சொலலுகையால் அவர்களையும் அவனது அவதாரமாகவே சொலலுவோமேயென்றால்—இது தெரியாதவாள் சொல்லும் விஷயம், ஏனெனில்-நாமும் மற்றும் புற்பூண்டுகளுங்கூட அவனோடு அபேதமாயிருப்பதாகச் சொல்லுகையாலே நம்மையும் அவைகளையுங்கூட அவனவதாரமென்றே சொல்லவேண்டியதாய் வரும். ஸர்வமும் அவனென்பதாகச சுருதி

233 ఏతే వై నిరయాస్తాత స్థానస్య పరమాత్మనః ॥

234 షాడ్గుణ్యవిగ్రహం దేవం భాస్వజ్జ్వలన తేజసమ్। సర్వతః పాణిపాదం తత్॥... పరమేతత్సమాఖ్యాతమేకం సర్వాశ్రయం విభుమ్ । ఏతత్పూర్వం త్రయం జ్ఞానాద్యైర్భేదితం గుణైః ॥ విద్ధ్యేతద్వ్యూహసంజ్ఞం వై నిశ్శ్రేయసఫలప్రదమ్ । ముఖ్యా

[మహాతపాః। సర్వగః]

మహాతపాః - பூஜிக்கும்படியான ஜ்ஞானமுடையவன், సర్వగః - ஸகலத்திலும் உளாபவன்,

---

(வி)யிருக்கிறதன்றே? மேலும் அவர்களை பகவதவதாரக் கணக்கில்விடாமலசேர்க்கவுமில்லை; அவர்களை தேவமனுஷ்யாளைபபோல ஸ்ருஷ்டிககு விஷயமானவர்களாகவும் சொல்லப்படுகிறது மற்றப்படி யவர்களை பகவதவதாரஙகளைக்காட்டிலும வேறுக [235]பகவத் சாஸ்திரங்களிற்சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விஷயம் ஆங்காங்கு வியவஸ்தைதை பண்ணப்படும்.]

(அவதாரிகை.) வராரோஹஃ என்னுமிதுவரையில்சொன்ன திருநாமங்களால வெகுசாய் பரத்வம் சொல்லப்பட்டது. பிராப்யவிஷயமாய் முதலில் தர்மபுத்திரர்கேட்ட 'கிமேகம்' இத்யாதி கேள்விகளுக்கும் அவற்றின் உத்தரங்களுக்கும் வெகுசாய் இதில்தானே விஷயங்கண்டுகொள்வது இனி 'ஸ்துவந்தஃ கம்' என்பது முதலாக உபாயவிஷயமாய்க் கேட்ட கேள்விகளுக்கும் உத்தரங்களுக்கும் விஷயமாக வியூகம் சொல்லப்படுமென்றறிக.

அதில் வாசுதேவனைப் பரனென்பதாய்க் கீழேவியாக்கியாநஞ் செய்யப்பட்டது. இப்பொழுது ஸங்கஷர்ணன் விஷயம் சொல்லுகிறது.

மஹாதபா:—பூஜ்யமான ஞானமுடையவன்.

[மேலே பகவானுடைய ஆறுகுணங்களும் சொல்லப்படுகின்றன. அதில் ஞாநம் பலம் என்கிற விரண்டும் ஸங்கர்ஷண மூர்த்திக்கு ஊர்ஜிதமானவைகள். அதில் பிராணிகளுக்கு நெடுநாளாய் உண்டான பிறவித்துயரத்தையாற்றவேண்டி அவைகளை ஸம்ஹரிக்கவேண்டுமென்கிற இச்சை அவருக்குண்டாகின்றமையால் அதையிங்கே ஞாநசப்தத்தாலே சொல்லிற்றென்றறிக.]

ஸர்வக:—(தரிக்கும்படியான ஸாமர்த்தியமென்கிற) பெலனைக் கொண்டு ஆத்மாவைப்போல தரித்தவனாய் ஸம்ஹரிக்கப்பட்டவைகளிலெல்லாஞ் (செல்பவன்.)

[இப்படி ஸங்கர்ஷிக்கிறான் (அதாவது ஸம்ஹரிக்கிறான்) என்பதைக் கொண்டுதான் ஸங்கர்ஷணனென்கிற திருநாமமுண்டாயிற்றென்று நிருக்தியிற் சொல்லப்பட்டதென்றறிக.]

(அவதாரிகை.) அநந்தரம் ஸம்ஹரிக்கப்பட்டவைகளை ஸ்ருஷ்டிக்க ஒருப்படுகிற ப்ரத்யும்ந மூர்த்தியைச்சொல்லுகிறது.

---

సువ్యత్తి భేదేనయు క్తం జ్ఞానాదిభిర్గుణైః॥ నానాకృతిచతద్వృద్ధి విభవమ్భ్యుక్తిము క్తిదమ్ ॥

[235]జ్ఞానోపదేష్టా భగవాన్ కపిలాఖ్యస్త్వగ్నోక్షుజః। విద్యామూర్తిశ్చతుర్వక్త్రో బ్రహ్మణైలోకపూజితః ॥ తదంశభూతో వై యస్యవిశ్వవ్యజ్ఞానలక్షణః ॥

[స్వర్వవిద్భానుర్విష్వక్సేనోజనార్దనః। వేదో]

సర్వవిత్ - ஸகலத்தையு மடைபவன், భానుః-பிரகாசிப்பவன்,
విష్వక్సేనః - எப்புறத்திலும்ஸேனையையுடையவன், జనార్దనః-
ஜநங்களைப்பீடிப்பவன், వేదః-அடைவிக்குமவன்,

---

(வி.) [ஸர்வவித்—ஸகலகாரிய வர்க்கத்தையும (ஸ்ருஷ்டிசெய்து) லபிக்கிறவன்.

[ஜகத்தைப் படைக்கும் க்ரியா சக்தியினது விலாஸமான ஐசுவரிய மிங்கே சொல்லப்பட்ட தென்றுணர்க.]

பாநு:—ஸகலத்தையும் நிருமித்தாலும் தான் சிறிதும் விகார மடையாமல் (விளங்குமவன்.)

[இதனால் அவிகாரமென்னும் வீரியஞ்சொல்லப்பட்ட தென்றுணர்க]

(அவதாரிகை.) அநந்தரம் ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகளை ஸ்தாபிக்கின்ற அநிருத்தனைச் சொல்லுகிறது:

விஷ்வக்ஸேந:—(இஸேந வாத்தநதே இதி-ஸேநா:) அதாவது ஸ்வாமியோடிருப்பவைகள். இதனால் ரக்ஷகனைபபற்றிக் கிடக்கின்ற ரக்ஷ்யகோடிகளைச் சொல்லிற்று. அப்படிப்பட்ட ரக்ஷ்யவர்க்கங்கள் (விஷ்வக) எங்குமிருக்கப்பெற்றவனை யாவன், அவனை விஷ்வக்ஸேநனென்கிறது.

ஜநார்த்தந:—ரக்ஷணாவிரோதிகளை நிரபேக்ஷமாக நிரஸிக்குமவன்.

[இவ்வர்த்தம் [236]ஸ்ரீபாரதத்தில் காண்க. இங்கே அபேக்ஷையின்றி செய்கையென்கிற தேஜஸ் சொல்லப்பட்ட தென்றுணர்க. பகவானுக்கு எங்கும் மறைவின்றி ஸகல குணங்களும் பரிபூர்ணமா யிருந்ததேயாகிலும இங்கேசொன்ன குணவ்யவஸ்த்தை மூர்த்திகள்தோறு மென்றுணர்க இப்படி மூலஸம்ஹிதையில் ஓதுகிறது.)

(அவதாரிகை.) மறுபடியும் உத்தேசக்கிரமமாய் முதலில் ஸ்ரீஸங்கர்ஷணாழ்வானுடைய சாஸ்திரதாத்ருத்வம சொல்லப்படுகிறது.

வேத:—(அநேந விந்தந்திதி) என்றால் ஸ்ருஷ்டியால் கரணங்களைப்பெற்ற ஸகலரும் தன்னிடத்தில் சாஸ்திரங்களை (லபிக்குமபடி) யானவன். இப்படியே [237]ஓதுகிறது.

---

(அ.) விஷ்வக்ஸேந:—நால்புறத்திலும (ருபெபடியான தைத்திய) ஸேனையுடையவன்.

---

[236] దస్యూనామర్దనాజ్జనార్దనః ॥

[237] వేదాద్వేదాగ్య్ర పశ్చాచ్చతిష్ఠ ॥

వేదవిదవ్యంగో వేదాంగో వేదవిత్కవిః॥లోకాధ్యక్షస్సురాధ్యక్షో ధ
[ర్మాధ్యక్షః]

వేదవిత్-வேதார்த்தமறிந்தவன, అవ్యఙ్గః-அங்கத்தால்குறையாதவன், వేదాఙ్గః -வேதத்தை அங்கமாயுடையவன், వేదవిత్-வேததர்மத்தை அநுட்டிப்பிக்குமவன், కవిః- இனியவைகாண்பவன், లోకాధ్యక్షః- லோகத்தைக்கண்டறிபவன், సురాధ్యక్షః- தேவர்களைக்கண்டறிபவ ன், ధర్మాధ్యక్షః-தருமங்களைக்கண்டறிபவன்.

(வி.) [ஆனதுபற்றியேதான் உபாயமென்றும் ஆகமமென்றும், மார்க்கமெ ன்றும், நடத்துமவனென்றும். பிராம்மணனென்றும், ஆசாரியனென்றும் ஸங்கர்ஷண சப்தத்துக்குப் பொருள்சொன்னார்கள்.]

வேதவித்=வேதார்த்தத்தை ஸம்சயப் பிரமாதிகளொன்று மின்றிகே யறிபவன். இபபடி கீதையில் [238]அருளிச் செய்தான்.

அவ்யங்கஃ=சநதஸ், கல்பம் முதலிய வேதாங்கங்களைத் தா னே கற்பிக்கையாலே அவற்றால் குறைவற்றவன்.

வேதாங்கஃ=அநநத சாகைகளான வேதங்களைச் சரீரமாயு டையவன்.

[என்றால், வேதங்களை யறிந்தவன் புத்திக்கு எட்டுகிறானென்றபடி. இதில் சுருதிமுதலியன [239]பிரமாணம். சுருதியை அவனது ஆக்ஞையாகச் சொல்லுகையாலே வேதத்தை ஆக்ஞையாகவுடையனென்றுமாம்]

வேதவித்=வேதமென்று வேதார்த்தத்தைச்சொல்லி, அ தை 'வித்' அநுஷ்டிப்பிக்கிறபடியால் அவ்வழியாலே லபிக்கிறா னென்று 'வேதவித்' என்று ப்ரத்யும் நாழ்வானைச்சொல்லுகிறது. ஆனதுபற்றிதான் இவரைத் தர்மமென்றும் பிரகாசப்படுதது மவ ரென்றும் ப்ரவர்த்திப்பிக்கிறவரென்றும் சொலலுகிறது.

கவிஃ=இனியதான வைகளைக்காண்பவர். இவ்வர்த்தத்தையே மேல் மூன்று திருநாமங்களா லுபபாதிக்கிறது. லோகாத்யக்ஷஃ— ஸுராத்யக்ஷஃ—தர்மாத்யக்ஷஃ=லோகமென்று தர்மாநுஷ்டாநத் துக்கு யோக்கியரைச்சொல்லி 'ஸுர' என்று அவர்களாராதிக்கும் தேவதைகளைச்சொல்லி, 'தர்ம' என்று அவற்றின் ஸாதநத்தைச்

(அ.) அவ்யங்க:= ஞானத்தால் குறைவற்றவன்.

[238] వేదవిదేవచాహమ్ ॥

[239] నావేదవిన్మనుతే తం బృహన్తమ్ ॥ విధూస్తు తే వేదమయం శరీరమ్ ॥

[కృతాకృతః।చతురాత్మా చతుర్వ్యూహశ్చతుర్దంష్ట్రః ]

కృతాకృతః பிரவ்ருத்திதர்மமும் நிவ்ருத்திதருமமுமானவன், చతురాత్మా - நான்குரூபன், చతుర్వ్యూహః - நான்குவியூஹ மானவன், చతుర్దంష్ట్రః-நான்குபற்களுடையவன்,

---

(வி.)சொல்வி இவைகட்கெல்லாம் 'அத்தியக்ஷ:' என்று அதருஷ்ட ஸ்தானத்தி லிருந்து பலனைத்தரும் அநிருத்தாழ்வானைச் சொல் லுகிறது.

ஆனதுபற்றியே இவருக்கு "தர்மக்ஞரொன்றும், உபாயக்ஞரொன் றும் அத்யக்ஷரொன்றும், ஸத்யஸந்தரொன்றும், இவர்தான் புருஷனுக்கு, ஞாநத்தைத்தருகிறவரொன்றும்" திருநாமங்க ளுண்டாயிருக்கின்றன.]

க்ருதாக்ருத:—கிருதாகிருதஸ்வரூபி.

[என்றால்: ஸம்ஸாரத்தில் பிரவர்த்திப்பித்து அநித்தியமான பல னைத்தருகையால் க்ருதமென்று பிரவ்ருத்தி தர்மமாய், ஸம்ஸாரத்திலிரு ந்து நிவ்ருத்திப்பித்து நித்தியமான பலத்தைத்தருகையாலே அக்ருதமெ ன்று நிவ்ருத்தி தர்மமாய் இவ்விரண்டு ரூபமாயும் அநிருத்தாழ்வா னிருக்கி றானென்றபடி.]

சதுராத்மா—இப்படி வாசுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும் நந், அநிருத்தன் என்று நான்குவிதமா யிருப்பவன்.

(அவதாரிகை.) ஒருவனெப்படி நான்குவிதமா யிருக்கக்கூடுமென் னில் சொல்லுகிறது.

சதுர்வ்யூஹ:—நான்குவிதமான மூர்த்திகளையுடையவன்.

[என்றால்—கீழ்ச்சொன்னப் பிரயோஜநத்துக்காகவும் தியானிக்கவே ண்டும் ஸ்வரூபம் இன்னதென்று தெரிவிப்பதற்காகவும் கல்லியாணகுண ங்களாறையும் மொத்தமாயும்பிரித்தும் அங்கீகரித்து அந்தந்தகுணங்களுக் குப் பிரகாசகமா யேர்ப்பட்ட அவயவம், வர்ணம், ஆபரணம், ஆயுதம், வா ஹநம், த்வஜம் முதலானவைகளோடும், ஜாக்கிரத் முதலான நான்கு அவ ஸ்தைகளோடுங்கூடி நான்குவகையாய்ப் பிரிக்கப்படுகிறானென்றபடி.]

சதுர்தம்ஷ்ட்ர:—(இப்படிப்பட்ட வியூஹ மூர்த்திகளுக்குக் காரணமான பரஸ்வரூபத்தில்) நான்குபற்களையுடையவன்.

---

(அ) க்ருதாக்ருத:—காரியமாயும் காரணமாயு மிருப்பவன். சதுராத்மா— ஸ்ருஷ்டிகாலத்தில் பிரம்மா, தக்ஷாதிகள் காலம் மற்றும் பிராணிகள், என்கிற நான்கு விபூதிகளை யுடையவன். இதற்கு விஷ்ணுபுராண வசனங் காண்க. சதுர்வ்யூஹ:—வியாஸ வசநத்தின்படி வாஸுதேவாதிமூர்த்தி பேதத்தாலே தன்னை நான்குபடியாக வகுத்து ஸ்ருஷ்டி முதலியவைகளை ச்செய்பவன். சதுர்தம்ஷ்ட்ர:—ந்ருஸிம்ஹசரீரத்தில் நான்குகோரப்பற்களு டையவன்.

[చతుర్భుజః॥భ్రాజిష్ణుర్భోజనంభోక్తా సహిష్ణుః]

சதுர்ப்புஜ:-நாலுதோளுடையவன், ப்ராஜிஷ்ணு:-பிரகாசிப்பவன், போஜநம்-புஜிக்கப்படுமவன், போக்தா-புசிப்பவன், ஸஹிஷ்ணு:-ஸஹிப்பவன்,

---

(வி.) [நான்குபற்களுண்டாயிருப்பது, மஹாபுருஷ லக்ஷணமென்று [240] ஸ்ரீராமாயணத்தில் சொல்லுகிறது.]

சதுர்ப்புஜ:=அப்படியே (நான்கு திருத்தோள்களுடையவன்.)

[பரஸ்வரூபம் இப்படியேயன்றோ [241] விஷ்ணு புராணாதிகளில் சொல்லப்படுகிறது?]

ப்ராஜிஷ்ணு:=இவையெல்லாவற்றோடும் தன்னையுபாஸிப்பவருக்குப் (பிரகாசிப்பவன்.)

போஜநம்=அவர்களால் சுகமாய் அநுபவிக்கப் படுமவன்.

போக்தா=தானும் அவநகந்து ஸமர்ப்பித்ததை அற்பமாயினும் அமுதம்போல் திருவுள்ளப்பற்றுமவன்.

[இப்படி கீதையில் [242] அருளினான்.]

ஸஹிஷ்ணு:=ஸஹிக்கும ஸ்வபாவன்.

[என்றால்-அவர்களிடத்தில் ஆதரத்தாலே, அவர்கள் முன்னும் பின்னுமாய் ஸம்பாதித்தவைகளும், புத்திபூர்வகமாயும் புத்தியறியாமலும் எப்பொழுதும் எல்லாப் பிரகாரங்களாலும் சேர்க்கப்பட்டவைகளும், விதிநிஷேதரூபமான தன் ஆக்ஞையைக்கடந்து செய்தவைகளும், ஸாதாரணமானவைகளும், அஸாதாரணமானவைகளும், தன்னையவமானப் படுத்தல் நிந்தித்தல் முதலானவைகளும், எல்லாவற்றையும் பொறுக்கின்ற தன்னாலும் பொறுக்கமுடியாதவைகளும், தனது பக்தவிஷயத்தில் பண்ணவைகளும், இவ்வளவென்று கணக்குக்கு அகப்படாமல் அபரிமிதமானவைகளுமான அபராதங்களை யெல்லாம் ஸஹிப்பவனென்றபடி. இப்படிப்பட்ட பொறுமைக்கு என்ன ஹேதுவென்றால் இது அவனுக்கு ஸ்வபாவமென்கிறது 'ஷ்ணு' என்கிற விகுதி.]

(அவதாரிகை.) இப்படி வியூஹஞ்சொல்லப்பட்டது. இனி விபவங்களைச் சொல்லுவதாய், முதலில் திரிமூர்த்திகளுக்குள் ஒன்றான விபவாவதாரத்தைச் சொல்லுகிறதுமேல்:—

---

(அ) ஸஹிஷ்ணு:=(ஹிரண்யாக்ஷாதிகளை) ஜயித்தவன்.

---

[240] చతుర్దశసమద్వన్ద్వః చతుర్దంష్ట్రశ్చతుర్గతిః ॥

[241] చతుర్భుజముదారాఙ్గం చక్రాద్యాయుధభూషణమ్ ॥

[242] అశ్నామి ప్రయతాత్మనః ॥ భోక్తారం యజ్ఞతపసామ్ ॥

జగదాదిజః॥అనఘోవిజయోజేతావిశ్వయోనిఃపునర్వసుః ॥

[ఉపేంద్రో]

జగదాదిజః-ஜகத்திற்கு ஆதியிலிருப்பவன், అనఘః-பாவமற்றவன், విజయః—ஜயகாரணன், జేతా-வெல்பவன், విశ్వయోనిః-ஜகத்காரணன், పునర్వసుః—மறுபடியும் வஸிப்பவன், ఉపేంద్రః—இந்திரனைக்கிட்டினவன்,

---

(வி) ஜகதாதிஜः—ஜகத்துக்கு ஆதியாய் நின்ற மூவருள் ஒருவனானவன்.

[இப்படியே 243பிரம்மாசொன்னார். இன்னும் பாரதாதிகளிலும் சொல்லுகிறது.]

அநக:—(இப்படி ஸம்ஸார மண்டலத்தில் பிறந்தாலும்,) பாபத்தை யெதிர்ப்பவன். விஜயः—விஜயநாமவன்.

(என்றால் பிரம்ம ருத்திராளென்கிற மற்ற விரண்டு மூர்த்திகளும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரரூப வியாபாரங்களால் ஜயம்பெறுவதும் இவனாலென்றபடி. இப்படியே பாரதவசநம் 244இருக்கிறது.)

ஜேதா—அவர்களையுந் தன்னபிப்பிராயப்படி யிருக்கும்படி வெல்லுமவன். விச்வயோநி:—அவர்முகமாய் காரியப் பிரபஞ்சத்திற்குக் காரணமானவன்.

புநர்வஸு:—மறுபடியும் அந்தப் பிரம்மாதி தேவர்களிடத்தில் அந்தராத்மாவாய்வஸிப்பவன்·இதற்குப்பிரமாணம்245ல் காண்க.

(அவதாரிகை) அநந்தரம் அதிதிபுத்திரர்களில கடைசியாய்ப் பிறந்த அவதாரத்தைச் சொல்லுகிறது.

உபேந்திர:—இந்திரனைத் தம்பியாய்க்கொண்டு கிட்டியவன். இதற்குப் பிரமாணம் 246காண்க.

---

(அ.) புநர்வஸு:—மறுபடியும் மறுபடியும் க்ஷேத்திரஜ்ஞனென்கிற ஜீவனாகச் சரீரங்களில் வஸிக்குமவன். உபேந்த்ர:இந்திரன் தம்பியானவன், அல்லது இந்திரனில சிறந்தவன்.

---

243యస్య ప్రసాదాదహమచ్యుతస్య భూతః ప్రజాసృష్టికరోన్తకారీ । క్రోధాచ్చ రుద్రస్స్థితిహేతుభూతో యస్మాచ్చ మధ్యే పురుషః పరస్తాత్ ॥

244తదాదర్శితపన్థానౌ సృష్టిసంహారకారకౌ ॥

245దేవానాం బన్ధునిహితం గుహాసు ॥ తవాన్తరాత్మా మమ చ యే చాన్యే దేహిసంజ్ఞితాః ॥

246జఘన్యజస్స సర్వేషామాదిత్యానాం గుణాధికః । ద్వాదశైవాదితేః పుత్రాః శక్రముఖ్యా నరాధిప ॥ తేషామవరజో విష్ణుః యత్ర లోకాః ప్రతిష్ఠితాః ॥

వామనః ప్రాంశురమోఘశ్శుచిరూర్జితః। అతీంద్రస్సంగ్రహస్సర్గ-

వామనః- வாமநன், ప్రాంశుః-உயர்ந்தவன், అమోఘః-பழுதாகாதவன், శుచిః-பரிசுத்தன், ఊర్జితః - பெலமுடையவன், అతీంద్రః-இந்திரனைக்கடந்தவன், సంగ్రహః- கிரஹிக்கப்படுமவன், సర్గః-ஸ்ருஷ்டிக்கப்படுமவன்,

(வி.) வாமந:=(அவனே இந்திரரக்ஷணார்த்தமாக மஹாபலியின் வேள்வியில்) அழகியதான தன் திருமேனி காந்தியால் சுகத்தைத் தருமவன். இதற்கு சுருதி[247] காண்க.

ப்ராம்சு:=எவ்விடத்திலும் தானேவியாபித்தவன். இதில் [248] பிரமாணங்காண்க. இந்த விருத்தாந்தத்தை யுட்கொண்டு தான் வேதமும் [249]கோஷிக்கின்றது.

அமோக:=(பலியையும் இந்திரனையும் இப்படி வித்தியாஸமின்றி கிருதார்த்தமாகச் செய்தபடியால்) வியர்த்தம பண்ணாதவன். இதற்குப் பிரமாணம் [250]காண்க.

சுசி:=இப்படி உபகாரம்பண்ணி யிருக்கச்செய்தேயும் பிரத்தியுபகாரத்தை யபேக்ஷியாமலிருப்பவன்.

ஊர்ஜித:=(நமுசிமுதலிய சத்துருக்களை நிரஸிப்பதில்) திடமான பெலமுடையவன்.

அதீந்த்ர:=இந்திரனுக்குத் தம்பியாய்த்தோன்றினாலும் ஐச்வரியத்தாலும் சேஷ்டிதத்தாலும் அவனை யதிசயித்திருக்குமவன் இதில் [251]பிரமாணங்காண்க.

ஸங்க்ரஹ:=இப்படி யிருக்கச்செய்தேயும் பக்தர்களால் யாதொருவருத்தமு மின்றி ஸேவிக்கப்படுகிறவன்.

ஸர்க:=திரிவிக்கிரமனாய் உலகமெங்கும் பரவுமபடியான திருவடிகளுடன் இப்படி அவர்களுக்காகத் தானே தன்னாலே ஸ்ரு,

[247] ద్రష్టారో హ్యస్య నామాని సుఖానినయతి ॥

[248] త్రీన్లోకాన్ యే తు పతితే హస్తే వామనో భూత్వా వామనః। తస్య విక్రమతో భూమిం చ న్ద్రాదిత్యౌ స్తనాన్తరే ॥ నభః ప్రక్రమమాణస్య నాభ్యాం స్తౌ సమవస్థితౌ ॥

[249] ఇదం విష్ణుర్విచక్రమే ॥ త్రీణిపదా విచక్రమే విష్ణుః ॥ విచక్రమే పృథివీమేష ఏతాం క్షేత్రాయ విష్ణుః ॥

[250] అనుగ్రహార్థాపి బలేరనుత్తమం చకార యశ్చేన్ద్రపదోపమం ధనాత్ । సురాశ్చ యజ్ఞాంశభుజః ॥

[251] అతివాయ్వింద్రకర్మాణామ్ ॥

[ధృతాత్మా నియమో యమః॥ వేద్యో వైద్యస్సదాయోగీ వీరహా॥]

ధృతాత్మా-ஆத்மாக்களைத் தரிப்பவன், నియమః-அடக்குமவன், యమః-திருத்துமவன், వేద్యః-அறியக்கூடியவன், వైద్యః-வித்தைகற்றவன், సదాయోగీ - எப்பொழுதும் ஒழித்திருப்பவன், వీరహా - வீரரை ஜெயிப்பவன்,

---

(வி.)ஷ்டிக்கப்பட்டவன். இப்படியே ஸ்ரீராமாயணத்தில் [252]வசநங் காண்க.

த்ருதாத்மா—இப்படி தன்னைத்தந்து ஆத்மாக்களைத் தரிக்கிறவன்.

நியமः—அந்த ஆத்மகோடிகளுக்கு எதிரிகளான பலிசக்கிரவர்த்தி முதலானோரை அடக்கியாண்டவன்.

யமः—இப்படி ஸகலத்தையும் விரோதமின்றி அநுகூலமாயிருக்கும்படி செய்பவன்; இதற்கு வசநம [253]காண்க.

வேத்யः—(இப்படி யவதரித்து, இந்திரியத்துக்கு விஷயமாகாதவைகளையும் பிரகாசிப்பிக்கையாலே யாவராலும் எளிதில்) அறியும்படியானவன்.

வைத்யः—(இப்படியடையுமவர்களை நலிகின்ற ஸம்ஸாரத்தைப்போக்கும் மருந்தான வித்தையைக்) கற்றவன். இதில் விஷ்ணு தர்மம் [254]பிரமாணம்.

ஸதாயோகீ—இப்படி இவ்விஷயத்தில் எப்போதும் விழித்திருப்பவன். இதற்குப் பிரமாணம் [255]காண்க.

வீரஹா—(தன்னையறியப் புகுந்தபொழுது அறியவொட்டாமற் றடைசெய்யும்) வீரரைச்செகுப்பவன். இதற்குக் கீதையில் [256]வசநங்காண்க.

---

[252] నస్పృష్టాత్మా సుహృత్సు చ ॥

[253] యః పృథివీమన్తరో యమయతి ॥ య ఆత్మానమన్తరో యమయతి ॥ యమో వైవస్వతో రాజా యస్తవైష హృది స్థితః । తేన చేదవివాదస్తే మా గఙ్గాం మా కురూన్ గమః ॥

[254] మేరుపన్నరమాత్రో'పి ॥

[255] య ఏష సుప్తేషు జాగర్తి ॥

[256] తానహం ద్విషతః క్రూరాన్ సంసారేషు నరాధమాన్ । క్షిపామ్యజస్రమశుభానాసురీష్వేవ యోనిషు ॥

[మాధవో మధుః। అతీంద్రియో మహామాయో మహోత్సాహో మహా]

మాధవః- மா என்கிற வித்தைக்கு நாதன், మధుః-தேனைப் போன்றவன், అతీన్ద్రియః - இந்திரியங்களை கடந்தவன், మహామాయః, பெருமாயன், మహోత్సాహః- மஹத்தான உத்ஸாஹமுடையவன்,

(வி.) மாதவः=(அநந்தரமதன விஷயமான பரப்ரம்ம வித்தையைப் பிரவர்த்திப்பிக்கிறு றுகையாலே) 'மா' என்கிற வித்தைக்கு நாதன். இதற்கு [257]வசநங்காண்க.

மதுः=(அநந்தபரவித்தையில் நிஷ்டையுடையோருக்குத்)தேன் போலினியன. இதில் [258]பிரமாணங்காண்க.

(அவதாரிகை) அநந்தரம் மதுரமான தேன கடல்போன்ற ஸ்வரூபருான இந்த குணவிசிஷ்ட பகவானிடத்தில் கீழ்ச்சொன்ன பாவியூஹவிபவங்களுக்குக் காரணமான ஷாட்குண்யத்தைச் சொல்லுகைக்குமுதலில் ஸ்வரூபத்தை சோதிக்கிறது.

அதீந்த்ரியः=ஞானத்துக்கு உபகரணமான இந்திரியம் முதலியவைகளெல்லாவற்றையுங் கடந்தவன்.

(அவதாரிகை) அதாவதெப்படி?

மஹாமாயः=பெருமாயன.

[என்றால் தன தாளடைந்தோரை யொழிந்த மற்றையோரெல்லாருக்கும் திரைபோன்ற மாயையால் மூடப்படுகையாலே காணக்கூடாதவனென்றபடி; இதற்கு[259]வசநங்காணக. இங்கே மாயையென்பது பொய்யையல்ல. மற்றபடி இவ்விஷயம் மேலேசொல்லப்படுகிறது; அங்கேகாணலாம்.]

(அவதாரிகை.) ஸாங்கியர்கள் ஆத்மாவை ஞானரூபனென்று ஒப்புக்கொண்டார்களாகிலும், கர்த்தாவல்லனென்றும், தாமரையிலை நீர்போல பிரகிருதியிலொட்டாமல உதாஸீனனாய் அஸங்கனாயிருக்குமென்றார்கள். அப்படியில்லை யென்கிறது இதில்:—

மஹோத்ஸாஹः=கர்த்ருத்வமென்னும் பெரிய ஐசுவரியமுடையவன.

[ஸ்வாதந்திரிய ரூபமான இந்த கர்த்ருத்வத்தைக்கொண்டுதான் பகவானவர்; ஸமஸ்தகாரியங்களிலும் ஒருவருடைய ஏவுதலின்றிக்கே தடையில்லாமலிருக்கின்ற தனதுஸங்கல்ப லேசமாத்திரத்தாலே போகர

[257]మావిద్యా చ హరేః ప్రోక్తా తస్యా ఈశో యతో భవాన్ । తస్మాన్మాధవనామాసి ధవస్స్వామీతి శబ్దితః ॥

[258]మధ్వస్య త్సః ॥ ప్రియో హి జ్ఞానినో ఽత్యర్థమ్ ॥

[259]గుణమయీ మమ మాయా దురత్యయా ... ॥

[మహాబలః॥మహాబుద్ధిః]

మహాబలః-மஹத்தான பெலன்கொண்டவன்,

మహాబుద్ధిః-மஹாஞானவான்,

(வி.) தாக்களான ஸகலப் பிராணிகளும்; அநுபவித்ததும் அநுபவியாததுமான விசித்திர கர்மங்களினது தாரதம்மியத்துக்குத் தக்கபடி போகமாயும் அதன் ஸாதநமாயும் பரிணமிக்கின்ற நாநாவிதமான ஜகத்துக்களை அபரிமிதமாய் முன்செய்யாத மாதிரியாகச் செய்யவல்ல சக்தியுடையனாயிருக்கச்செய்தேயும், முன்போலவே ஸ்வபாவநியமத்தையே அநுஸரிக்க வேண்டுமென்பதை மேற்போட்டுக் கொள்ளுகிறான். இந்த சக்தி லேசத்தினது அணுமாத்திரமான அணிமைமுதலிய ஐசுவரியந்தான், பிரம்மாதிகளுக்கு அபரிமிதமான வைபவத்தை யுண்டுபண்ணிக்கொண்டு விளங்குகின்றது.)

மஹாபலః=ஸஹாயாபேக்ஷையில்லாத மஹத்தான பெலனுடையவன்.

[இந்த பலத்தைக்கொண்டன்றோ இவன் அபரிமிதமான செயலைச் செய்தாலும், சிரமந்தட்டாமல் தனது மஹிமையிலிருந்தபடியே மற்றோராதாரத்தை யபேக்ஷியாமல் ஒருவராலும் செய்தற்கரிய வியாபாரங்களையும் எப்போதும் செய்துகொண்டு ஸகலத்தையும் சரீரம்போல் தரிக்கின்றான்? இப்படியே மூலஸம்ஹிதையில் சொல்லுகிறது. இந்த பலத்தில் லேசமாத்திரந்தான் உலகத்தில் ஜலத்திலும் காற்றிலும் மலைகளிலும் புவியிலு மிருக்கின்றது.]

(அவதாரிகை) ஜகத்காரண வஸ்துவுக்கு ஸாவக்ஞத்வ மில்லையென்றுசொல்லும் மதத்தைக்கண்டிக்கிறதுமேல:—

மஹாபுத்திః=மஹத்தான ஞானமுடையவன்.

(இந்த ஞானந்தான், ஸர்வதேசங்களிலும ஸர்வகாலங்களிலும் ஸர்வஸ்வபாவங்களிலும் தூரமாயும் கிட்டமாயு மிருக்கிற ஸகலத்தையும் விஷயீகரிக்கும். ஸர்வத்தையுமறியுமதானகையாலே ஸம்சயம் பிரமமுதலியவையற்று யதார்த்தமாயிருக்கும் கிலேசம் கருமவிபாகம் முதலியவைகளோடு ஸம்பந்தப்படாமையாலும் ஸ்வபாவஸித்தமா யிருக்கையாலும் நித்தியமாயிருக்கும்; கண்முதலிய கரணங்களை அபேக்ஷியாததா யிருக்கும்; சிலகாலத்தில் ஈசுவர ஸ்வாதந்திரியத்தாலே அக்கரணங்களை யபேக்ஷிக்கவுமபேக்ஷிக்கும்; புண்டரீகாக்ஷனென்றும், சுசிச்ரவஸ் என்றும் சொல்லப்பட்டதனறோ? ரூபம் ரஸம் முதலியவைகளைக் கிரகிக்கும்பொழுது கரணங்களிருந்தே யாகவேண்டுமென்கிற நியமங்கிடையாது எனெனில்-ஸகலத்தாலும் ஸகலகாரியங்களுஞ் செய்யவடுக்கும. ஸாதாரணமாய் திரியக் ஜாதியான ஸர்ப்பங்கூட கண்ணினாலேயே காணபதோடு கேட்கிறதன்றோ? அப்படியிருக்க இது ஸர்வசக்திக்குக்கூடாதா? இப்படியே 260

260 సర్వతశ్శ్రుతిమాంల్లోకే యో హ్యవ్యగ్రోభవన్ గిరః ॥

[మహావీర్యోమహాశక్తిః]

మహావీర్యః-மஹத்தான வீரியங்கொண்டவன்,

మహాశక్తిః-மஹாசக்தியுடையவன்,

(வி.) ஜய ஸம்ஹிதையில் சொல்லுகிறது. இன்னும் இந்த ஞானம் விசதமாயிருக்கையாலே ஸகலத்தையும் கையிலகது நெல்லிக்கனிபோல ப்ரத்யக்ஷமாய்க்காணும். ஸமஸ்தத்தையும் நிர்வஹிக்கையாலே அமோகமாயிருக்கும். இப்படி [261]சுருதிமுதலியன. ஸ்ரீமந்நாதமுனிகளு மிப்படியே [262]அருளிச்செய்தார்.

சிலர் கண்ணாலேயே ஸகலத்தையுங் காண்கிறானென்று ஸர்வக்ஞனை பகவானை அவமதித்தார்கள். அது பவுத்தமதத்தைச் சேரக்கடவது. ஏனெனில்- அப்படி ஒப்புக்கொண்டால் ஸகல சாஸ்திரமும் விரோதிக்குமன்றோ? கட்செவியான ஸர்ப்பந்தொடங்கிய காக்கை கோட்டான் முதலியவைகளிடத்திலும், மந்திரம், ஸித்தஔஷதி தபோமஹிமை முதலியவைஸித்திக்கப் பெற்றவாளிடங்களிலும் அந்தந்த கரணங்களைக்கொண்டு அவ்வவற்றின் வியாபாரமேசெய்கிற தென்கிற நியமமின்றி தாரதம்மியமுண்டாயிருக்கக் காண்கையாலே சாஸ்திர ஸித்தமான பகவத் ஸர்வக்ஞதைக்கு ஒருகுறைவு சொல்வது ரொம்பவும பரிஹாஸாஸ்பதமாம். பகவானுடைய மற்ற குணங்களும் இப்படியே விசித்திரமாயிருக்கு மென்பதில் சிறிதும் ஸந்தேகமில்லையென்று கண்டுகொள்வது. இந்த ஞானத்தினது அற்பாம்சந்தான் பத்தர் முக்தர், நித்தியர் என்கிற பிராணிகளிடத்தில் விளங்கிவருகிறது.

மஹாவீர்யஃ—மஹத்தான வீரியமுற்றவன்.

[தயிர்முதலியவைகளுக்குக் காரணமான பால்முதலியவை, தயிர்முதலியவைகளாக உருப்படும்பொழுது விகாரமடைவதுபோலன்றிக்கே ஜகத்காரணனு யிருக்கச்செய்தேயும் சிறிதும் விகாரமடையானென்றபடி. அகிற்கட்டை, கஸ்தூரி, புஷ்பம் முதலியவைகளின் பரிமளம்போல் பகவான் ஸன்னிதிமாத்திரத்தால் அபரிமித காரியங்களையுஞ் செய்யுமவனன்றோ? இதற்கு வசநம் [263]காண்க. இதில் அணுமாத்திரந்தான் யோகீசுவரர்கள் முதலானவாளிடத்தில் எதிரில்லாமல் விளங்குகிறது.]

மஹாசக்திஃ—மஹத்தான சக்தியுற்றவன்.

[261] విశ్వతశ్చక్షురుత విశ్వతోముఖః ॥ పశ్యత్యచక్షుస్సశృణోత్యకర్ణః॥ సర్వతోక్షిశిరోముఖమ్ ॥

[262] యోవేత్తియుగపత్సర్వం ప్రత్యక్షేణసదాస్వతః ॥

[263] తస్యసన్నిధిమాత్రేణ గన్ధఃక్షోభాయజాయతే । మనసోనోపకర్తృత్వాత్ తథాసౌపరమేశ్వరః ॥

[మహాద్యుతిః।అనిర్దేశ్యవపుః]

మహాద్యుతిః - மஹத்தானகாந்தியுடையவன்,

అనిర్దేశ్యవపుః - குறிக்கமுடியாதசரீரமுடையவன்,

(வி.)[என்றால்-பசுபதி மதத்தில் பரப்பிரம்மத்தை நிமித்தகாரணமாக மாத்திரஞ் சொல்லுகிறார்கள்; அப்படியின்றிக்கே உபாதாந காரணமுமாகும்படி மஹத்தான சக்தியுடையவனென்றபடி. இந்த சக்திதான் எப்படிப்பட்டதெனில்-ஸாதனஸமூஹங்களை விநியோகப் படுத்துவதாய் எம்பெருமானுடைய சரீரத்தில் ஏகதேசமான ப்ரகிருதியைப் பரிணமிப்பித்துக் கொண்டு, ஸாமக்கிரி இருந்தாலும் இல்லாவிட்டாலும் எப்போதும் எல்லாவற்றையும் ஸம்பாதிக்கும்படியாயிருக்கும்;

ஆனால் பிரம்மமொன்றே உபாதாந காரணமும் நிமித்தகாரணமுமென்றால்-ஒன்றுக்கே இரண்டுவித மெப்படியமையுமெனில:—நூற்பூச்சிமுதலியவைகள் ஒன்றே இரண்டுவிதமாகவு மிருக்கப் பிரத்தியக்ஷமாய்க்காணகிறோமே; ஸர்வக்ஞமான வஸ்துவுக்கு இங்ஙனொருசக்தி யிருப்பதுகூடாததா?

இந்த சக்தியில் துளிதான், பிரதாநமென்கிற பிரகிருதியிலும், தயிரிலும் பாலிலும் மற்றும் விகாரமடையும் வஸ்துக்களிலும காண்கிறது.

மஹாத்யுதிः—மஹத்தான காந்தியுடையவன்.

[என்றால்:—ஸஹாயாந்தரத்தை அபேக்ஷிக்கின்ற இதரகாரணங்களைப்போலன்றிக்கே, இதராபேக்ஷையிலலாத மஹத்தான தேஜஸ்ஸோடு கூடிவிளங்கு மவனென்றபடி.]

இதுதான் உள்ளும் புறம்புமுண்டான இருளை விரோதிக்கின்ற சூரியாதிகளுக்கு அநுகூலமாய், அதறகெதிராமவைகட்கு பயங்கரமாயிருக்கும. இதினுடைய பிந்துமாத்திரந்தான், சூரியசந்திர மாணிக்காதிகளில பிரகாசித்து வருகிறது. இதுவரையிற்சொன்ன திருநாமங்கள ஆறிலும் சொல்லப்படுகிற 'மஹத்' என்கிற விசேஷணத்தால் இந்த குணங்கள் ஒருகலைமாத்திரத்தால் உச்சநீசங்களான ஸகலகாரியங்களையும் ப்ரவர்த்திப்பித்து, முழுமைக்கும் விஷயமகப்படாமல் ஸமுத்திரத்திலுண்டான பெருவெள்ளங்கள்போல் அநந்தரூபனான பகவானிடத்தில் நிறைந்துகிடைப்பதாகத் தெரியவருகிறது. இவ்விஷயம் ராமபக்ஷம் [261]பிரஸித்தம. பகவத்சாஸ்திரங்கள் முழுமைக்கும் இதுதான் விஷயம். ஸௌசீல்யம் வாத்ஸல்யம் என்கிற விரணடுகுணங்களும் சிலப பிரயோஜநத்துக்காக இதற்குள்தானே அந்தர்ப்பவிக்கின்றன.

அநிர்தேச்யவபுः—இப்படி ஷாட்குண்ய பூர்ணரூபிரூகத்தை

(அ.) அநிர்த்தேச்யவபுः—இது அது என்று குறிக்கக்கூடாமல தனக்குத் தானே விளங்கும்படியான சரீரமுடையவன்,

[264]పరాస్యశక్తిర్వివిధైవశ్రూయతే స్వాభావికీ జ్ఞానబలక్రియాచ ॥ తేజో బలై

[ శ్రీమానమేయాత్మా ]

శ్రీమాన్ - ஆபரணஸ்ரீயுடையவன்,

అమేయాత్మా - அளவிடப்போகாதஸ்வரூபன்,

---

(வி.)யாலே, 'இவனது திருமேனி இதற்கொத்தது' என்று சொல்லத்தரமல்லாத திருமேனியன். இதற்கு வசநம் [265] காண்க. மூலஸம்ஹிதையிலும் [266] சொல்லப்படுகிறது.

[இவ்விஷயத்தில் நிருக்தியுஞ் செய்யப்பட்டது. எங்ஙனேயென்னில்:—"எவர்கள் புத்தி, மனம், அவயவம் இவைகளுடையவர்களோ அவர்களுடைய விபவம் அசாசுவதமாக விருக்கும்; ஆகையால் பகவானுக்குச் சரீரமிருக்கிறதாகச் சொன்னால் அதென்ன ரூபமாயிருக்கலாம்" என்று பகவானுடைய சரீரம், பஞ்சபூதஸம்பந்தமாயிருக்கலாமாவென்பதாகச் சங்கித்து, அதற்கு உத்தரம் "இந்தசரீரம் பகவத்ரூபமாகவே இருக்கக்கடவது, பகவான் எந்தரூபமோ அதேரூபந்தான் இதுவும்; பகவான் எந்தரூபமென்னில்-ஞாநஸ்வரூபம், சக்திஸ்வரூபம், ஐசுவரியஸ்வரூபம். எப்படிபோலென்னில்:—சந்தனக்கட்டை அகில்கட்டைமுதலிய காஷ்டங்கள் ஜ்வலிக்குமாகில் அவையெப்படி முழுதும் அக்னிமயமாயிருக்குமோ, மதுமயமான பாத்திரத்தைப் பானஞ்செய்தால் அதெப்படி முழுதும் மதுரமாகவே யிருக்குமோ, ஸுவர்ணக்கட்டியை—உரைக்க உரைக்க எப்படி முழுதும் சுவர்ணமாகவே யிருக்குமோ, ஒரு உப்பரிகையைக்கண்டால் எப்படி பார்க்கப்பார்க்க அழகாகவேயிருக்குமோ இப்படி பகவான் முழுதும ஞாநமேயாயும், முழுதும் ஐசுவர்யமேயாயும், முழுதும் சக்தியேயாயும், எதைநினைத்தால அதுவுடாகும்படியிருக்கும்" என்று இந்தவிதஞ்சொல்லப்பட்டது. இதைத்தான் மேலேபஞ்சோபநிஷத்து மயமான சரீரமென்று சொல்லப்போகிறது இந்தசரீரம் சுத்த ஸத்வமயமாயிருக்கையாலேஸுவர்ணத்திலிருக்குமிரத்நம்போல், பகவானுடைய ஷட்குணங்களையும் பிரகாசிப்பித்துக் கொண்டிருக்கும்; த்ரிகுணமயமான நமது சரீரம்போல் குணங்களை மறைக்கமாட்டாதென்பதுதத்வம். இப்படி உபமாந மிட்டுச்சொல்லப் போகாத சரீரமுடையனென்கிற இவ்வர்த்தத்துக்கு ஸ்ரீவிஷ்ணுபுராணம் [267] பிரமாணம்.]

ஸ்ரீமாந்=அப்படிப்பட்ட திருமேனிக்குத் தகுந்த திருவாபரணங்களுடையவன.

அமேயாத்மா=இந்த குணங்களுக்கும் திருமேனிக்குந் தக்க

---

శ్వర్యమహావబోధ సువీర్యశక్త్యాదిగుణైకరాశిః ॥ జ్ఞానశక్తిబలైశ్వర్యవీర్యతేజాంస్యశేషతః । భగవచ్ఛబ్దవాచ్యాని వినా హేయైర్గుణాదిభిః ॥

[265] షాడ్గుణ్యవిగ్రహం దేవం భాస్వజ్జ్వలనతేజసమ్ ॥

[266] బుద్ధిమనోఽఙ్గప్రత్యఙ్గవత్త్వం భగవతిలక్ష్యామహే శాస్త్రచక్షుషః

[267] రూపవర్ణాదినిర్దేశవిశేషణవివర్జితః ॥

మహాద్రిధృత్ ॥మహేష్వాసోమహీభర్తా శ్రీనివాసస్సతాంగతిః॥అని
[రుద్ధస్సురానందో గోవిందో గోవిదాంపతిః॥]

మహాద్రిధృత్ - பெருமலையெடுத்தவன், మహేష్వాసః - மஹத்தான சரங்களை விடுமவன், మహీభర్తా - பூமியைக்காப்பவன், శ్రీనివాసః - லக்ஷ்மீகரம்பொருந்தியவன், సతాంగతిః - சாதுக்களுக்குக் கதியானவன், అనిరుద్ధః - ஒருவரால்தகையமுடியாதவன், సురానన్దః - தேவர்களுக்கு ஆநந்தமுண்டுபண்ணுமவன், గోవిన్దః - துதிக்கலானவன், గోవిదాంపతిః - வேதவாக்கறிந்தவரைக் காப்பவன்,

(வி.) படி அதிகமபிரமான ஸ்வபாவத்துடன் கூடியவன்.

மஹாத்ரித்ருக்=மந்தரமென்னும் பெருமலையைத் தரித்தவன். என்றால் கீழ்ச்சொன்னவைகளுக்குத்தக்க சேஷ்டிததையுடையவனென்றபடி.

மஹேஷ்வாஸ:=ஸேதுபந்தந ராவணவதாதிகளில் அதிமஹத்ரமாய் பாணங்களைப் பிரயோகிப்பவன். மஹீபர்த்தா=லீலையாகவே பூமியைத் தரிக்கும் சீலன்.

ஸ்ரீநிவாஸ:=லக்ஷ்மிக்கு உறைவிடமானவன்.

[என்றால் க்ஷீரஸாகரத்தைக் கடைந்துபெற்ற பெரியபிராட்டியார் உல்லாஸமாய்த்திருமார்பிலேறும்படி செய்துகொண்டவனென்றபடி.]

ஸதாம்கதி:=இப்படி யதேச்சமாய் விஹரிக்கும் பொழுதும் ஆஸ்ரிதர்களுக்கு ஹிதஞ்செய்பவன்.

அநிருத்த:=இப்படி ஸகலவிரோதிகளையும் போக்கடித்து ஸகல ஜீவலோகத்துக்கும் ரக்ஷணமாம்படியான திவ்யசேஷ்டிதத்தையுடையவன்.

(அவதாரிகை.) அநந்தரம் அவதாரத்துக்கெல்லாம் கிழங்கான இவ்வநிருத்தாழ்வான் செய்தருளிய ஹம்ஸாவதாரஞ் சொல்லப்படுகிறது.

ஸுராநந்த:=ஆபத்பந்துவா யிருக்கையாலே தேவர்களை யானந்தமுறச் செய்பவன்.

கோவிந்த:=அவர்களுடைய ஸ்துதிரூபமான வாக்குக்கு விஷயமானவன்.

கோவிதாம்பதி:=வேதம் வல்லவரான ஞானிகளால் ஞாயக்

(அ)கோவிந்த:—மோக்ஷதர்மத்திற் சொல்லியபடி நஷ்டமான பூமியைப் பெற்றவன்.

[మరీచిర్దమనోహంసస్సుపర్ణో భుజగోత్తమః।]

మరీచిః-கிரணமானவன், దమనః-அடக்குமவன்,

హంసః-ஹம்ஸமானவன், సుపర్ణః-நல்லசிறகுடையவன்,

భుజగోత్తమః- ஸர்பத்துக்குமேலானவன்,

---

(வி.) ருத்தாலாராதிக்கப்பட்டு அவர்களை ரக்ஷிக்குமவன்; இதற்கு [268]வசநங்காண்க.

மரீசி:—கிரணம் போன்றவன்.

[என்றால்—பிறவிக்குருடான ஜந்துக்களுக்கும் நிர்மலமான தனது ரூபத்துடன் பிரகாசிக்குமவனென்றபடி. இப்படியே அவர்தியாநத்தில [269]சொல்லுகிறது.)

தமந:—சமிக்கச்செய்பவன்.

[என்றால்—காந்தியென்னும் கங்கைவெள்ளத்தால் ஸம்ஸாரதாபத்தை யணைக்குமவனென்றபடி.]

(அவதாரிகை) இப்படிப்பட்டவன் ஆரென்றால்:—

ஹம்ஸ:—அன்னமானவன்.

[என்றால் "ஹந்தாஸங்காநாம்" என்றுமௌஸலஸம்ஹிதையிற் சொல்லியபடி ஆஸ்ரிதாளுடையஸங்கத்தை நிரஸிப்பவனென்றபடி. இதற்கு [270] வசநம் அவர் தியாநத்தில் காண்க.]

ஸுபர்ண:—நல்ல சிறகுடையவன். ஸம்ஸாரத்தினின்றுங் கரையேற்றுமவனென்றுமாம்.

(அவதாரிகை.) "பத்மநாபோமரப்ரபு:" என்கிறவிடத்தில் வியூஹத்தில் கடைசியான அநிருத்தாழ்வாரை பத்மநாபனென்றதாகச் சொல்லிற்று, இனி இங்கே அவதாரத்தில் முதன்மையான பத்மநாபனைச் சொல்லுகிறது.

புஜகோத்தம:—சேஷனுக்கு நாதன்.

[என்றால் திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் துயில்பவன். இவ்வர்த்தம் ஆரணியபருவத்திலும் விஷ்ணுபுராணத்திலும் [271]காணலாம்.]

---

(அ.) தமந:—பிராணிகள் தத்தம் மதிகாரத்தைக்கடந்தபொழுது அவைகளைக்கண்டிக்குமவன்.

ஸுபர்ண:—"த்வாஸுபர்ணா" என்கிறபடியே அழகிய சிறகுடையவன். அதவா—'ஸுபர்ண: பததாமஸ்மி' என்கிறபடியே கருடனானவன்.

---

[263]హంసమూర్తిమథాత్మానంజ్ఞానయజ్ఞభుజంస్మరేత్ ॥

[269]కుద్రేష్వస్నిగ్ధకాన్తిశ్చ ॥

[270]సత్వత్వాశుభాశ్రయపరమహంసాయ ॥

[271]సుష్వాపభగవాన్విష్ణురప్సుయ్యామేకఏవహి। నాగస్యభోగేమహతి ॥ భోగిశయ్యాగతశ్శేతేత్రైలోక్యగ్రాసబృంహితః ॥

[హిరణ్యనాభస్సుతపాః పద్మనాభః ప్రజాపతిః॥ అమృత్యు]

హిరణ్యనాభః-ஸுவர்ணத்தை உந்தியிற்கொண்டவன், సుతపాః-நலஞானமுடையவன், పద్మనాభః - கமலத்தை உந்தியிற்கொண்டவன், ప్రజాపతిః-பிரஜைகளுக்கரசன், అమృత్యుః-மிருத்தியுவுக்கெதிரி,

---

(வி.) ஹிரண்யநாப:=அவனே அழகியநாபியை யுடையவன்.

ஸுதபா:=ஸமீசீந ஞாநாகாரன்.

பத்மநாப:=பத்மத்தை நாபியில்கொண்டவன்.

[பத்மநாபன் ஹிரண்யநாபன் என்கிற இவ்விரண்டு அர்த்தங்களுக்கும் பிராம்ம புராணத்தில் 272வசநங்காண்க.]

ப்ரஜாபதி:=ஆனதினாலே பதமாஸநன் தொடங்கிய ஸகலப்பிரஜைகளுக்கும் பதியானவன்.

(இது நைமித்திக ஸ்ருஷ்டி ப்ரளய விஷயமென்றுகண்டுகொள்வது)

(அவதாரிகை) அநந்தரம் ந்ருஸிம்மாவதாரம் சொல்லப்படும்.

அம்ருத்யு:=மிருத்யுவுக்கு விரோதியானவன்

---

த்விதீயசதகம்—ஸம்பூர்ணம்.

---

(அ.) ஸுதபா:=பதரிகாச்ரமத்தில் நரநாராயண ரூபனாய்க்கொண்டு நற்றவமியற்றுமவன்.

அம்ருத்யு:—நாசமற்றவன்.

---

272 కదాచిత్తస్యసుప్తస్యనాభ్యాం కామాదజాయత। దివ్యమష్టదళంభూరిహిరణ్యజం పార్థివప్లుహాత్ ॥ యస్య హేమమయీ దివ్యాకర్ణికా మేరురుచ్యతే ॥

ஸ்ரீ:

# த்ருதீய சதகம்.

సర్వదృక్సింహస్సంధాతా సంధిమాన్ స్థిరః అజో దుర్మర్షణశ్శాస్తా
[విశ్రుతాత్మా]

సర్వదృక్ - யாவரையுங்காண்பவன், సింహః - ஸிம்மரூபன், సంధాతా - சேரவிட்டுக்கொள்பவன், సంధిమాన్ - ஸந்தியுடையவன், స్థిరః சலியாதவன், అజః - பிறவியற்றவன் దుర్మర్షణః - ஸஹிக்கப் போகாதவன், శాస్తా - ஆள்பவன், విశ్రుతాత్మా - பிரஸித்தவிருத் தாந்தன்,

---

(வி.) ஸர்வத்ருக்=ஸகலரையுங் காண்பவன்

(என்றால் அந்த நிருஸிம்மன், அநுகூலர், பிரதிகூலர், தடஸ்த்தர் என்கிற யாவரையும் அவரவருக்குத் தக்கபடி பார்க்கிறாரென்றபடி. அவர் ஸர்வதோமுகனன்றோ?)

(அவதாரிகை.) அவன்தானாரென்றால்:—

ஸிம்ஹ:=ஸிம்ஹவேஷரூபி.

ஸந்தாதா=(சத்துருவென்கிற மதயானையைப் பிளந்தானாகிலும் தன்னை உகந்தோரான பிரஹ்லாதன் முதலானோர்) தழுவும்படியானவன்.

ஸந்திமாந்=அவர்களோடு நித்தியமாய் ஸந்தித்திருப்பவன்.

ஸ்திர:=அப்படியிருப்பதில அவர்களுடைய அபசாரத்தைக்கண்டகலாமல் ஸ்திரமாய் நின்றவன்.

அஜ:=ஸ்தம்பத்தில் ஸமபவித்தானாகையாலே இதரரைப் போல் பிறவியில்லாதவன். இதற்கு [273]வசநங்காண்க.

துர்மர்ஷண:=எதிரிகள்கண்டு ஸஹிக்கமுடியாதவன். இப்படியே [274]அவர் தியாகதத்தில் சொல்லுகிறது.

சாஸ்தா—இந்த கோலத்தோடு ஸகல துர்ஜநரையும் நன்றாகச் செகுத்தவன். இப்படியே ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் [275]காண்க.

விச்ருதாத்மா=பிரஸித்தஸ்வபாவன.

---

(அ.) ஸர்வத்ருக்—பிராணிகளினது புண்யபாபங்களைக் கணிசிப்பவன்.

ஸிம்ஹ:—ஸ்மரணமாத்திரதகில் ஸகல பாபங்களையும் போக்குமவன்.

---

[273]నజాయతే జనిత్ర్యాం యదజస్తస్మాదనేకజిత్ ॥

[274]రథాఙ్గశఙ్ఖధారం బహ్మమూర్తిం సుభీషణమ్ ॥

[275]సనాదవిత్రాసితదానవః ॥ ద్రవన్తి దైత్యాః ॥

సురారిహా ॥ గురుర్గురుతమోధామసత్యస్సత్యపరాక్రమః నిమిషో
[నిమిషస్స్రగ్వీవాచస్పతిః]

సురారిహా- ஸுரசத்துருவைக்கொன்றவன், గురుతమః గురుః- குருக்களுக்கும் குரு, ధామ-இடமானவன், సత్యః- ஸாதுக்களுக்கேற்றவன், సత్యపరాక్రమః-ஸத்தியமானநடவடிக்கைகொண்டவன், నిమిషః-கண்திறவாதவன், అనిమిషః-கண்திறந்தவன், స్రగ్వీ-மாலையுற்றவன், వాచస్పతిః-வாகீசன்.

(வி.) [என்றுரல்—அவனே எப்போதும் எங்கும் எல்லாராலும் ஆச்சரியப்படும்படி பிரஸித்தமான ஸிம்மாவதார விருத்தாந்தத்தை யுடையவன். இதற்குவசநம் 276காண்க.

ஸுராரிஹா=சுரருக்குப்பகையான ஹிரண்யகசிபுவை மார்பிளவாய்ப் பிளந்தவன். இப்படியே277அவர்தியானம்.

(அவதாரிகை.) அநந்தரம் மத்ஸ்யாவதாரம்.

குருதம குரு:=ஸகலவித்தைக்கும் பரமாசாரியன். ஹைரண்யகர்ப்ப சாகைகளில இவ்வர்த்தம் 278பிரஸித்தம279கீதையிலும் அருளிச்செய்தான்.

தாம—இடமனவன்.

[என்றுரல்-ஸம்ஹாரதசையில் அழிவுறுகின்ற சராசரங்களுக்கு ஆதாரமானவனென்றபடி.]

ஸத்ய:—அக்காலத்தில் ஆச்சிரயித்தமங்வாதிஸத்துக்களுக் கெல்லாம் ஸாதுவாய் விளங்கியவன். ஸத்யபராகரம:=அவாளிடத்தில் கபடமில்லாமல் ஸத்தியமான செயல்செய்பவன். நிமிஷ:—அவர் விரோதிகளைக் கண்திறந்து பாராதவன். அநிமிஷ:-ஸத்துககள்விஷயத்தில்கண்மூடாமல் விழித்திருக்கின்ற திவ்யமான மத்ஸ்யசரீரங்கொண்டவன். ஸ்ரக்வீ—இப்படி திர்யக்காய்ப்பிறந்திருக்கச்செய்தேயும் பரத்வத்துக்கு அடையாள

(அ.) ஸத்ய:—ஸத்தியமுரைக்கின்றதென்கிற தர்மரூபமாயிருக்குமவன். அநிமிஷ:=நித்தியமும் விழித்திருப்பவன், அல்லது மத்ஸ்யரூபன். ஸ்ரக்வீ—பூதத் மாத்திரையின் வடிவமான வைஜயந்தி மாலையையணிந்தவன்.

276 అశేషదేవేశనరేశ్వరేశ్వరైః ॥

277 సత్పత్యకరజశ్రేణీదీప్తేనోభయపాణినా । సంయచ్ఛతే యథా సమ్యక్ఛయా నాంసో௨భయంపరమ్ ॥

278 సపూర్వేషామపిగురుః ॥

279 పూజ్యశ్చగురుర్గరీయాన్ ॥

రుదారధీః ॥ అగ్రణీః గ్రామణీః శ్రీమాన్ న్యాయో నేతా సమీరణః ।
[సహస్రమూర్ధా]

ఉదారధీః - கெம்பீரஹிருதயன், అగ్రణీః - மேலேகொண்டுசெல்பவன், గ్రామణీః - கிராமத்தையடைவிப்பவன், శ్రీమాన్ - அழகுடையவன், న్యాయః - நியாயமானசெயலுற்றவன், నేతా - நடத்துமவன், సమీరణః - சலிப்பவன், సహస్రమూర్ధా - ஆயிரமுடியன்,

(வி.) மான வைஜயந்தியென்னும் மாலையை யணிந்தவன். வாசஸ்பதிः— அவனே ஸ்ரீமாத்ஸ்ய புராணமென்கிற வேத உபப்ரம்மணத்தைச் செய்கையாலே வாக்குக்குப் பதியானவன். உதாரதீः—இப்படி ஸர்வரும் உஜ்ஜீவிக்கும்படி ஸங்கல்பிக்கையாலே கம்பீரமான திருவுள்ளமுடையவன். அக்ரணீः—அதேப்பிரகாரமாய் மேல்பதவிக்குக்கொண்டு செல்லுமவன், க்ராமணீः—நித்திய ஸூரிகளினது கிராமத்தில் கொண்டுபோமவன்.

ஸ்ரீமாந்—"மத்ஸ்யः கமலலோசநः" என்கிறபடியே பரத்வலக்ஷணமான ஐசுவரியங்களெல்லாம் பிரகாசிக்கப் பெற்றவன். ந்யாயः—பக்தாள் விஷயத்தில நியாயமானவைகளை செய்பவன். நேதா—அந்தப்பக்தர்கள் நியமித்ததைச் செய்கையாலே நிர்வஹிக்கும் தன்மையன். ஸம்ஸாரத்தில் தான்முழுகி மஹாத்மாக்களைககரையேத்து மவனை இப்படிசொல்வது யுக்தமேயன்றோ? ஸமீரணः—பக்தாளுடைய இஷ்டத்தைச்செய்யுந் தன்மையன். இவ்வர்த்தங்களுக்கு அவர் தியாநத்தில் [280]வசநங்காண்க.

(அவதாரிகை.) அநந்தரம் வித்தையை வெளியிடவென் றவதரித்த இவ்வவதாரத்தைச் சொல்லுகிற புருஷஸூக்தம் முதலிய பரவித்தைகளில் சொல்லுகிற 'ஸஹஸ்ரசீர்ஷா புருஷः" இத்யாதிப் பிரகாரங்கள் சொல்லப்படுகின்றன.—

ஸஹஸ்ரமூர்த்தா—ஆயிரம் சிரஸ்ஸுக்களுடையவன்.

(அ) க்ராமணீ:—பூதக்கிராமத்தை நடத்துமவன்.
ந்யாய:—பிரமாணத்துக்கு அநுகூலமாய் அபேதத்தை ஸ்தாபிக்கின்ற தர்க்கரூபமானவன்.

[280]కృత్వా మీనమయీం సద్యః ప్రవివేశ రసాతలమ్ । వేదమూర్తిస్తతో వేదానానిన్యే బ్రహ్మణోఽన్తికమ్ ॥ జ్ఞానాదిగుణబృన్దేన పక్షభూతేన భూషితమ్ । స్వోత్థబ్రహ్మమదంశృఙ్గనిస్సృతేన విరాజితమ్ ॥ కల్పావసానసమయే వహన్తఞ్చైవ చిన్తయేత్ । నౌరూపాం వితతాం క్షోణీం ప్రజాపతిగుణాన్వితామ్ ॥ ముక్తాఫలనిభేనైవ వపుషానిర్మలేనచ । అనిమీలితనేత్రశ్చ మీనాత్మాఽఽతవాన్కథా ॥

విశ్వాత్మా సహస్రాక్షస్సహస్రపాత్ ॥ ఆవర్తనో నివృత్తాత్మా సంవృత
[స్సంప్రమర్దనః]

విశ్వాత్మా - விசுவாகாரன், సహస్రాక్షః ஆயிரந்திருக்கண்களுடையவன், సహస్రపాత్ - ஆயிரந்தாளுடையவன், ఆవర్తనః - சுழற்றுமவன், నివృత్తాత్మా - உயர்ந்தஸ்வரூபமுடையவன், సంవృతః- மூடப்பட்டவன், సంప్రమర్దనః-பீடிப்பவன்,

(வி.) ஸஹஸ்ராக்ஷ: - ஆயிரந்திருக்கண்களுடையவன், ஸஹஸ்ரபாத்-ஆயிரந்திருவடிகளுடையவன்.

[இங்கே ஆயிரமென்கிறது ஸங்கியையைக்கடந்த தென்கைக்காக; [281]இப்படியே வசநங்கள் சொல்லுகின்றன. மேலும் சிரஸ்ஸு முதலியவைகளைச் சொன்னது மற்றுங் கரணங்களுக்கு லக்ஷணமாய் அந்தந்த கரணங்கள் செய்யும் செயலைச் சொன்னபடி என்று நம்பூர்வாகள். இதுதான் உசிதமும் அனேகசாஸ்திர ஸங்கதமும்]

விச்வாத்மா—இந்த ஞாநசக்திகளைக்கொண்டு ஜகத்தை வியாபிக்கையாலே விசுவரூபன். இதற்கு வசநம் [282]காண்க.

ஆவர்த்தந:—ஸம்ஸாரமென்னும யந்திரத்தைத் திருப்புமவன். இதற்கு வசநம் [283]காண்க.

நிவ்ருத்தாத்மா —(நிவ்ருத்தம் உத்கதம் ஆத்மாயஸ்யஸ:) என்றால் ஸம்ஸாரவிபூதியைக் காட்டிலும் உயர்ந்த நித்தியவிபூதியென்னும் ஸ்வரூபத்தை யுடையவன்.

ஸம்வ்ருத:—தமோகுணத்தால் மூடமானவர்களுக்கு மறைந்திருப்பவன்.

ஸம்ப்ரமர்த்தந:—ஸம்வரணமான தமஸ்ஸைத் தன்னையறிவ

(அ) நிவ்ருத்தாத்மா—ஸம்ஸாரபந்தத்தினின்றும் நிவ்ருத்தமான ஸ்வரூபத்தை யுடையவன்.
ஸம்வ்ருத:—ஆச்சாதிகை யென்னும் அவித்யையால்மூடப்படுமவன்.
ஸம்ப்ரமர்த்தந:—உருத்திரன் இயமன் முதலிய தன்விபூதிகளைக் கொண்டு நன்றாய்ப் பீடிக்குமவன்.

281 విశ్వతశ్చక్షురుత విశ్వతోముఖః ॥

282 సభూమిం విశ్వతో వృత్వా ॥

283 తేనేదం భ్రామ్యతే బ్రహ్మచక్రమ్ ॥ భ్రామయన్ సర్వభూతాని ॥ కాలచక్రం జగచ్చక్రం యుగచక్రం చ కేశవః । ఆత్మయోగేన భగవాన్ పరివర్తయతేఽనిశమ్ ॥

[అహస్సంవర్తకో వహ్నిరనిలో ధరణీధరః ।]

అహస్సంవర్తకః நாளைச் சுழற்றுமவன், వహ్నిః-வஹிப்பவன், అనిలః- ஜீவனஹேது வானவன், ధరణీధరః - பூமியைத் தாங்குமவன்,

(வி.) திருல் நாசஞ்செய்யுமவன. இதில் [284]பிரமாணங்காண்க.

அஹஸ்ஸம்வர்த்தக:—பகல்முதலிய காலத்தைத் திருப்புமவன்.

[இதற்கு வசநம் [285]காண்க. காலமாவது பூதபவிஷ்யத் வர்த்தமான ரூபமாய்க்கொண்டு பெரியது சின்னதென்கிற ஞாநத்தைப் பிறப்பிப்பதாய், எம்பெருமானுக்கு நித்தியமும் கிரீடாபரிகரமா யிருக்குமதொன்று. அதைப் பரமபுருஷன் ஆறுவித விகாரங்களுண்டாக்குமதாயும், பிரகிருதியையும் புருஷனையும் சேர்க்கவும் பிரிக்கவும் ஹேதுவாயிருக்கும்படியாயும் நியமிக்கிறான். அதைச்சிலர் கீழ்சொன்ன காரியங்களுககென் றேற்பட்டப் பிரகிருதியினது பரிணாம பாம்பரையென்பார்கள். மற்றும் சிலர் அதைச்சுதந்திரமென்பார்கள்; எந்தவிதமாகிலும், இதைப்பற்றி ஸ்ரீபவுஷ்கர ஸம்ஹிதையில் விசேஷமாய்ச் சொல்லியிருக்கிறது.]

வஹ்நி:=தேசரூபத்தாலே விசுவத்தை வஹிக்குமவன்

[அதில் முதல்தேசம் பரமபதம்; மற்றது அபேக்ஷை யுண்டானபோது அங்கீகரிக்கின்றவைகளான ஆகாசம், திக்கு, அவற்றின்கோணங்கள் முதலியன. இதற்கு வசநம் [286]காண்க. தேசமாவது 'இங்கே இது' என்கிற ஞாநத்துக்குக் காரணமாவது; அதுதான், பத்தர் முக்தர் நித்தியர் என்கிற மூன்றுவகைச் சேதநர்க்கும், அவன் தந்ததேயன்றோ?]

அநிலஃ=இப்படி யாவரையும் உஜ்ஜீவிப்பிக்குமவன்.

[இதினுடைய கலாமாத்திரந்தான் காற்றுவது. இதற்கு வசநம் [287] காண்க.

தரணீதர:=பூமியைத்தரிப்பவன்.

(அ) அஹஸ்ஸம்வர்த்தக:—நன்றாக நாட்களை யெல்லாம் நடத்திபோருமவன்.

அநில:—அநாதியானவன்.

தரணீதர:—சேஷனையும் திக்கஜங்களாயும் அல்லது வராஹரூபியாயிருந்து பூமியைத்தாங்குமவன்.

[284] తమేవం విద్వానమృత ఇహ భవతి ॥ య ఏనం విదురమృతాస్తే భవన్తి అథేతరే దుఃఖమేవాపియన్తి ॥

[285] సర్వే నిమేషా జజ్ఞిరే విద్యుతః పురుషాదధి ॥

[286] అస్యామృతన్దివి ॥ స్వే మహిమ్ని స్థితమ్ ॥

[287] ప్రాణాద్వాయురజాయత ॥

[సుప్రసాదః ప్రసన్నాత్మా విశ్వసృగ్విశ్వభుగ్విభుః । సత్కర్తా]

సుప్రసాదః - நலலருளுடையவன், ప్రసన్నాత్మా-தெளிவுறறசிந்தையன், విశ్వసృక్ - உலகத்தைப்படைத்தவன், విశ్వభుగ్విభుః உலகத்தையாளுமபிரபு, సత్కర్తా - ஸத்கரிப்பவன்,

(வி.) [எனறுல-மற்றும் ஆதாரமாய் நிற்பவைகளை யெல்லாம் தரிப்பவன். இதற்கு வசநம 288 காணக.]

ஸுப்ரஸாதஃ=இப்படிக்கெல்லாம் செய்து அதற்குமேல் தன்னிடத்தில் அபிமுகமானவாகளைக் குளிரநோக்குமவன். இதில் பிரமாணம 289 காண்க.

(அவதாரிகை.) அதற்கென்ன காரணமெனில்:—

ப்ரஸந்நாத்மா=தனக்குத்தானே ஸகல அபீஷ்டங்களு முண்டாகப் பெற்றமையாலே ராகாதிகளாலே கலக்கப்படாத மனமுடையன்.

[இதற்கு வசநம் 290 காண்க, பூர்த்தியின்றி இருப்பனுயிருந்தாலன்றே கிட்டக்கூடாதபடியாயிருக்கும்? அதில்லாமையாலே சுகமேயாராதிக்கும்படி பிரஸந்நனுயிருக்குமென்றபடி.]

விச்வஸ்ருக்=குணதோஷங்களைக் கணிசியாமல் கேவலம் தாக்ஷிண்யத்தாலே விசுவத்தை ஸ்ருஷ்டிக்குமவன்.

விச்வபுக் விபுஃ=அப்படியே எங்கும் வியாபித்து ஸகலத்தையும் புஜிக்குமவன். இதில் 291 பிரமாணம் காண்க.

ஸத்கர்த்தா=ஸத்கரிப்பவன்.

[இப்படிப்பட்ட ஸுசீலனுகையாலே ஸத்துக்களை எதிர்கொண்டு பூஜிக்குமவனென்றபடி. "ஸஜ்ஜந ப்ரதிபூஜக:" என்கிறதன்றே?]

(அ.) ஸுப்ரஸாதஃ—தன்விஷயத்தில் அபகாரஞ்செய்த சிசுபாலாதிகளுக்கும் மோக்ஷந்தந்தவனுகையால் நல்லருள்புரிந்தவன்.
ப்ரஸந்நாத்மா—ரஜஸ்தமஸ்ஸுக்களால் கலக்கப்படாத திருவுள்ளத்தையுடையவன். காருண்யஸ்வரூபனென்றுமாம்.
விபு:—பிரம்மாதிரூபமாய்ப் பல்படியாமவன்.

288 సదాధార పృథివీం ద్యాముతేమామ్ ॥

289 తమక్రతుం పశ్యతి వీతశోకో ధాతుః ప్రసాదాత్ ॥

290 అవిజిఘత్సోఽపిపాసః సత్యకామః సత్యసఙ్కల్పః ॥ శాన్తిసమృద్ధమమృతమ్ ॥

291 సర్వాణి రూపాణి విచిత్య ధీరః । నామాని కృత్వాఽభివదన్ యదాస్తే ॥

[సత్కృతస్సాధుర్జహ్నుర్నారాయణో]

సత్కృతః - பூஜிக்கப்பட்டவன், సాధుః - ஸாதிப்பவன், జహ్నుః மறைபட்டவன், నారాయణః - ஸகலத்திலும் உள்ளும்புறம்புமவியாபித்

(வி.) ஸத்கருதः—அவர்களால் தானும் ஸத்கரிக்கப்பட்டவன் [அவன், அவர்கள் சிரத்தையுடன் ஸமர்ப்பிப்பது அற்பமாயினும், தனது மஹிமைக்குத்தக்கபடி அதைப்பெற்று வெரம்பவும் ஸந்தோஷிக்கிறான். இதில் பிரமாணம 292.

ஸாதுः—அவர்கள் அபேக்ஷித்த தூத்தியம் ஸாரத்தியம் முதலிய தொண்டுகளைச் செய்பவன்.

ஜஹ்நுः—அபக்தாளுக்குத் தனது மஹிமையைக் காட்டாதவன். இதற்கு 293வசநம்.

(அவதாரிகை.) இப்படி ஸமஸ்த விசேஷங்களாலும் விசேஷித்துச் சொல்லி 294உபநிஷத்துக்களில் சாகைகள்தோறும் ஓதப்படுகின்ற பரவஸ்துவினுடைய அஸாதாரணமான திருநாமத்தைச் சொலலுகிறதுமேல்:-

நாராயணः—நாராயணன்.

[இதற்குச் சுருதியில்தானே 295அர்த்தம் சொல்லப்பட்டது. மற்றுமுண்டான வர்த்தங்கள் ரகஸ்யமாகையாலே அவைகளைச்சொல்லுகிறோமில்லை.]

(அவதாரிகை.) இப்படி ரஹஸ்யமான அர்த்தத்தைப் பொதிந்துகொண்டிருக்கிற இதை வியாக்கியானிக்கிறதுமேல்:—

(அ) ஜஹ்நு:—பிரளயகாலத்தில் ஜநங்களைப்போக்குமவன். பக்தாளைப் பரமபதம்கொண்டு செல்பவன் என்றுமாம்.

நாராயண:—நரமென்று ஆத்மாவாய் அதினின்றுமுண்டான ஆகாசாதிகள்நாரமாய் அவைகளைக் காரணஸ்வரூபனாய்க் கொண்டு வியாபிக்கையாலே நாராயணன்.

292అహోహ్యేతాన్యసత్పర్వాణి ప్రీణాతిభగవాన్హరిః । విధిప్రయుక్తాంపూజాంచ్యగృహ్ణాతిశిరసాస్వయమ్ ॥ శబర్యాపూజితస్సమ్యక్ ॥ మాలాకారేణ పూజితః ॥

293చక్రన్తద్యాసుదేవస్యమాయయాయావర్తతేవిభోః । సాపహ్నవంపాణ్డవేషు ఇతిరాజసుసత్తమ ॥

294నారాయణాయవిద్మహే ॥ నారాయణపరంబ్రహ్మ ॥ ఏకోహవైనారాయణఆసీత్ ॥ అథపునరేవనారాయణః ॥ చక్షుశ్చద్రష్టవ్యఞ్చనారాయణః ॥ అథదివ్యోదేవఏకోనారాయణః ॥

295యచ్చకిఞ్చిత్ ॥

నరః॥ అసంఖ్యేయోఽప్రమేయాత్మా విశిష్టశ్శిష్టకృచ్ఛుచిః। సిద్ధార్థస్సిద్ధసం
[కల్పస్సిద్ధిదఃసిద్ధిసాధనః। వృషాహీ]

தவன், నరః - அழியாத ஐசுவரியமுற்றவன், అసంఖ్యేయః - எண்ணப்போகாதவன், అప్రమేయాత్మా - அளவிடப்போகாதஸ்வரூபன், విశిష్టః - விலக்ஷணன், శిష్టకృచ్ఛుచిః - தனக்கு அநுகூலமானவர்களைச் சுபமாக்கும்படியானகாந்தியுடையவன், సిద్ధార్థః - ஸகலார்த்தங்களுமஸித்திக்கப்பெற்றவன், సిద్ధసంకల్పః - நினைத்ததெல்லாம் ஸித்திக்கப்பெற்றவன், సిద్ధిదః - ஸித்தியைத்தருமவன், సిద్ధిసాధనః - ஸித்திரூபமான ஸாதநமானவன், వృషాహీ - தர்மரூபமான தினமுடையவன்,

---

(வி) நரஃ=சாசுவதமான சேதநாசேதநங்களென்னும விபூதியையுடையவன்.

அஸங்க்யேயஃ=அவற்றின் ஸமூகங்கள் கணக்கில்லாமலிருக்கப் பெறறவன். அப்ரமேயாத்மா=இப்படிகணக்கில்லாத சேதநாசேதநங்கள் ஒவ்வொன்றும் அளவின்றி வியாபித்திருக்கையாலே அளவிட வொண்ணாத ஸ்வரூபன்

விசிஷ்டஃ=அவைகளையபேக்ஷியாமல் ஸ்வயமே விலக்ஷணமானவன

சிஷ்டக்ருச்சுசி=மற்றப்படி தனது ஸம்பந்தத்தால் அவைகளைத் தனக்குத்தக்கபடி நன்றாகச்செய்கின்ற காந்தி விசேஷத்தோடு கூடியவன்,

ஸித்தார்த்தஃ=மேழ்ச்சொன்னபடி ஸகலமும் ஸித்திக்கப்பெற்றவன்.

ஸித்தஸங்கல்பஃ=அதற்குமேல் நினைத்ததெல்லாம் ஸித்திக்கப்பெற்றவன். "ஸத்யகாமஃ, ஸத்யஸங்கல்பஃ" என்றன்றோ சுருதி.

ஸித்திதஃ=ஸாதிக்குமவருக்கெல்லாம் அணிமை, கரிமைமுதலிய ஸித்திகளைத் தருமவன்.

ஸித்திஸாதநஃ=ஸித்திபோன்ற ஸாதநமுடையவன்.

[என்றால் 'யேது தர்ம்யாம்ருதமிதம்" என்று கீதையில் அருளிச்செய்தபடியே அவனைப்பெறவேண்டி ஸாதநத்தையநுட்டிக்கும்பொழுதுகூட பிரியமாயிருப்பவனென்றபடி.]

வ்ருஷாஹீ.=தாமமான தினமுடையவன்.

---

(அ.) நர:—கொண்டுசெலபவன.

அஸங்க்யேய:—கணக்கிடத்தக்க நாமரூபாதிகளற்றவன்.

వృషభో విష్ణుర్వృషపర్వా వృషోదరః। వర్ధనో వర్ధమానశ్చ వివిక్తశ్శ్రుతి
[సాగరః। ]

వృషభః - வர்ஷிப்பவன், విష్ణుః - வியாபித்தவன், వృషపర్వా தர்மத்தைப்படியாக்கிக்கொண்டவன், వృషోదరః - தார்மிகமான திருவயிருகொண்டவன், వర్ధనః வளர்ப்பவன், వర్ధమానః- வளருமவன், వివిక్తః- ஏகாந்தமானவன், శ్రుతిసాగరః-வேதத்திற்குக்கடலானவன்,

(வி.) என்றால்—இவனை யடைகின்ற பிரதமதினம் ஸகல மங்களத்துக்கும் அங்குரார்ப்பணம பண்ணும் தினமபோல தர்மரூபமா யிருககுமென்ற படி. இதில் பிரமாணம் 296காணக.

வ்ருஷப:=இப்படி வந்தடைகின்ற ஸம்ஸாரிகளின் தாபந்தீரும்படி வர்ஷிக்கிறவன்.

விஷ்ணு:=இப்படி வர்ஷித்துக்கொண்டே வியாபிக்குமவன்.

[என்றால் பிராணிகளுக் கெந்தெந்த காலத்தில் எது எதுவேணுமோ அதை யதை யதற்குவேண்டும் க்ஷணத்தில்தானே கொடுத்துக்கொண்டு கூடவேயிருப்பவன். இதற்குக் கீதையில் 297வசநங்காணக.

வ்ருஷபர்வா=தர்மத்தைப் படியாயுடையவன்.

[என்றால்—வர்ணாச்ரம தர்மங்களைத் தன்னையடைவிக்கும் வழிக்கு அநுகூலமாக்கிக்கொண்டவ னென்றபடி.]

வ்ருஷோதர:=ஆராதிப்பவர்கள் ஸமர்ப்பித்ததைக் கொண்டு நிறைவாய்க் கொள்ளுகையாலும, ஆர்த்தியடைந்தவர்க ளனைவர்க்கும் அண்டுமிட மாகையாலும மிகதார்மிகமான உதரத்தை யுடையவன். வர்த்தந:=தாய்போல் அவர்களை வயிற்றில் வைத்து வளர்க்குமவன்.

வர்த்தமாந:=அவர்களையும் வளர்த்துத் தானும் வளருமவன்.
[இப்புடைகளாலே அளவிடப்போகாத ஸம்ருத்திபொருந்தியவன்.]

விவிக்த:=இப்படி லோகத்திலில்லாத மாதிரியான விருத்தாந்தமுடைய னாகையாலே ஏகாந்தமானவன்.

ஸ்ருதிஸாகர:=இப்படிப்பட்ட குணங்களைப் பிரதிபாதிக்கின்ற சுருதிகளுக்கெல்லாம், நதிகளுக்கிடமான ஸமுத்திரம்போலே முடிவான பூமியாயிருப்பவன். இதற்கு வசநம் 298காண்க.

296అద్య మే సఫలం జన్మ సుప్రభాతా చ మే నిశా । యదున్నిద్రాబ్జపత్రాక్షం విష్ణో
297న తదస్తి వినా యత్స్యాన్మయా భూతం చరాచరమ్॥ [ప్ర]శ్న్యమ్యహామ్నుషుః॥

[సుభుజో దుర్ధరో వాగ్మీ మహేంద్రో వసుదో వసుః । నైకరూపో ]
[బృహద్రూప]

సుభుజః-சுந்தரத்தோளன், దుర్ధరః- தரிக்கமுடியாதவன், వాగ్మీ-கொண்டாடத்தகுந்தவாக்கையுடையவன், మహేంద్రః-பூஜிக்கும்படியான ஐசுவரியமுற்றவன், వసుదః - தநமளிப்போன், వసుః-செல்வமானவன், నైకరూపః - அநேகரூபந்தரித்தவன், బృహద్రూపః-பெரிய திருமேனியன்,

(வி.) ஸு - புஜ: = ஆஶ்ரிதர்களுடைய பாரத்தைத் தாங்கும்படியான அழகிய தோள்களுடையவன்.

துர்த்தர:=அப்படிப்பட்ட புஜபலத்தாலே, பிரளயகாலத்திலுண்டான ஸமுத்திரவேகத்தைப் பிள்ளைகள் விளையாட்டில் மணலாற்கட்டிய அணையானது தாங்கமாட்டாததுபோலே ஒருவராலுந் தாங்கமுடியாத வேகம்பொருந்தியவன் வாக்மீ—அப்படியே மிகவுங்கொண்டாடும்படியான வாக்கையுடையவன்.

[அவன்வாக்கைக் கொண்டாடுவதுதான், அது வேதரூபமாயும ஐயசீலமாயும் மதுரமாயும் கெம்பீரமாயும் பிரியமாயும் ஹிதமாயு மிருக்கையாலே. இதற்குவசநம் 299]

மஹேந்த்ர:=இப்படியெங்கும் ப்ரஸித்திகையாலே கொண்டாடும்படியான பரமைச்வர்யத்தோடு விளங்குமவன்,

வஸுத:=இப்படி ஒருவராலும் சலிப்பிக்கமுடியாமல் மஹாமஹிமை தங்கியிருக்கச் செய்தேயும் தநம் முதலிய அறபுருஷார்த்தத்தை அபேக்ஷிக்கிறவருக்கு அவற்றைக் கொடுக்குமவன். வஸு:=மஹாத்மாக்களுக்குத் தானே தநமாயிருப்பவன்.

(அவதாரிகை.) கீழ்ச்சொன்ன மஹிமைக்குத் தகுந்த விசுவரூபத்தைச் சொல்லுகிறதுமேல்.

நைகரூப:=அவரவர் நினைவுக்குத்தக்கபடி நாநாவிதமான ரூபங்கள் தரித்தவன் 300 ப்ருஹத்ரூப:=அந்த ரூபங்கள் ஒவ்வொன்றுமே திசைகளையும் ஆகாசத்தையும் அளாவும்படி பெரிதாயிருக்கும்படி யானவன் 301.

(அ) ப்ருஹத்ரூப:=பூமியைத்தாங்கும் வராஹாதி ரூபமான பெரியமேனியுடையவன்.

299 వాగ్మిన్స్తోత్స్నేదాః ॥ ఉక్తార్థో త్రవయుక్తాచవక్తా వాచస్పతిర్యథా । భూయః కథయతృప్తిర్హి శృణ్వతో నాస్తి మేహ్యతమ్ ॥

300 పశ్యామి త్వాం సర్వతోనన్తరూపమ్ ॥

301 ద్యావాపృథివ్యోరిదమన్తరం హి వ్యాప్తం త్వయైకేన దిశశ్చ సర్వాః ॥

[శిపివిష్టః ప్రకాశనః ఓజస్తేజోద్యుతిధరః ప్రకాశాత్మా ప్రతాపనః । ]
[ఋద్ధస్స్పష్టాక్షరో మంత్ర]

శిపివిష్టః-கிரணங்களால்பிரவேசிப்பவன், ప్రకాశనః-பிரகாசிப்பவன், ఓజస్తేజోద్యుతిధరః - பலம், பராக்கிரமம், காந்தி இவைகளைத்தரிப்பவன், ప్రకాశాత్మా-விளங்கும்ஸ்வரூபன், ప్రతాపనః-தபிப்பவன், ఋద్ధః-ஸம்ருத்திபொருந்தியவன், స్పష్టాక్షరః-வேதத்தைப்படைத்தவன், మన్త్రః-மநநஞ்செய்தோரைக்காப்பவன்,

(வி.) சிபிவிஷ்ட:=கிரணங்களால் பிரவேசித்தவன். இப்படியே யாஸ்கர் [302]சொன்னார். ருஷிகளும் சொன்னார்கள் [303]

ப்ரதர்சந:=இந்த திவ்யரூபத்தைத் தாங்கள் காணவேண்டுமென்று ஆசைப்பட்ட அர்ச்சுநாதிகளுக்குப்பிரகாசிப்பிக்குமவன்.[304]

ஓஜஸ் தேஜோ த்யுதிதர.=பெலம, வெல்லுந்திறமை, கீர்த்தி, காந்தி இவைகளைத் தரிக்குமவன் [305] ப்ரகாசாத்மா=மூர்க்கருங்கூட ஒப்புக்கொள்ளும்படி ப்ரகாசமான உத்கிருஷ்டப்பிரபாவன். இப்படியே திருதராஷ்ட்ரன் ஒப்புக்கொண்டான் [306]ப்ரதாபந:= உக்கிரமான காந்தியுடையவன். ரித்த=(இப்படிபருவகாலத்தில் கரைபுறளுங் கடல்போன்ற) ஸம்ருத்தியுடையவன் [307]

ஸ்ருஷ்டாக்ஷர:=(இந்த ஸமிாத்தியைகொண்டு வேதவாக்கியங்களுக்குப் பொருளுண்டாக்குகையாலே) வேதாக்ஷரங்களை ஸ்ருஷ்டிப்பவன். மந்த்ர:=(இப்படிகளை மநநஞ்செய்வாரைக்

(அ)சிபிவிஷ்டஃ=சிபி என்று பசுக்களாய் அவற்றுள் யக்ஞரூபியாயிருக்கிறனென்று சிபிவிஷ்டஃ என்றுயக்ஞரூபனைச்சொல்லுகிறது. ப்ரதாபநஃ சூரியன் முதலான விபூதிகளைக்கொண்டு பிரபஞ்சத்தைத் தபிக்குமவன். ரித்தஃ=தர்மம், ஞாநம் வைராக்கியம் முதலியவைகளால் பரிபூர்ணன். ஸ்பஷ்டாக்ஷரஃ=ஸ்பஷ்டமான ஓங்காரமென்னும் அக்ஷரத்தையுடையவன். மந்த்ரஃ-ருக்யஜுஸ்ஸாமம் என்கிற மந்திரங்களுக்குப் பொருளாமவன்.

[302] శిపయోరశ్మయఉచ్యన్తే తైరావిష్టః ॥

[303] శిపివిష్టేతియచ్చాస్యపీతంరోమచయద్భవేత్ । తేనాపివిష్టంయత్కించిత్ శిపివిష్టంహితత్స్మృతమ్ ॥ [304] దివ్యన్దదామితేచక్షుఃపశ్యమేయోగమైశ్వరమ్ ॥

[305] యథాప్రదీప్తజ్వలనంపతంగావిశన్తినాశాయసమృద్ధవేగాః ॥

[306] త్వమేవపుణ్డరీకాక్షసర్వస్యజగతఃప్రభుః । తస్మాన్తేయాదవశ్రేష్ఠప్రసాదం కర్తుమర్హసి ॥ [307] తతస్సపురుషవ్యాఘ్రస్సజ్ఞాగాదపునస్స్వయమ్। తాన్దివ్యామమృతాక్షీతాత్ర్మృద్ధిమత్తామరిన్దమ ॥

[శ్చంద్రాంశుర్భాస్కరద్యుతిః ॥ అమృతాంశూద్భవోభానుః శశబిం]
[దుస్సురేశ్వరః । ఔషధం]

చన్ద్రాంశుః - ஆஹ்லாதகர மானகாந்தி பொருந்தியவன், భాస్కరద్యుతిః-வெல்லுந்திறமையுற்றவன், అమృతాంశూద్భవః- சந்திரனுக்குப்பிறப்பிட மானவன், భానుః - விளங்குமவன், శశబిన్దుః - குடிலமான வற்றைகிமிர்ப் பவன், సురేశ్వరః- தேவர்நாதன், ఔషధమ్-மருந்தானவன்,

---

(வி.) காக்கின்றமையால்) மந்திரமானவன். இப்படியே பிராம்ம புராணத்திலும்ஸ்ரீவாராஹ புராணத்திலும் சொல்லப்பட்டது [308]

சந்த்ராம்சு:—இப்படி மநநஞ்செயவோருக்குண்டான வாட்டத்தைப்போக்கி ஆஹ்லாதத்தை யுண்டுபண்ணும்படியான காந்தி பொருந்தியிருப்பவன[309]. பாஸ்கரத்யுதி—சத்துருக்களைப் பரிபவிக்கும்படியானப பிரபாவந்தங்கி யிருப்பவன் [310]

அம்ருதாம்சூத்பவ:—சந்திரனுக்குப் பிறப்பிடமானவன்.

[என்றால்—ஸர்வதாபத்தையும் ஹரிக்கும்படி ஆப்யாயநமாய், ம்ருதஸஞ்ஜீவநமான அமிருதகிரணங்கள் பொருந்திய சந்திரனுங்கூட பரமபுருஷனுடைய ஹிருதயதிலுண்டான சைதயஸம்பந்தத்தால் அப்படி யுண்டானனென்றபடி. [311]]

பாநு:—அதிகப்பிரகாசமான சூரியன்கூட இவன்தேஜஸ்ஸைக் கொண்டு பிழைக்கும்படி விளங்குமவன [312]. சசபிந்து —வக்கிரமாககமாய்ப் போமவர்களை யெல்லாந் திருப்புமவன். ஸுரேச்வர:—அப்படியே ஸந்மார்க்கத்தில் போமவர்களுக்கு நிர்வாஹகனானவன் [313]. ஔஷதம—ஸம்ஸாரமென்கிற தீவ்ரவிஷத்தைப்போக்கும் பிரபாவசாலியாகையாலே. [314]

---

(அ.)சசபிந்து:—சந்திரன்போல் பிராணிகளைக் குளிர்ந்து போஷிப்பவன்.

---

[308] తృష్టాతో యస్సమాక్రీణాత్ ఘోరాత్సంసారసాగరాత్ । అపారాత్పారమాప్నోతి యోమాంస్మరతినిత్యశః ॥ స్థితేమనసిసుస్వస్థే శరీరే సతియోనరః । ధాతుసామ్యే స్థితేస్మర్తావిశ్వరూపఞ్చమామజమ్ ॥ తతస్తంమ్రియమాణన్తు కాష్ఠపాషాణసన్నిభమ్ । అహంస్మరామిమద్భక్తం నయామిపరమాంగతిమ్ ॥

[309] తేతంసోమమివోద్యన్తందృష్ట్వా ॥

[310] రక్షాంసిభీతానిదిశోద్రవన్తి ॥

[311] చన్ద్రమామనసోజాతః ॥

[312] యస్యాదిత్యోభాముపయుజ్యభాతి ॥

[313] సర్వజిహ్మంమృత్యుపదమార్జవంబ్రహ్మణఃపదమ్ ॥

[314] దేవాదేవస్యయశ్చైవయచ్ఛద్దుఃఖభేషజమ్ ॥

[జగతస్సేతుస్సత్యధర్మపరాక్రమః ॥ భూతభవ్యభవన్నాథఃపవనః]
[పావనోఽనలః । కామహా]

జగతస్సేతుః லோகத்துக்கு அணையானவன், సత్యధర్మపరాక్రమః- ஸத்தியமான தருமமும் பராக்கிரமமுமுற்றவன், భూతభవ్యభవన్నాథః- இறந்தன நிகழ்வன வருவனவைகட்கிறைவன், పవనః - வீசுமவன், పావనః - பரிசுத்திகரன், అనలః - திருப்தியடையாதவன், కామహా- ஆசையைத்துறப்போன்,

(வி.) ஔஷதமானவன். ஜகதஸ்ஸேது:-(நன்மை தீமைகளை கலக்கவொட்டாமல் பிரிக்கையாலே) லோகத்தில் [315]ஸேதுவானவன் ஆகையாலன்றோ பிராணிகளுக்குத் தாம்செய்யாதகருமத்திற்குப் பலன்வந்தும், செய்ததற்குப்பலன் வாராமலு மிருப்பதில்லை. இதற்கு வசநம் [316]காண்க. ஸத்ய தர்ம பராக்ரம:—இப்படிப்பட்ட தர்மங்களும் கல்யாண குணங்களும், பராக்கிரமங்களும், சேஷ்டிதங்களும் ஸத்தியமாயிருக்கப்பெற்றவன். இப்படியேயன்றோ [317]அருச்சுனன் குணசேஷ்டிதங்கள்தொடக்கமானவை யெல்லாம் ஸத்தியமென்பதாகச்சொன்னது. பூதபவ்யபவந்நாத.—இப்படிப்பட்ட ஐசுவரியம் த்ரிகாலத்திலு முண்டாயிருக்கப்பெற்றவன். [318]

பவந:—இப்படி எப்போதுமெங்கும ஸ்வபாவமாகவே வீசித்திரியுமவன். இவனுடைய கெந்தலேசத்தைக்கொண்டன்றோ காற்றுங்கூட எப்போதும் வீசுந்திறமை யுடைத்தாயிருக்கிறது.

பாவந:—அப்படியே தன் ஸம்பந்தம்பெற்ற கங்காதிகளையும் ஜகத்துக்கெல்லாம் பரிசுத்தி கரங்களாகும்படி செய்பவன் [319]

அநல:—இப்படிப் பல்படியாய் உபகரித்தும்போருமென்று ஆறியிருக்கமாட்டாத அருளுடையவன்-இப்படிப்பட்ட சக்தியினது லேசத்தைக் கொண்டுதான் அக்கினிகூட 'அநலன்' என்று பெயர்பெற்றது.

காமஹா—இப்படிப்பட்ட தனது குணாதிசயங்களை யெல்லாங் கண்டவருக்கு சபதாதிவிஷயத்தி லாசையைப்போக்கடிப்பவன் [320]

(அ.) அநல:—பிராணனைப் பயனுடையதாகச் செய்பவன்; அதாவது ஜீவஸ்வரூபன், போருமென்கிற பரியாப்தியில்லாதவனென்றுமாம்.

[315] ఏష సేతుర్విధరణ ఏషాంలోకానా మసమ్భేదాయ ॥

[316] యథా ధేనుసహస్రేషు వత్సో విన్దతి మాతరమ్ । తథా పూర్వకృతం కర్మ కర్తారమనువిన్దతి ॥ శుభకృచ్ఛుభమాప్నోతి పాపకృత్పాపమశ్నుతే ॥

[317] సర్వమేతదృతమ్మన్యే యన్మాం వదసి కేశవ ॥

[318] భూతభవ్యభవన్నాథః కేశవః కేశిసూదనః ॥

[319] పావనస్సర్వలోకానాంత్వమేవ రఘునన్దన ॥

[320] న కామకలుషం చిత్తం మమ తే పాదయోస్స్థితమ్ ॥

[కామకృత్కాంతః కామః కామప్రదః ప్రభుః యుగాదికృద్యుగావర్తో]

కామకృత్ - ஆசையைத்தருமவன், కాన్తః - மனோஹரமானவன், కామః - அழகன், కామప్రదః - கோரினதைத்தருமவன், ప్రభుః - ஸமர்த்தன, యుగాదికృత్-யுகத்தின் ஆதியைச்செய்தவன்,

(வி.) காமகருத—மற்றும் போகமோக்ஷாதிகளையும் ஆசைப்படும்படி தானே செய்யுமவன். காந்தஃ—ஸௌந்தரிய ஸௌகுமாரியம முதலான திருமேனி குணஙகளாலே அதிமனோஹரமா யிருபபவன். காமஃ—சீலம் ஔதாரியம் முதலியகுணங்களால் மிகவும் இனியனுயிருபபவன்.

[இந்த குணங்களினது லேசமாத்திரத்தாலன்றே மன்மதனும் லோகத்தைப பிசசேற்றுகிறுன்.]

காமபரதஃ—தன்னை வேண்டுவோர்க்கும் மற்றும் க்ஷேத்திர புத்ராதங்களை வேண்டுவோர்க்கும் அவரவருக்குத்தக்கபடி அபீஷ்டத்தைக் கொடுப்பவன் [321]. ப்ரபுஃ—இந்த மனோஜ்ஞாதிசயத்தாலே ஸகலப்பிராணிகளுடைய ஹ்ருதயத்தையும ஹரிப்பதில் ஸமர்த்தனுனவன் [322].

த்ருதீயசதகம்—ஸம்பூர்ணம்.

# சதுர்த்தசதகம்.

(அவதாரிகை.) அநந்தரம் அபரிமிதமான ஆச்சரியரூபனுயிருக்கையைச் சொல்லுவதாய் முதலில் வடபத்திரசாயியை உதாஹரணமாகச்சொல்லுகிறது.

யுகாதிக்ருத்—யுகாந்தகாலத்திலும் யுகாதியைச்செய்பவன்.

[இவந்தான், பிரளயத்தில்கூட ஜகத்தை முழுகிப்போகவொட்டாமல் பிரவர்த்திக்கிறுனன்றே?]

யுகாவர்த்தஃ—தான் பண்ணும் தர்மவ்யவஸ்த்தையைக் கொண்டு கிருதம்முதலான யுகங்களை அடிக்கடி திருப்புமவன்.

(அ.) காமக்ருத்—காமனென்கிற ப்ரத்யும்நனைப்பெற்றவன்.

யுகாதிக்ருத்—யுகம்முதலான காலபேதத்தைச் செய்யுமவன்; யுகாதிகளை ஆரம்பிக்குமவனென்றுமாம்.

[321] ఏకో బహూనాం యో విదధాతి కామాన్ ॥

[322] రామః కమలపత్రాక్షః సర్వసత్వమనోహరః ॥

[ నైకమాయో మహాశనః । అదృశ్యో వ్యక్తరూపశ్చ ]

యుగావర్తః - யுகங்களைத் திருப்புமவன், నైకమాయః - பலவித ஆச்சரியங்கள்செய்பவன், మహాశనః - பேருணவுண்பவன், అదృశ్యః - காணவரியன், వ్యక్తరూపః - ஸுலபமாய் அறியக்கூடிய ரூபத்தை

---

(வி) நைகமாயः=சிறியபாலக னுருவாயிருப்பது, அபரிமிதமான லோகங்களை உமிழ்வது, யாதொரு ஆதாரமுமின்றி ஒரேவெள்ளமாயிருக்கையில் ஒரு ஆலிலையில் கண்வளர்ந் தருளுவது முதலாய், இப்படியென்று ஊஹிக்கமுடியாத அனேகம் ஆச்சரியமுற்றவன்.

[இத்திருநாமத்திற்சொன்ன மாயையென்னும் சப்தம் மித்யையான விஷயத்தைச் சொல்லுகிறதென்று நினைக்கவேண்டாம். ஸத்யமானவிஷயங்களிலும் மாயையென்னும் சப்தத்திற்குப் பிரயோகம் அதிகமாயிருக்கிறது. எங்ஙனேயென்னில்:—"மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத்" என்று அநேகம் அர்த்தங்களையும் அனேகம் காரியங்களையும் செய்கின்ற ஸத்தியமானப்பிரகிருதியினிடத்திலும், "மாயா வயுநம் ஞாநம்" என்றும "ஸங்க்யாதா தேவமாயயா" என்றும், "விச்வாநி தேவவயுநாநிவித்வாந்" என்றும் ஞாநத்திலும், "தேநமாயா ஸஹஸ்ரம்தத் சம்பரஸ்யாசுகாமிநா என்றுதொடங்கி ஞாநத்தால் போக்கமுடியாததாய் அஸ்திரத்தாலேயே போக்கவேண்டியதாய் சொல்லப்பட்டது. இன்னும் பாரதத்தில் ஆரண்யபர்வத்தில் மார்க்கண்டேயாதிகளின் [323]வசநங்களிலுங்காண்க.]

மஹாசந:=ஸகல ஜகத்தையும் விழுங்குகையாலே பெரிய ஆகாரம புசிப்பவன் [324]. அத்ருச்யः=இவ்விதமென்று ஊஹிக்கமுடியாத விருத்தாந்தமுடையவன்[325]. வ்யக்தரூபः=அப்படியிருக்கச் செய்தேயும் ஆச்ரிதரான மார்க்கண்டேயாதிகளுக்கு சுகமாய்க் காணும்படியான வடிவுடையவன். [326]

---

[323] తతో మే పృథివీపాల విస్మయస్సుమహానభూత్ । లోకస్రష్టా సమస్తశ్చ ఇత్యుక్త్వాన్తర్హితస్తాత సదేవః పరమాద్భుతః । ఆశ్చర్యం భరతశ్రేష్ఠ ॥

[324] యచ్చ కిఞ్చిన్మయా లోకే దృష్టం స్థావరజఙ్గమమ్ । తదపశ్యమహం సర్వం తస్య కుక్షౌ మహాత్మనః ॥

[325] కథం త్వయం శిశుశ్శేతే లోకే నాశముపాగతే । తపసా చిన్తయానశ్చాపి తం శిశుం నోపలక్షయే ॥

[326] అతసీపుష్పసఙ్కాశః శ్రీవత్సకృతలక్షణః । సాక్షాల్లక్ష్మ్యా ఇవావాసః స సదా ప్రతిభాతి మే ॥ తస్య తామ్రతలౌ తాత చరణౌ సుప్రతిష్ఠితౌ । సుజాతమృదురక్తాభిరఙ్గులీభిరలఙ్కృతౌ ॥ ప్రణతేన మయా మూర్ధ్నా గృహీత్వా హ్యభివన్దితౌ ॥

[సహస్రజిదనంతజిత్ ॥ ఇష్టోవిశిష్టశ్శిష్టేష్టః శిఖండీసహుషోవృషః ।]

யுடையவன், ஸஹஸ்ரஜித் - ஆயிரங்காலம் விளங்குமவன், அநந்தஜித் - அளவின்றிவிளங்குமவன், இஷ்டः - விரும்பப்பட்டவன், அவிசிஷ்டः - விலக்ஷணன், சிஷ்டேஷ்டः - சிஷ்டர்களுகந்தவன், சிகண்டீ கொண்டையுடையவன், நஹுஷः - கட்டுமவன், வ்ருஷः - தெளிப்பவன்

(வி.) ஸஹஸ்ரஜித் = ஆயிரயுகங்கொண்ட கல்பமமுழுதும அப்படி கண்வளர்ந்தபடியே விளங்குமவன். 327

அநந்தஜித் — இப்படி சிறியபாலகனு யிருக்கச்செய்தேயும் தன்னுடைய மஹிமாதிசயத்தை ஒருவரும் ஒருக்காலும்ஒருவிதத்தாலும் அறியக்கூடாதபடி விளங்குமவன். 328

இஷ்டः அவிசிஷ்டः = இப்படி திருவயிற்றில் தரிக்கப்பட்டப் பிராணிகளை தாரதம்மியமின்றி தனது கிருபாமாத்திரத்தால் தாய்போல இஷ்டமாய் காத்தருளுமவன்.

சிஷ்டேஷ்டः = பண்டிதச் சிரேஷ்டாளான மார்க்கண்டே யாதிகளாலெல்லாம் உத்கிருஷ்ட புருஷார்த்தமாக விரும்பப்பட்டவன். 329

சிகண்டீ — அபரிமிதமாய், ஒருவராலும் திரஸ்கரிக்க முடியாத ஐசுவரியமான பரமதேஜஸ் ஸென்னும் சிகரத்தையுடையவன்.

நஹுஷः — தன்மாயையால் ஜீவர்களைக் கட்டுப்படுத்துகிறவன். 330

வ்ருஷः — கடலில் அலைந்து சிரமப்பட்ட மார்க்கண்டேயாதிகளின் தாபம்தீரும்படி அமுதத்துக் கொப்பான தன் காந்தியாலும் வார்த்தையாலும் குளிரவர்ஷிப்பவன். 331

(அவதாரிகை) அநந்தரம் பரசுராமவிருத்தாந்தத்தைத் தெரிவிக்கிறார்.

(அ) ஸஹஸ்ரஜித் - (அசுரர்களின்) ஆயிரத்தை ஜயித்தவன்,

அநந்தஜித் - ஸகலப்பிராணிகளையும் யுத்தத்திலேயாகிலுமாம் கிரீடையிலாகிலுமாம் சிந்தை யொன்றிலே ஜயிப்பவன்.

சிகண்டீ - சிகண்டமென்கிற கலாபத்தையணிந்த கோபவேஷம்பூண்டவன்.

327 యావద్యుగానాం విప్రర్షే సహస్రం పరివర్తతే తావత్ స్వపిమి ॥

328 అనన్తశ్శరీరేఽతస్యాహం వర్షాణామధికం శతమ్ । నహిపశ్యామితస్యాహమన్తం దేవస్య కర్హిచిత్ ॥ ఆసాదయామి నైవాన్తం తస్య రాజన్మహాత్మనః ॥

329 సత్వస్థానిరహంకారాః నిత్యమధ్యాత్మకోవిదాః । మామేవ సతతం విప్రాశ్చిన్తయన్త ఉపాసతే ॥

330 తస్మింశ్చాన్యోన్యమాయయా సన్నిరుద్ధః ॥

331 తతో మామబ్రవీద్ బాలస్స పద్మనిభలోచనః । శ్రీవత్సధారీ ద్యుతిమాన్ వాక్యం శ్రుతిసుఖావహమ్ ॥ జానామి త్వాం పరిశ్రాన్తం తదా విశ్రమకాంక్షిణమ్ ॥

[ క్రోధహా క్రోధకృత్కర్తా విశ్వబాహుర్మహీధరః । అచ్యుతః ]

[ ప్రథితః ప్రాణః ]

క్రోధహా - சினத்தைவென்றவன், క్రోధకృత్ — சினமுண்டு பண்ணுமவன், కర్తా - அறுத்தவன், విశ్వబాహుః - எங்கும்பரந்த தோள்களுடையவன், మహీధరః - புவியைத்தரித்தவன், అచ్యుతః - நழுவாதவன், ప్రథితః - பிரஸித்தன். ప్రాణః - பிராணனானவன், ప్రాణదః - பெலன் ஈந்தவன், వాసవానుజః - இந்திரனைப்பின்பிறந்தவன், అపాంనిధిః - ஜலங்களைத்தரிப்பவன்,

(வி.) க்ரோதஹா — காசியபரிஷி பிரார்த்தித்த மாத்திரத்தில் இருபத்தொரு தடவை க்ஷத்திரியர்களைத் திரஸ்கரித்துக் கோபத்தைப் போக்கியவன்.

க்ரோதக்ருத் — முதலில் அவர்களுக்குக் கோபமூட்டினவன்.

கர்த்தா — அப்படிப்பட்ட கோபத்துக்கு மூலமான கார்த்தவீரியனை யறுத்தவன். 332 விச்வபாஹு: — இப்படி துஷ்டநிராஸார்த்தமாக எங்கும் பரந்த தோளுடையன்.

மஹீதர: — இப்படி பாரத்தையொழித்து பூமியைக்காத்தவன்,

அச்யுத: — பிரம்மாதிகளொடொக்க அவதரித்தகாலத்தில்கூட ஐசுவரியம் நழுவாமலிருப்பவன். 333

ப்ரதித: — இத்தன்மையனென்பதாகப் பிரஸித்தியடைந்தவன். 334

ப்ராண: — தன்னை ஆசிரயித்தோருக்கெல்லாம் ஜீவனமாயிருப்பவன். 335

(அவதாரிகை.) அநந்தரம் கூர்மாவதாரத்தை ஸங்க்ஷேபிக்கிறது

ப்ராணத: — தேவர்களுக்குக் கடலைக் கடையும்படியான பெலனைத் தந்தவன். வாஸவாநுஜ: — அமுதத்தைக்கோரிய இந்திரனுக்காக அவன் பின்தோன்றியவன். அபாம்நிதி: — கடைகையில் கடலைத்தரித்தமையால் ஜலத்துக்கிடமானவன்

(அ.) க்ரோதஹா - சாதுக்களின் கோபத்தைப் போக்குமவன்.

க்ரோதக்ருத் - துஷ்டாளிடத்தில கோபத்தை யுண்டுபண்ணுமவன்.

அச்யுத — பாவவிகாரங்களாறுமற்றவன்.

332 నిఃక్షత్రియాం యశ్చకార మేదినీమ్ ॥

333 చ్యవనోత్పత్తియుక్తేషు బ్రహ్మేంద్రవరుణాదిషు । యస్మాన్న చ్యవసే స్థానాత్ తస్మాత్సంకీర్త్యసేఽచ్యుతః ॥

334 ప్రఖ్యాతనామా మహాయశాః ॥ యశస్యైక భాజనమ్ ॥

335 ప్రాణోఽస్మి ప్రజ్ఞాత్మా తమ్మాయురమృతమిత్యుపాస్వ ॥

[ప్రాణదో వాసవానుజః। అపాంనిధిరధిష్ఠానమప్రమత్తః ప్రతిష్ఠితః॥]
[స్కందస్కందధరో ధుర్యో వరదో వాయువాహనః । వాసుదేవో]

అధిష్ఠానమ్-அதிஷ்டானமானவன், అప్రమత్తః- மிகவும்ஜாக்கிரதையாயிருப்பவன், ప్రతిష్ఠితః-நிலைபெற்றிருப்பவன். స్కన్దః-சோஷிப்பிக்கிறவன், స్కన్దధరః-கந்தனையுந்தரிப்பவன், ధుర్యః பாரத்தைவஹிப்பவன், వరదః-வரமளிப்பவன், వాయువాహనః காற்றைவீசச்செய்பவன், వాసుదేవః - வியாபித்துக்கொண்டு விளையாடுமவன்,

---

(வி.) அதிஷ்ட்டானம்—சுழன்றுவரும் மந்தரபர்வதத்திற்கு அதிஷ்ட்டானமானவன்.[336] அப்ரமத்த:—இவைகளைக் காப்பதில்ரொம்பவும் ஜாக்கிரதையா யிருப்பவன்.

ப்ரதிஷ்ட்டித:—மற்றொன்றை அபேக்ஷியாமல் தனது மஹிமையில் தானே பிரதிஷ்ட்டிதனிருப்பவன்.[337] ஸ்கந்த:-ஸ்வயம் அஸுரர்முதலானோரை சோஷிப்பிக்கிறவன். ஸ்கந்ததர:—அப்படிப்பட்ட தேவதைகளின் சேனாபதியான கந்தனைக்கூடத் தரிக்குமவன். கந்தனைக்கூடத்தனது விபூதியாகவன்றோ கீதையில் அருளிச்செய்தான்?[338]

துர்ய:—புவனங்களின் பாரத்தை வஹிப்பவன். வரத:—மற்றும் லோககாரியத்தை நிர்வஹிப்பவருக்கும் அந்தந்த வரங்களைத்தருமவன்.

அதாவதெப்படியெனில்—வாயுவாஹந:—ஜகத்துக்குப் பிராணனாய் விளங்குமவாயுவைவீசும்படியாய்ச் செய்பவன்.

(அவதாரிகை.) அநந்தரம் ஈராறுன அத்தியாத்மவிஷயம்.

வாசுதேவ:—வாஸு: என்றால் சூரியன் கிரணங்களால் மூடிக்கொள்வதுபோல் பிரபஞ்சத்தை வியாபித்துக்கொண்டு தன்னில் அவைவஸிக்கும்படிசெய்து, அதில் தான் வஸிக்கிறவனென்றபடி. தேவ:—என்றால் கீழ்ச்சொன்னபடி விளையாடுகிறவன். ஜயங்கோருகிறவன், விளங்குகிறவன், ஸ்தோத்திரம் பண்ணப்படுகிறவன், போகிறவனென்றபடி. ஆக, 'வாசுதேவ:' ஜகத்வியாபகனாய்க்கொண்டு ஜகத்திலுறைந்து விளையாடுகிற

---

(அ) அதிஷ்டானம் - பூதங்களுக்கு உபாதாந காரணமாய்க்கொண்டு அதிஷ்டானமானவன்.

ஸ்கந்த:—அமிருதரூபமாய்ப் பெருகுமவன். வாயுரூபமாய் சோஷிப்பிக்கிறானென்றுமாம்.

ஸ்கந்ததர:—தர்மமார்க்கத்தை ஸ்தாபிப்பவன்.

---

[336] మన్దరాద్రేరధిష్ఠానం భ్రమతోఽభూః మహామునే ॥

[337] స భగవః కస్మిన్ప్రతిష్ఠితః ? స్వే మహిమ్ని ॥

[338] సేనానీనామహం స్కన్దః ॥

[బృహద్భానురాదిదేవః పురందరః॥ అశోకస్తారణస్తారః శూరః]

బృహద్భానుః-பெரியகிரணங்களுள்ளவன், ఆదిదేవః - முதலில் கிரீடிப்பவன், పురందరః-புரங்களைப்பிளந்தவன், అశోకః - சோக விரோதி, తారణః-காப்பவன், తారః-தப்புவிக்குமவன், శూరః

(வி.) வன் என்றதாயிற்று. 339இது ஸகல சாஸ்திர ரஹஸ்யமாகையால் இதை அதிகமாய் விவரிக்கிறோமில்லை.

(அவதாரிகை.) இதையே விவரிக்கிறதுமேல்-அதில் போகவிபூதியான பரமாகாசமாய் விளங்கும் பிரகாரத்தைச் சொல்லுகிறது.—

ப்ருஹத்பாநு:—பெரியகிரணங்கள் பொருந்தியவன்.

(அ-கை.) லீலாவிபூதியாய்க்கொண்டு விளையாடும்படி சொல்லுகிறது.

ஆதிதேவ:—முதலில் விளையாடுமவன்[340].

(அவதாரிகை.) பிரபஞ்சத்தை மூடிக்கொண்டிருக்கையாலே அஸத்துக்களை நிவாரிக்கும்படி சொல்லுகிறதுமேல், நான்கு திருநாமங்களால்;-

புரந்தர:—அஸுரரூபமான புரங்கள் மூன்றையும் பொடி செய்தவன்.

[இப்படி சொன்னதனால், அசுரர், பிசாசங்கள், இடி, சாபம், முதலிய ஆதிதைவிகங்களினின்றும் ரக்ஷிக்கும்படி சொன்னபடி.]

அசோக:—ஆத்தியாத்மிகங்களான சோகம், மோஹம், பசி முதலியவைகளினின்றும் காக்குமவன்.

தாரண:—ஆதிபௌதிகங்களான சத்துருக்கள், கள்ளர், வியாதிமுதலியவைகளினின்றும் காக்குமவன்.

தார:—ஸகல ஸம்ஸாரபயத்தினின்றும் காப்பாற்றுமவன். இப்படியே அதர்வசிரஸில் சொல்லுகிறது.[341]

(அவதாரிகை.) ஜயிக்குந்தன்மையுடைமையைச் சொல்லுகிறது:—

சூர:—ஜயசீலன்.

(அ) ப்ருஹத்பாநு:—தன்னுடைய பெரிதான கிரணங்களாலே சூரியசந்திராதி ரூபியாய்க்கொண்டு ஜகத்தை பிரகாசிப்பிப்பவன்.

339ఛాదయామి జగత్సర్వం భూత్వా సూర్య ఇవాంశుభిః । సర్వభూతాధివాసశ్చ వాసుదేవస్తతస్స్మృతః ॥ సర్వత్రాసౌ సమస్తఞ్చ వసత్యత్రేతి వై యతః । తతస్స వాసుదేవేతి విద్వద్భిః పరిపఠ్యతే ॥

340సంప్రయోజ్య వియోజ్యాయం కామకారకరః ప్రభుః । క్రీడతే భగవాన్ ॥

341గర్భజన్మజరామరణాది సంసారసాగరమహాభయాత్తారయతీతి తస్మాదుచ్యతే తారః ॥

[శౌరిర్జనేశ్వరః । అనుకూలశ్శతావర్తః పద్మీపద్మనిభేక్షణః ॥]
[పద్మనాభోऽరవిందాక్షః పద్మగర్భః]

ஜயசீலன், శౌరిః - சூரன்மைந்தன், జనేశ్వరః - ஜநங்களுக்கு ஈசுவரன், అనుకూలః - கரையைஅநுஸரித்தவன், శతావర్తః - நூறுசுழியுற்றவன், పద్మీ - பதுமங்கொண்டவன், పద్మనిభేక్షణః கமலத்தைநிகர்த்தபார்வையன், పద్మనాభః-பதுமத்தைநாபியிலுடையவன், అరవిందాక్షః-தாமரைமலர்போன்றகண்களுடையவன், పద్మగర్భః-பதுமத்துள்ளுறையன்,

---

(வி.) (அவதாரிகை) இதையெல்லாம் தன்னிடத்தில் விசேஷபக்தாளுக்குக் காட்டுவதாக அவர்களிடஞ் செல்லும்படி சொல்லுகிறது.

சௌரி:=சூரனென்கிற வஸுதேவர்க்கு மைந்தனானவன்.

[என்றால்-அவர்க்குத் தனது மஹிமையெல்லாம் காட்டினனென்றபடி]

ஜநேச்வர:=(இப்படி ஸர்வமும் முழுகும்படி உஜ்வலிக்கின்ற ஐசுவரியமென்கிற மஹாப்பிரவாகத்தை யுடைத்தாயிருக்கையாலே) ஜநங்களுக்கெல்லா மீசுவரன்.

(அ-கை.) இப்படி யிருக்கச்செய்தேயும் ஸ்வபாவமாகவே பெரியனாகையாலே கெர்வம், மதம், அபிமாநம் முதலியவைகளற்றிருக்கையால்.—

அநுகூல:=கரைபுரளாமலிருப்பவன். [342]பக்தர்களுக்கு வசமாயிருப்பவனென்றுமாம.[343] சதாவர்த்த:=நூறுசுழி பொருந்தியன்.

[என்றால்—இப்படி கரைபுரளும்படியான தன் ஐசுவரியத்தைக் கரைபுரள வொட்டாமற் றடுப்பதனால், இடுக்கான விடங்களிற்செல்லமாட்டாத வெள்ளம் சுழிபடுவதுபோல் சுழிபட்டுக் கிடக்குமென்றபடி.]

(அவதாரிகை) இப்படி வாசுதேவனது குணங்களை விவரித்து ரூபத்தை விவரிக்கிறதுமேல்:—

பத்மீ=லீலாரவிந்தத்தோடு நித்தியமாய் விளங்குமவன்.

பத்மநிபேக்ஷண:=நிர்மலமான கமலம அசைந்தாடுவதுபோல், ஆச்சிரிதாளுடைய சிரமந் தீரும்படி ரமணீயமான வீக்ஷணமுடையவன்.

பத்மநாப:=பதுமம்போன்ற நாபியையுடையவன். அரவிந்தாக்ஷ:=அரவிந்தம்போல் அழகிய திருக்கண்களுடையவன். பத்மகர்ப்ப:=தனனைப்போல் பரிமளிதது மிருதுவாய் விளங்குகின்ற ஆஸநபதுமத்திலுறை

---

(அ.) சதாவர்தத:=தர்மத்தைக் காப்பதற்காக நூறுதடவை யவதரிப்பவன் நாடிகள் நூற்றிலும் பிராணரூபியா யிருப்பவனென்றுமாம்.

---

[342] వీర్యవాన్సు చవీర్యేణమహతా స్వేనవిస్మితః ॥

[343] హస్తావలంబనో హ్యేకో భక్తిక్రీతో జనార్దనః ॥

[శరీరభృత్ । మహర్ధిః ఋద్ధో వృద్ధాత్మా మహాక్షో గరుడధ్వజః ॥]
[అతులశ్శరభో భీమ ]

శరీరభృత్-சரீரத்தை நப்போஷிப்பவன், మహర్ధిః-ஸமிர்த்தியுற்றவன், ఋద్ధః-ஸமிருத்தன், వృద్ధాత్మా-வளர்ந்தஸ்வரூபன், మహాక్షః-பூஜ்யமானரதாவயவத்தையுடையவன், గరుడధ్వజః-கெருடக்கொடியன், అతులః ஒப்பற்றவன், శరభః-சிக்ஷிப்பவன், భీమః-பயங்

(ஸி) பவன். அதவா-தன்னை உபாஸிப்பவர்களின் இருதயகமலத்தில் எழுந்தருளியிருப்பான். 344

சரீரப்ருத்—இப்படி சுபமான ஆசிரயமாய் விளங்கும் தன்குணங்களாலே தன்சரீர பூதர்களான உபாஸகர்களைப்போஷிப்பவன். உபாஸிக்கப்படும் பரமபுருஷனுடைய குணங்களேயன்றோ உபாஸகர்களுக்குபபோஷணம்? 345 உபாஸகந்தான் அவனுக்கு ஆத்மாவும் சரீரமும்போலன்றோ? 346

(அவதாரிகை) அநந்தரம் விபூதியாலும் அவனையே விவரிக்கிறது.

மஹர்த்தி: = அவர்களுடைய யோகக்ஷேமத்துககுப் போரும்படி அபாரமான விபூதியுடையவன். ரித்த:-அவர்களுக்கு ஸமிருத்தியுண்டானால் தானும் ஸமிருத்தியாயிருப்பவன் 347. வ்ருத்தாத்மா = இப்படிப்பட்ட மஹத்தான மஹிமையையெகதேசத்தில் அடக்கிக்கொள்ளும்படி மிகவும் வளர்ந்திருக்கிற திவ்யாத்மஸ்வரூபமுடையவன்.

மஹாக்ஷ: = பூஜ்ஜியமான ரதாவயவத்தையுடையவன்.

[என்றால்—வகிக்குந் தன்மைகொண்டு ரதத்தின் அவயவத்தோடொத்திருக்கையாலே அக்ஷமென்று வேதமயனான கெருடனைச்சொல்லி அவரை வாஹநமா யுடையவனென்றபடி.]

கருடத்வஜ: = அந்தகெருடனையே கொடியிற்கொண்டவன். ஸர்வேசுவரனென்கைக்கு இதொரு முக்கியமான அடையாள மன்றோ? அதுல:-ஒப்பற்றவன். சரப:—தனது வியவஸ்த்தையைக் கடந்தவர்களைச் சிதைப்பவன். பீம:—ஆனதுபற்றியே அவர்களுக்குப பயங்கரமாயிருப்பவன்.

(அ.) வ்ருத்தாத்மா - நெடுநாளாயுண்டான ஆத்மஸ்வரூபத்தையுடையவன். சரப.—சரமென்று சரீரங்களாய் அவற்றுள் ஜீவரூபியாயிருப்பவன். பீம;—பயங்கரன்; அல்லது "அபீம." என்று ஸந்மார்க்கவாத்திகளுக்குப் பய முண்டுபண்ணாதவன்.

[344] దహారంవిపాప్మంవరవేశ్మభూతం యత్పుణ్డరీకమ్ ॥

[345] వసతిహృదిసనాతనేచ తస్మిన్ భవతిపుమాన్ జగతోఽస్య సౌమ్యరూపః ॥
బ్రహ్మైవిదఖవసౌమ్యతేముఖంభాతి ॥

[346] రక్షతేభగవాన్విష్ణుః భక్తానాత్మశరీరవత్ ॥

[347] అభిషిచ్యచలఙ్కాయామ్ ॥ ... విజ్వరః ప్రముమోదహ ॥

స్సమయజ్ఞోహవిర్హరిః।సర్వలక్షణలక్షణ్యోలక్ష్మీవాన్సమితింజయః

கரன்; ஸமயஜ்ஞ:-ஸமயமாக தெரிந்தவன், ஹவி:-குடுக்கல்வாங்கல் செய்பவன், ஹரி:-போக்கடிப்பவன், ஸர்வலக்ஷணலக்ஷண்ய:-ஸகல லக்ஷணங்களுமுள்ளவனாகவறியத்தக்கவன், லக்ஷ்மீவான்-லக்ஷ்மியோடுகூடியவன், ஸமிதிஞ்ஜய:-யுத்தத்தைஜயிப்பவன்,

(வி.) இவனிடத்தில் பயத்தாலன்றோ வாயுமுதலான தேவர்கள் தந்தாமுடையவியவஸ்தையைக் கடவாமலிருக்கிறார்கள்? 348

ஸமயஜ்ஞ:=ஸமயமறிந்தவன்.

[என்றால-அந்த அக்கினிமுதலியதேவதைகளில், அக்கினி உயரவே ஜ்வலிக்கவேண்டுமென்றும், வாயு எப்பொழுதும்வீசவேண்டுமெனறு மிப்படிக்கெல்லாம் அவரவர்க்குத் தக்கபடி அதிகார நியமத்தைக்கண்டறிபவனென்றபடி. அல்லது. பக்தாளுக்குத் தன்னைத்தரவேண்டிய ஸமயந்தெரிந்தவனென்றபடி. அல்லது, அவர்களுக்கு அபயப்பிரதானம் பண்ணுகிற விரதந் தெரிந்தவ னென்றபடி. 349

ஹவி.=சுருதி ஸித்தமான ஸமயமறிந்து அவர்களுக்கு ஸ்ரீயைக்கொடுப்பவன். அவர்கள் தரும் ஹவிஸ்ஸைப்பெற்றுக்கொள்பவன்.

ஹரி=அவர்களுக்கு நேரிடும் விக்கினங்களைப் போக்குமவன். 350

(அவதாரிகை.) அநந்தரம்லக்ஷ்மீபதியான மூர்த்தியைச்சொல்லுகிறது.

ஸர்வலக்ஷண லக்ஷண்ய:=ஸாக்ஷாத் லக்ஷ்மீதேவியானவள் எப்போதும் ஆலிங்கநம் பண்ணிக் கொண்டிருக்கிறாளென்பதை யறிவிக்கின்ற ஸகல லக்ஷணங்களோடுங் கூடியிருப்பதாக அறியத்தகுந்தவன். 351

லக்ஷ்மீவான்—லக்ஷ்மியோடு நித்தியமாய்க் கூடிவிளங்குமவன். 352

ஸமிதிஞ்ஜய:—சண்டையில் ஜயிப்பவன்,

[என்றால்—பிதாவைப்போல் ஹிதஞ்செய்கையாலே ஸகல லோக பிதாவான தன்னிடத்தில் அடிமைசெய்யும விஷயத்தில் விவாதம்பண்.

(அ.) ஸமயஜ்ஞ:—ஸ்ருஷ்டிமுதலிய ஸமயங்களறிந்தவன். அதவா-ஸகலபூதங்களிலும் ஸமமாயிருக்கையே யக்ஞமாகக் கொண்டவனென்றுமாம்,

ஹவிர்ஹரி:—யக்ஞங்களில் ஹவிர்ப்பாகங்களைக் கொண்டுபோமவன்

[348] భీషాస్మాద్వాతఃపవతే ॥

[349] తస్యతావదేవచిరంయావన్నవిమోక్ష్యే అథసంపత్స్యే ॥

[350] హరిర్ హరతిపాపానిదుష్టచిత్తైరపిస్మృతః ॥

[351] ధ్యాయేత్కమలగర్భాభం దేవంలక్ష్మీపతింతతః । కమలాలయహేతీశవిభూషితఃరహస్యమ్ ॥

[352] ద్వాభ్యాన్తేన్యపరిణయేలీలయైవసమర్పయన్ । ప్రకాశయన్నానాదిత్వమాత్మనాత్రక్రీతేస్సహ ॥

[విక్షరో రోహితో మార్గో హేతుర్దామోదరస్సహః ।]
[మహీధరో మహాభాగో వేగవానమితాశనః ।]

విక్షరః-குறையாதவன், రోహితః-சிவந்தவன், మార్గః - தேடப்படுமவன், హేతుః-காரணன், దామోదరః - உலகத்தைவயிற்றில்கொண்டவன், సహః-ஸஹிக்கிறவன், మహీధరః-புவியைத்தரிப்பவன், మహాభాగః-மஹத்தானஸௌபாக்கியமுற்றவன், వేగవాన్-வேகசாலி, అమితాశనః - அளவற்ற ஆஹாரமுண்பவன்,

(வி.) னுகிற ஜீவகோடிகளை இந்த லக்ஷ்மியைக்கொண்டு வசப்படுத்திக் கொள்ளுமவன் என்றபடி.]

விக்ஷர:—இப்படி பக்தாளிடத்திலுண்டானப் பிரீதிமாறுமவிருப்பவன். ரோஹித:—(லக்ஷ்மீபதியான மூர்த்திக்குத் தாமரையின் உட்புறம் போன்ற திருமேனியாகையாலே) சிவந்தவன். மார்க்க:—இஷ்டஸித்திக்காக உபாஸகர்களால் தேடப்படுமவன். ஹேது:—இஷ்டஸித்திக்கு ஹேதுவானவன். தாமோதர:—லோகங்களை வயிற்றிற்கொண்டவன். 353

[கயிற்றால் கட்டுண்டபடியாலும் தாமோதரன் என்றபடி. என்றால்-இப்படி லக்ஷ்மியும் ஆசைப்படும்படியான சாதுரியம் விஞ்சியிருக்கச்செய்தேயும் ஆச்ரிதாளிடத்தில் வாத்ஸல்யத்தால் யசோதையினது கட்டுக்ககப்பட்டிருந்தானென்றபடி.]

ஸஹः—(இப்படி அவள்கட்டவும் அடிக்கவும் மிரட்டவும்) பொறுத்திருந்தவன். மஹீதர:—அவனே பூபாரத்தைப் போக்குகையாலே பூமியைத்தாங்குமவன்.

மஹாபாகः—மஹத்தானஸௌபாக்கியத்தையுடைத்தானவன்.
[என்றால்-நீளாதேவி தொடக்கமான பதினாறாயிரந் தேவிமார்களும் திவ்யகன்னிகையான ருக்மணிப் பிராட்டியும், ஸத்தியபாமை, ஜாம்பவதி தொடக்கமான நாய்ச்சிமார்களும் தாம் ஆசைப்பட்டு வரிக்கும்படியான ஸௌபாக்கிய முடைத்தானவன் என்றபடி.]

வேகவாந்-(மனிதரைப்போல் விளையாடும் பொழுதும் எதிரிடக்கூடாத பரமைசுவரிய முடையனாயிருக்கையாலே) வேகசாலியானவன். அதாவதெப்படி?. அமிதாசந:—அபரிமிதமாக இந்திரனுக்கென்றிடையர்களிட்ட பெருத்த ஆஹாரத்தை யமுதுசெய்தவன். 354

(அ) ஹேது:—உபாதாந நிமித்தங்களென்கிற இரண்டுவிதகாரணமுமானவன். தாமோதர:—தாம என்று ஸாதநமாய் அதனால் அடையப்படும் (உதரா) உத்கிருஷ்டகதியானவன், உத்பவः—ஸம்ஸாரத்தினின்றும் மேற்கிளம்பினவன். என்றால் அதீதனென்றபடி.

353 దామానిలోకనామానిభాన్తియస్యోదరాన్తరే। తేనదామోదరో దేవః ॥ త తస్సదామోదరతాం ప్రయయా దామబన్ధనాత్ ॥ 354 దేవో వా దానవో వా త్వమ్ ॥

[ఉద్భవః క్షోభణో దేవః శ్రీగర్భః పరమేశ్వరః। కరణం కారణం కర్తా]

ఉద్భవః - ஸம்ஸாரநிவர்த்தகன், క్షోభణః - கலக்குமவன், దేవః-கிரீடிப்பவன், శ్రీగర్భః - திருவைவளாப்பவன், పరమేశ్వరః-பரமேசுவரன், కరణం-ஸாதகதமன், కారణం - காரணமானவன், కర్తా-கர்த்தா,

---

(வி) உத்பவः—"தாமோதரம் பந்தஹாரம்" என்கிறபடியே தனது பாதத்தை நினைத்தவர்களுக்கு ஸம்ஸார பந்தத்தைப்போக்குகை யாலே ஸம்ஸாரம் நீங்கியவன். க்ஷோபணः—பந்தத்துக்கு உரிய வர்களையும் பந்திக்கின்ற பிரகிருதியையும் அலக்கழிப்பவன்.

தேவः—மாயையென்னும் பாசததால் ஜீவர்களைக் கட்டுப்ப டுத்தி, காடி புலி பன்றிகளை யிழுத்து விளையாடுவதுபோல் விளை யாடுமவன். ஶ்ரீகர்ப்பः—இம்மாதிரியான போகக்கிரீடைகளுடன் கூடி, பெரிய பிராட்டியாரை மனமுவக்கச்செய்துவளர்ப்பவன்[355].

பாமேச்வரः—இப்படி பெரியபிராட்டியார் உகந்து கூடியிரு க்கப் பெறுகையாலே தனது பரமை சுவரியத்துக்குப் பயன்பெற் றவன்.[356] கரணம்—ஸ்வப்ராப்தி ஸாதநங்களுள்தான், தலையா யிருப்பவன்.

[லோகத்தில் ஞாநகரணங்களான செவிகண் முதலியவைகளும், கிரி யோப கரணங்களான காசரணுதிகளும், இவனது சக்திலேசத்தைப்பெற் றிருக்கையாலே கரணமென்று பெயர்படைத்திருக்கின்றன.[357]]

காரணம்—அந்த கரணங்களைக்கொண்டு பிராணிகளுக்கு அததன் வேலையைச்செய்விக்கும் தெய்வமானவன்.

கர்த்தா-கர்த்தாவானவன் என்றால்—செய்கைகளுக்கு அதிகாரியாய் அவற்றின் பயனைப்புசிக்கும் ஜீவன் எபபடி தனது இன்பதுன்பங்களுக்கு அபிமானியா யிருக்கிறுனே அப்படியே ஸர்வேசுவரனும் அந்த ஜீவர்களை விட அதிகமாய் அவர்கள் இன்பதுன்பங்களுக்குந் தான் அபமானியாயிருக்

---

(அ.) ஶ்ரீகர்ப்ப:—ஜகத்ரூபமான ஶ்ரீயை கர்ப்பத்தில கொண்டவன்.
காரணம்—உபாதாந காரணமும் நிமித்தகாரணமு மானவன்.
கர்த்தா—ஸ்வதந்திரன். விகர்த்தா—விசித்திர புவநத்தைச்செய்தவன்.

---

355 విష్ణోరేషాఽనపాయినీ ॥

356 అతీవరామశ్శుశుభేఽభిరామయా విభుః శ్రియా విష్ణురివామరేశ్వరః ॥

357 చక్షుశ్చ ద్రష్టవ్యఞ్చ నారాయణః శ్రోత్రఞ్చ శ్రోతవ్యఞ్చ నారాయణః ॥

[వికర్తా గహనో గుహః। వ్యవసాయో వ్యవస్థానః]

వికర్తా - விகாரமடைபவன், గహనః-கோசரமாகாதவன், గుహః- ரக்ஷிப்பவன், వ్యవసాయః - கட்டுப்படுத்துமவன், వ్యవస్థానః- வியவஸ்த்தைபண்ணுமவன், సంస్థానః - வைக்கப்படுமவன்,

(வி.) கிருன்[358] ஆகவேதான் 'பஹூஸ்யாம்' என்று தானேபஹூவாகிறதாக அபிமானிக்கிருன். அல்லாதபோது "பஹூஸ்யாம்" என்று இரானே!

விகர்த்தா—ஆகவேதான் ஜீவர்கள் அந்தபலனை அநுபவித்தபோது, தான் ஹாஷசோகங்களுக்கு இளைத்து விகாரமடைகிருன்.

பிரம்மத்துக்கு விகாரமுண்டா யிருப்பதாகச் சொன்ருல் தோஷமன்ருே வென்ருல்-தனக்காக விகாரப்பட்டால மாத்திரம் தோஷமேயொழிய பிறற்காக அடையும் விகாரம் தோஷமாகமாட்டாதென்றறிக. இப்படியன்ருகில் பிறருடைய துயரத்தைக்கண்டு துக்கபபடுவதெனகிற தயைமுதலிய குணங்கள் இவனுக்குண்டென்பதாகச் சொல்வது எப்படிகூடும்?

கஹந:—புததிக்கெட்டாதவன்.

[என்ருல்-இப்படி பிராணிகளுடைய ஞாநாயதநமான ஆத்மாவுக்கும் போகத்துககும் அதன் உபகரணஙகளுக்கும் தான் அபிமானியாயிருக்கிருனென்கிற மஹாகுணம பொருந்தியிருக்கையாலே அவ்விஷயத்தில் இன்னபடியென்றுசொல்ல புத்திக்கெட்டாதவ னென்றபடி. 359]

குஹ:—இப்படி ரக்ஷிக்குமவன்.

அநந்தரம் த்ருவமூர்த்தியைச்சொல்லுகிறது:—

வ்யவஸாய:—தேஜஸ் சக்கிரஙகளையெல்லாம்அதிகமாய் தன்னில் கட்டுப்படுத்தும்.

[துருவ மூர்த்தியானவர் நக்ஷத்திரங்களுக் கெல்லாம் ஆதாரமான ஆகாச சரீரனைகையாலே இங்ஙனஞ் சொல்லுகிறதென்றறிக. 360]

வ்யவஸ்த்தாந:—கலையென்றும் முகூர்த்தமென்றும் மற்றும் பல்படிகளாகச் சொல்லப்படும் காலமுந் தனனிடத்தில் தானே ஸ்தாபிக்கபபட்டிருப்பவன்.

ஸம்ஸ்த்தாந:—ஸர்வமும் தன்னில் முடியும்படியானவன்.

(அ.) வ்யவஸ்த்தாந:—லோகபாலாளுடைய அதிகார வியவஸ்தையையும் ஜராயுஜம், அண்டஜம் ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்கிற ஜந்மவ்யவஸ்தையையும், பிராம்மண க்ஷத்திரியாதி ஜாதிவியவஸ்தையையும், அவற்றின் தர்மவியவஸ்தையையும், செய்தவன்.

[358] వ్యసనేషు మనుష్యాణాం భృశం భవతి దుఃఖితః । ఉత్సవేషు చ సర్వేషు పితేవ పరితుష్యతి ॥

[359] గుహ్యైవ సన్తన్న విజానన్తి దేవాః ॥ [360] ధ్రువచక్రభృతం దైవమ్ ॥

[స్థానదో ధ్రువః । పరర్ధిః పరమస్పష్టస్తుష్టః పుష్టశ్శుభేక్షణః ॥]

స్థానదః-ஸ்தாநத்தைத்தருமவன், ధ్రువః - நிலைக்கச்செய்பவன், పరర్ధిః - உத்கிருஷ்டமான ஐசுவரியமுற்றவன், పరమస్పష్టః - பரத்வம்ஸ்பஷ்டமானவன், తుష్టః-ஸந்தோஷமுற்றவன், పుష్టః-பரிபூர்ணன், శుభేక్షణః - சுபமானபார்வை வயுற்றவன்,

(வி.) ஸ்தாநதஃ=பரமபதமென்னும் ஸ்தாநத்தைத் தருமவன்.

த்ருவஃ=த்ருவமாகப் பண்ணினவன்.

[என்றால்-உத்தமமான தனது ஸ்தாநத்தைத் தருகையாலே ஸாதாரணமான த்ருவனென்பவனையும் தருவமாக (அதாவது சாசுவதனாகச்) செய்தவன் என்றபடி.]

(அவதாரிகை.) அநந்தரம் ம்ருத ஸஞ்ஜீவநமான ராம வ்ருத்தாந்தம் சொல்லப்படும்.

பரர்த்திஃ=ஸர்வேசுவரனு யிருக்கையிற்காட்டில் உத்கிருஷ்டமான ஐசுவரியத்தை யுடையவன்.

["விஷ்ணுநா ஸத்ருசோவீர்யே ஸோமவத் ப்ரியதர்சநஃ" என்று ஸ்ரீ ராமனுடைய குணத்தின் ஏகதேசத்துக்கு திருஷ்டாந்தமாகச் சந்திராதிகளைச் சொன்னுப்போலவே அநுத்க்ருஷ்டாளான அந்தசந்திராதிகளோடொக்கப் பரனையும் திருஷ்டாந்தமாகச் சொல்லிற்றன்றோ? மேலும் பரத்வாவஸ்த்தையும் இந்த அவதாரத்திலேயேயன்றோ சொல்லப்பட்டது. [361]]

பரமஸ்பஷ்டஃ=தனது பரத்வம் ஸ்பஷ்டமாய் தெரியும்படி விளங்குமவன். [362] துஷ்டஃ=பிரீதியடைந்தவன்.

[என்றால்-மற்றொருவர்க் கேலாத பாத்வதசையிற்காட்டில் இவ்வவதாரத்தில் இதர மநுஷ்யாதிகளுக்கும் யோக்கியமான தசரத புத்திரனுகுந் தன்மையோடுகூட ஜகத்பாலநமு முண்டாகப் பெறுகையாலே ரொம்பவும் பிரீதனுயிருக்கு மென்றபடி. [363]]

புஷ்டஃ=இப்படி மஹாகுணங்களால் பரிபூர்ணன். சுபேக்ஷண:=

(அ) த்ருவஃ—நாசமடையாதவன், சுபேக்ஷணஃ—மோக்ஷகாமருக்கு மோக்ஷத்தையளிப்பதும், போககாமருக்கு போகத்தைத் தருமதும், ஸர்வஸந்தேஹங்களையும் நீக்குமதும், ஸகல கர்மங்களையும் நசிப்பிப்பதும், அவித்தையை நிவர்த்திப்பதுமான பார்வையுற்றவன்.

[361] అవ్యక్తమక్షరం బ్రహ్మనిర్మితమ్ । దేవానాం హృదయం సౌమ్యం సహ్యం రామః పరన్తపః ॥

[362] వ్యక్తమేష మహాయోగీ పరమాత్మా సనాతనః ॥

[363] పితరం రోచయామాస తదా దశరథం నృపమ్ ॥

[ రామో విరామో విరతో మార్గో నేయో నయో ]

రామః - ரமிக்கச்செய்பவன், విరామః - ஒழிப்பவன், విరతః - ஒழிந்தவன், మార్గః - தேடப்படுமவன், నేయః - நியமிக்கத்தக்கவன், నయః - ஆகர்ஷகமானவன்,

(வி.) இவ்விக்ரமானுஜ்சவரியம், சீலம்முதலியவைகளின் அதிசயத்தைக்கோழ்ச்சொல்லுமவைகளாய், குளிர்ந்து விசாலமாய் கெம்பீரமாய் விளங்குந் தாமரைபோல் அழகிய திருக்கண்களுடையவன். [364]அதவா, தன்னைக்காண்பதும் தான்காண்பது மிரண்டும் சுபமாயிருக்கும்படி விளங்குமவன். [365]

ராமः=தன்குணரூபங்களைக்கண்டு வசப்பட்ட ஸகலப்பிராணிகளும் தன்னில் ரமிக்கும்படி [366]விளங்குமவன். விராமः=ஒழிப்பவன்.

[என்றால்-வரந்தரும் மிடுக்குடையரானப் பிரம்மாதிகளும், அழிவில்லாமை முதலிய அவர்கள் தந்த வரங்களும், அந்தவரம்பெற்ற ராவணாதிகளும், இவனிடத்தில் செல்லமாட்டாமல் ஒழிவர்களென்றபடி. [367]]

விரதः=ஸ்வபாவமாகவே நிரபேக்ஷனாகையால் அதிக்ஷுத்ரமான ராஜ்யாதிகளைக் கணிசியாமல் உபேக்ஷித்துக் கையொழிந்தவன். [368]

மார்கः=பரத்துவாஜாதி முனிகளால் தேடப்படுமவன்.

["விரஜோமார்க்கः" என்று பாடமாகில் நிர்தோஷமான வழியைக் காட்டுமவன் [369]என்று கொள்வது.]

நேயः=ஸுஹ்ருத்துக்கள் ஏவும்படி ஸுலபமானவன்.[370] நயः=அவர்களும் அப்படியே தன்சொல்வழி வரும்படி [371]விளங்குமவன்.

சதுர்த்தசதகம்—ஸம்பூர்ணம்.

(அ.) விரஜः—என்றபொழுது, விஷயத்தில் ராகமற்றவனென்றுபொருள்.

[364]సుభ్రూరాయత తామ్రాక్షః సాక్షాద్విష్ణురివస్వయమ్ ॥

[365]యశ్చ రామన్న పశ్యేత్తుయఞ్చ రామో నపశ్యతి । నిన్దితస్సవసేల్లోకే స్వాత్మా ప్యేనంవిగర్హతే ॥ [366]రామో రమయతాం శ్రేష్ఠః ॥ గుణాభిరామం రామఞ్చ ॥

[367]బ్రహ్మా స్వయమ్భూశ్చతురాననోవా ॥

[368]నచాస్యమహతీంలక్ష్మీంరాజ్యనాశోఽపకర్షతి ॥

[369]యోగతిర్యజ్ఞశీలానాంమాహితాగ్నేశ్చయోగతిః ॥

[370]ఆజ్ఞాప్యోఽహం తపస్వినామ్ ॥ అయమస్మి మహాబాహో బ్రూహియత్తేవివక్షితమ్ । కరిష్యామిమహత్కార్యంయత్త్వంవక్ష్యసిభారత ॥

[371]రక్షితవ్యాస్త్వయాశశ్వద్గర్భభూతాస్తపోధనాః ॥

ஸ்ரீ:

# பஞ்சமசதகம்.

[ నయః । వీరశ్శక్తిమతాం శ్రేష్ఠో ధర్మో ధర్మవిదుత్తమః ॥ వైకుణ్ఠః ]

అనయః - நயம்படாதவன், వీరః - வீரன் శక్తిమతాం శ్రేష్ఠః - சக்தியுள்ளவரிற்சிறந்தவன், ధర్మః - தர்மன், ధర్మవిదుత్తమః - தருமந்தெரிந்தவர்தலைவன், వైకుణ్ఠః - கலக்கச்செய்பவன்,

---

(வி) அநய:—கெடுமதியான ராவணாதிகளுக்குச் சிறிதும் நயமின்றி யிருப்பவன். அதவா-லோகத்திற்குத் தன்னைத்தவிர வேறு சுபமான விஷயமில்லாதபடி [372]விளங்குமவன்.

வீர:—ராக்ஷஸர்களைப் பயந்தோடச்செய்பவன். [373]

சக்திமதாம் ஸ்ரேஷ்ட்ட:—சக்தியுடையோரான தேவாதிகளால் ரொம்பவுங் கொண்டாடப்படுமவன். இப்படியே பரசுராமன் [374]கொண்டாடினார்.

தர்ம:—போகமோக்ஷங்க ளிரண்டுக்கும் ஸாதகமாயிருக்கையாலே தர்மமானவன். இப்படியே [375]பிரம்மா சொன்னார். இளைய பெருமாளும் [376]இப்படியே அருளிச்செய்தார்.

தர்மவித்துத்தம:—தருமந்தெரிந்த வஸிஷ்டர், வாமதேவர், மார்க்கண்டேயர், முதலானோரும் இங்கேகேட்டுணரும்படி அவர்களில் தலையானவன். [377]

வைகுண்ட:—ஸகலத்தையும் உறவாக்குமவன். [378]

---

(அ) அநய:—தனக்கோர் நியாமகனில்லாதவன். தர்ம:—ஸர்வ பூதங்களுக்கும் தாரணமானவன். தருமங்களால் ஆராதிக்கப்படுமவன் என்றுமாம்.

---

[372] ఏతే వయం సర్వసమృద్ధకామా యేషామయం నో భవితా ప్రశాస్తా ॥

[373] బ్రహ్మదణ్డప్రకాశానాం విద్యుజ్జ్వలితవర్చసామ్ । స్మరన్ రాఘవబాణానాం వివ్యథే రాక్షసేశ్వరః ॥

[374] అక్షయ్యం మధుహన్తారం జానామి త్వాం సురేశ్వరమ్ ॥

[375] బ్రహ్మవిదాం వరః ॥ లోకానాం త్వం పరో ధర్మః ॥

[376] ధర్మాత్మా సత్యసన్ధశ్చ రామో దాశరథిర్యది । పౌరుషే చాప్రతిద్వన్ద్వశ్శరైనం జహి రావణిమ్ ॥

[377] సర్వదాఽభిగతస్సద్భిః సముద్ర ఇవ సిన్ధుభిః ॥

[378] మయా సంశ్లేషితా భూమిరద్భిర్వ్యోమ చ వాయునా । వాయుశ్చ తేజసా సార్ధం వైకుణ్ఠత్వం తతో మమ ॥

[పురుషః ప్రాణః ప్రాణదః ప్రణమః పృథుః ।]
[హిరణ్యగర్భశ్శత్రుఘ్నో వ్యాప్తో]

---

పురుషః - பரிசுத்தன், ప్రాణః - ஜீவனமானவன், ప్రాణదః - பிராணனைத்தருமவன், ప్రణమః - வணங்கவைப்பவன், పృథుః - பருத்தவன், హిరణ్యగర్భః - ஸ்வர்ணத்துக்குள்ளுறைபவன், శత్రుఘ్నః - பகைவரைவெல்பவன், వ్యాప్తః - வியாபித்தவன்,

---

(வி.) [இப்படியே யன்றோ இவ்வவதாரத்தில் இவன் ஸன்னிதியில் பிராணிகள் ஒன்றையொன்று [379]அபேக்ஷிக்கிறதும், இவன் அஸந்நிதியில் ஒன்றும் வேண்டாதபடி [380]விரக்தியா யிருக்கிறதும்?

புருஷ:—பரமபாவநன் [381]. ப்ராண:—ஸகலரையும் பிழைக்கும்படி செய்பவன். ப்ராணத:—பிராணன்களைத் தருமவன். ஆகையாலன்றோ இவரைப் பிரிந்தபொழுது மரங்களும் வாடிப்போயின? ப்ரணம:—தனது குணங்களால் சராசரங்களை வணங்கச்செய்பவன் [382]. ப்ருது:—கீர்த்தியால் பருத்தவன் [383].

(அ-கை.) அவதார அஸம காலவர்த்திகளால் தியானிக்கப்படுகையாலே அவர்களுக்கும் சுபாச்ரயமாய் விளங்கி உபகரித்தபடி சொல்லுகிறது:—

ஹிரண்யகர்ப்ப:—இதமாயும் ரமணீயமாயு மிருக்கிற தியாநயோகிகளின் உள்ளத்துக்குள் பிரகாசிப்பவன். சத்ருக்ந:—அப்படி தியாநிப்பவர்களுக்கு விரோதியான சப்தாதி விஷயங்களை ராவணனையழித்ததுபோல் அழிப்பவன் [384]. வ்யாப்த:—குழந்தை விருத்தர்கள், ஸ்வாமி, ஸேவகன், சத்துரு, மித்திரன் முதலானோர் யாவரிடத்திலும வாத்ஸல்யம் ஸமமாகையாலே எங்கும் வியாபித்தவன். [385]

---

(அ.) ப்ராணத:—பிரளயகாலத்தில பிராணிகளின் பிராணனைக்கண்டிப்பவன், ஸ்ருஷ்டியில் பிராணனைத் தருமவனென்றுமாம்.

ஹிரண்யகர்ப்ப:—ஹிரண்யகர்ப்பனென்கிற பிரம்மாவின் பிறப்பிடமான ஸுவர்ணமயமான அண்டத்தை வயிற்றிற்கொண்டவன்.

---

[379] రామమేవానుపశ్యన్తో నాభ్యహింసన్పరస్పరమ్ ॥

[380] వ్యసృజన్ కబళాన్నాగా గావో వత్సాన్న పాయయన్ ॥

[381] పావనస్సర్వలోకానాం త్వమేవ రఘునన్దన ॥

[382] హృదయాన్యామమన్థేవ జనస్య గుణవత్తయా ॥

[383] పృథుశ్రీః పార్థివాత్మజః ॥ రామో నామ జనైశ్శ్రుతః ॥

[384] దశేన్ద్రియాననం ఘోరం యో మనోరజనీచరమ్ । వివేకశరజాలేన శమన్నయతి యోగినామ్॥ [385] పౌరాన్ స్వజనవన్నిత్యం కుశలం పరిపృచ్ఛతి । పుత్రేష్వగ్నిషు దారేషు ప్రేష్యశిష్యగణేషు చ ॥ రిపూణామపి వత్సలః ॥

[వాయురధోక్షజః ॥ ఋతుస్సుదర్శనః కాలః]
[పరమేష్ఠీ పరిగ్రహః ॥ ఉగ్ర]

వాయుః - செல்பவன், అధోక్షజః - குறைவுபடாதவன், ఋతుః - நலம்பொருந்தியவன், సుదర్శనః - நன்குகாணக்கூடியவன், కాలః - கலந்துக்கொள்ளுமவன், పరమేష్ఠీ - பரமபதத்திலிருப்பவன், పరిగ్రహః - எங்கும்கிரஹிப்பவன், ఉగ్రః - உக்கிரமானவன்,

(வி.) வாயுः—தானே ஆங்காங்கு அவர்களிருப்பிடம் தேடிப்போமவன். 386

அதொக்ஷஜः—இப்படிதான் அமுதக்கடல்போல் யாவராலும் எப்போதும் அநுபவிக்கப் படாநின்றாலும் குறைவுபடாதவன். ருதுः—எப்போதும் நூதனமாய் ஸகலருக்கும் உல்லாஸத்தைத் தரும்படியான குணங்களோடுகூடியவன்[387]. ஸுதர்சநः குணப்ரபாவ மறியாதவர்களுக்குக்கூட தனது தர்சநமே சுபமாயிருக்கும்படி விளங்குமவன். காலः—இப்படிப்பட்ட தனது ஆத்மகுணங்களைக்கொண்டு சராசரங்களையுந் தன்னுள் சேர்த்துக் கொள்ளுமவன்.

பரமேஷ்டீ—இப்படி ராவணவேட்டையாடியும் லோகத்தை ரக்ஷித்தும் விஹரித்து, மறுபடியும் பரமபதத்தில்தானே விளங்குமவன்[388].

பரிக்ரஹः—எங்குள்ளவைகளையும் கிரஹித்துக் கொள்பவன்.

[என்றால்-தனது ஸம்பந்தம்பெற்ற பட்டணவாஸிகளும் கிராமவாஸிகளுமான பிராணிகளென்ன, இன்னும் தத்ஸம்பந்திகளான செடிகொடி முதலியவைகளென்ன இவையெல்லாவற்றையும் பரமபதத்தேறக்கொண்டுசென்றவன்.]

(அவதாரிகை.) அநந்தரம் அஸாதுக்களை சிக்ஷிக்கின்ற பாதாளவாஸியான கல்கிவிருத்தாந்தம் சொல்லப்படும்.

உக்ரः—யுகத்தின் முடிவில் பாபம் அதிசயித்து வர்ணாசிரம வியவஸ்தைகளெல்லாங் கொலையும்பொழுது உக்கிரமாய் விளங்குமவன். 389

(அ.) ருது:—ருதுவென்கிற காலத்தால் காணப்படுமவன். பரிக்ரஹः—பக்தர்கள் அளித்த அற்பபதார்த்தங்களையும் பரிக்கிரஹிப்பவன்.

386 సోఽభ్యగచ్ఛన్మహాతేజాః శబరీం శత్రుసూదనః ॥
387 ఋత్వాభితప్తాః పర్జన్యం హ్లాదయన్తమివ ప్రజాః ॥
388 వివేశ వైష్ణవం తేజః సశరీరస్సహానుగః ॥
389 సంహారమూర్తయే కాలవైశ్వానరార్చిషే ॥

[స్సంవత్సరోదక్షో విశ్రామో విశ్వదక్షిణః ॥ విస్తారస్స్థావరస్స్థాణుః]
[ప్రమాణం బీజమవ్యయం । ]

సంవత్సరః - வஸிப்பவன், దక్షః-ஸமர்த்தன், విశ్రామః-இளைப்பாரு மிடமானவன், విశ్వదక్షిణః - எதிலும் ஸமர்த்தன், విస్తారః - விஸ்தரிக்கச்செய்பவன், స్థావర-స్థాణుః - நிலைநிறுத்தியடங்குமவன், ప్రమాణమ్ - பிரமாணமானவன், బీజమవ్యయమ్ - அழியாத விரைமுதல்,

---

(வி.) ஸம்வத்ஸரः=பாதாளத்தில் ஸம்ஹாரத்துக்கேற்ற பரிகரங்களோடு ஸமயத்தை யெதிர்பார்த்துக்கொண்டு திருவநந்தாழ்வான் மீதெழுந்தருளி யிருப்பவன். [390]

தக்ஷः=திருடரையழிப்பதில் சீக்கிரமாயிருப்பவன்[391]. விச்ராமः= பாவத்தையும் அதன்பயனையும் அநுபவித்து அதனால்களைத்தப் பிராணிகளுக்கு இளைப்பாரு மிடமானவன்.

(அவதாரிகை.) அபசாரப்பட்டவர்கள் விஷயத்தில் எப்படி ஹிதஞ் செய்யுமென்னில் சொல்லுகிறது:—

விச்வதக்ஷிணः=இஷ்டத்தைச் செய்தாலும் அநிஷ்டத்தைச்செய்தாலும் எல்லாரிடத்திலும் தாக்ஷிண்யமா யிருப்பவன்[392]. அபகாரிகளைக்கூட பொறுப்பதன்றோ தாக்ஷிண்யமாவது?

அதவா—அசுவமேதத்தில் விசுவம்பரையென்னுந் தக்ஷிணையுடையவனென்றுமாம். விஸ்தாரः=கலியின் பெலனையழித்து கிருதயுகத்தை ப்ரவர்த்திப்பிக்கவேண்டி வேதமரியாதையை [393]விஸ்தரிப்பிப்பவன்.

ஸ்தாவரஸ்தாணுः=இப்படி தருமத்தை நிலைக்கச்செய்து பிறகு ஆறியிருப்பவன். ப்ரமாணம்—அநந்தரம் கிருதயுகப் பிராணிகளுக்கு இது ஹிதமென்றும் இது அஹிதமென்றும் வியவஸ்தைபண்ணித் தருமவன். இவனதுசக்திலேசத்தைக்கொண்டுதான் பிரத்தியக்ஷாதிகளும் பிரமாணமாகின்றன. இதற்கு [394]வசநம்.

பீஜம் அவ்யயம்=(இப்படி கலிமுதலிய துஷ்காலங்களாலே தருமமார்க்கன் தலையழிந்தபோது அதை மறுபடியும் முளைக்கச் செய்கையாலே) அழியாத முதலானவன்.

---

[390] అనన్తశయనారూఢం చక్రాద్యాయుధబృన్దేన మూర్తేన పరివారితం ॥

[391] క్షిప్రకారీ జనార్దనః ॥

[392] స ఇమం సకలం లోకం ప్రసాదముపనేష్యతి ॥

[393] తతో ధర్మవినాశో వైధర్మవృద్ధిశ్చ భారత ॥ భవిష్యతి కృతే ప్రాప్తే క్రియావాంశ్చ జనస్తథా ॥

[394] తచ్ఛీలమనువర్తన్తే మనుష్యా లోకవాసినః ॥

[అర్థో౽నర్థో౽మహాకోశో మహాభోగో మహాధనః ॥ అనిర్విణ్ణః]

అర్థః - புருஷார்த்த மானவன், అనర్థః - யாசிக்கப்படாதவன, మహాకోశః - பெரிய பணச்சாலை யுடையவன், మహాభోగః - மஹத்தான போகன், మహాధనః - அதிகதந முடையவன், అనిర్విణ్ణః - ஆலஸ்யமுறாதவன்,

(வி.) அர்த்தஃ=(அநந்யப் பிரயோஜநனாய் பக்தியொன்றையே பற்றிய வதிகாரிக்குத்தானே) புருஷார்த்தமாய் நின்றவன். 395

அநர்த்தஃ=அல்பஸுகிருதம் செய்த அர்த்தகாமன் அர்த்தத்தைஅபேக்ஷிக்கையால் அவனால் ஸ்வயம் புருஷார்த்தமாய் அர்த்திக்கப்படாதவன்.

மஹாகோசஃ=எப்போதும் எல்லாருக்கும் எல்லாவிதத்தாலும் வழங்கினாலும் குறையாமல், பெரிதாயிருக்கின்ற சங்கம் பதுமம முதலிய நிதிகளையும் மேருமுதலிய பருவதங்களையும் தநசாலையாகவுடையவன்.

மஹாபோகஃ=அர்த்தத்தால் ஸாதிக்கவேண்டிய போகமும் தன்னால் விசேஷமாய்க் கிடைக்கும்படி விளங்குமவன். 396

மஹாதநஃ=அளவிடப்போகாமல் மஹத்தான தனமுடையவன். இவ்வர்த்தங்களை யெல்லாம் 397 ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் அருளிச்செய்தார்.

அநிர்விண்ணஃ=இப்படி ஸ்ருஷ்டி முதலியவைகளையும், அவரவர்க்கு இஷ்டதானங்களையும் அடிக்கடி செய்துவரச் செய்தேயும், ஸம்ஸாரிகள் சப்தாதிவிஷயத்திலுண்டான பிரீதியால் தன்னைக்கணிசியாதபோது தான் பண்ணின கிருஷிநிஷ்பலமானாலும், மீண்டும் அவர்களை ஸ்வாதீநம் செய்யலாமோவென்கிற ஆசையால் சற்றும் ஓய்வின்றி மறுபடி முயற்சிசெய்பவன். இத்தைப்

(அ) அநர்த்த:—தான் ஆசைப்படும்படி யாதொன்று மில்லாதவன்,
மஹாகோசஃ—அந்நமயாதிகளான மஹாகோசங்களுள்ளவன்.
அநிர்விண்ணஃ—வெறுப்பில்லாதவன்.

395 జ్ఞానవాన్మాం ప్రపద్యతే । వాసుదేవస్సర్వమ్ ॥

396 లభతే చ తతః కామాన్ మయైవ విహితాన్ హి తాన్ ॥

397 మరీచిమిశ్రైర్దక్షేణ తథైవాన్యైరనన్తతః । ధర్మః ప్రాప్తస్తథా చాన్యైరర్థః కామస్తథాపరైః ॥

[స్థవిష్ఠో భూర్ధర్మయూపో మహామఖః నక్షత్రనేమిర్నక్షత్రీ క్షమః]

స్థవిష్ఠః - பருத்தவன், భూః - ஸர்வாதாரன், ధర్మయూపః - தருமத்தைக்கலப்பவன், మహామఖః - பெரியயக்ஞத்தை அவயவமாயுடையவன், నక్షత్రనేమిః - நக்ஷத்திரங்களை நடத்துமவன், నక్షత్రీ - நக்ஷத்திரவடிவமெடுத்தவன், క్షమః - வஹிப்பவன், క్షామః - குறை

---

(வி.) பற்றியன்றோ இவனுக்கு ஜகத்வியாபாரம ஓய்வுறுமலிருக்கிறது? [398] ஸ்தவிஷ்டஃ=சிம்சுமாரமென்கிற முதலைவடிவமாய் [399] பருத்திருப்பவன்.

பூஃ=துருவனைத்தாங்குகையாலே ஸர்வாதாரமானவன். [400]

தர்மயூபஃ=தருமமென்கிற தத்வத்தைத் தலையாகச்சமைத்துக்கொண்டவன்[401]. மஹாமகஃ=தர்ம சரீரனாகையாலே பூஜ்யமான யக்ஞத்தை அவயவமாகக் கொண்டவன்.

நக்ஷத்ரநேமிஃ=ஜ்யோதிச்சக்கிரத்தை நடத்துமவன். [402]

நக்ஷத்ரீ-சிம்சுமாராகாரமான நக்ஷத்திர ரூபந்தரித்தவன். [403]

க்ஷமஃ=இப்படி ஸகலபுவந பாரத்தையும் லக்ஷியமின்றி வஹிப்பவன்.

க்ஷாமஃ=அவாந்தரத்திலுண்டான க்ஷயத்தாலே சில நக்ஷத்திரங்களால் குறைவுபட்டிருப்பவன். [404]

---

(அ) ஸ்தவிஷ்டஃ—விராட்ரூபமா யிருப்பவன். அபூஃ—பிறப்பிலி.

மஹாமகஃ=தனக்கென்று ஸமர்ப்பித்த யாகங்களெல்லாம் மஹாபலங்களைத் தருகையாலே மஹத்தாகும்படி விளங்குமவன்.

க்ஷாமஃ—ஸர்வவிகாரங்களுமற்று. ஸ்வஸ்வரூபமாயிருப்பவன்.

---

398 అవ్యుచ్ఛిన్నాస్తతస్త్వేతే సర్గస్థిత్యన్తసంయమాః ॥

399 తారామయం భగవతః శింశుమారాకృతి ప్రభోః ॥

400 తస్య పుచ్ఛే ధ్రువః స్థితః ॥

401 ధర్మో మూర్ధానమాశ్రితః ॥

402 ఏష భ్రమన్ భ్రామయతి చన్ద్రాదిత్యాదికాన్ గ్రహాన్ । భ్రమన్తమనుతం యాన్తి నక్షత్రాణి చ చక్రవత్ ॥

403 శింశుమారాకృతి ప్రోక్తం యద్రూపం జ్యోతిషాం దివి । నారాయణోऽయనం ధామ్నాం తస్యాధారః స్వయం హృది ॥

404 యావన్త్యత్ర ప్రదేశే తు మైత్రేయావస్థితో ధ్రువః । క్షయమాయాన్తి తావత్తు భూమేరాభూతసంప్లవే ॥

[క్షామస్సమీహనః ॥ యజ్ఞ ఇజ్యో మహేజ్యశ్చ క్రతుస్సత్రం సతాంగతిః]

సమీహనః - நியமிப்பவன், యజ్ఞః - யக்ஞஸ்வரூபன், ఇజ్యః - யஜிக்கப்படுமவன், మహేజ్యః - பெரியயக்ஞரூபன், క్రతుః - ஆராதிக்கப்படுமவன, సత్రమ్ - இருப்பவன், సతాంగతిః - ஸத்துக்களுக்குக்

---

(வி.) ஸமீஹந:—அநந்தரம் ஸ்ருஷ்டியில் ஸகலரையும் எப்போதும் தீந்தம் அதிகாரங்களில் [405]நியமிப்பவன்.

யக்ஞ:—யக்ஞமாயும் அதன் ஸாதநமாயும் அதன்பலனாயும் சொல்லப்படுகையாலே [406]யக்ஞஸ்வரூபன்.

இஜ்ய:—காமாதிகாரிகளால் இந்திரன் முதலிய தேவதா முகமாய் ஆராதிக்கப்படுமவன்[407]. மஹேஜ்ய:—(காமத்தில் விச்சையற்ற விலக்ஷணாதிகாரிகளாலே நேரே தன்னை உத்தேசித்துப் பண்ணப்படும்) மஹாயக்ஞரூபமானவன்.[408]

க்ரது:-(பஞ்சமஹா யக்ஞங்கள்; ஔபாஸநாதிகள், ஏழுபாக யக்ஞங்கள், சுருதியிற்சொன்ன அக்கினிஹோத்திரம் முதலியவைகள், ஏழுஹவிர்யக்ஞங்கள், யக்ஞசப்தத்தாலே சொல்லப்படும அக்னிஷ்டோமாதிகள், ஏழுஸோம ஸவநங்கள், இவைகளால் ஆராதிக்கப்படுகையாலே) க்ரதுஸ்வரூபன்.

ஸத்ரம்—நெடுநாள் அநேகம் யஜமாநர்கள் கூடி மாஸோபவாஸாதிகளிருந்து செய்யவேண்டும ஸத்திரயாகத்தால் எப்போதும் ஆராதிக்குமபடியானவன்.

(அவதாரிகை) இப்படி இதுவரையில் ப்ரவ்ருத்திதர்மநிஷ்டருக்குக் கதியென்றதாயிற்று. மேல் நிவ்ருத்தி தர்மநிஷ்டருக்குக கதியெனகிறது.

ஸதாம்கதி:—ஸத்துக்களுக்குக் கதியானவன்.[409] ஸாவதர்சீ—இவ்விருவகைத் தருமத்தையும அத்தியக்ஷமாய்க்கொண்டு காணுமவன்.

---

(அ) மஹேஜ்ய:—யாகம்செய்யவேண்டிய தேவர்களில் இவன் மோக்ஷதாதாவாயிருக்கையாலே மஹத்தானவன். ஸத்ரம்—ஸத்துக்களைக்காப்பவன்

---

405 తాంభూతాన్యుపపర్యావర్తన్తే ॥

406 ఇజ్యాఫలస్యభూరేషా ఇజ్యాచాత్ర ప్రతిష్ఠితా ॥

407 యేయజన్తిపితౄన్దేవాన్ బ్రాహ్మణాన్సహుతాశనాన్ । సర్వభూతాన్తరాత్మానంవిష్ణుమేవయజన్తితే ॥

403 యేతుసర్వాణికర్మాణి ॥

409 నిర్ధూతదోషపఙ్కానాంయతీనాంసంయతాత్మనామ్ । స్థానస్త్వంపరమంవి ప్రపుణ్యాపాపపరిక్షయే ॥

[సర్వదర్శీ నివృత్తాత్మా సర్వజ్ఞో జ్ఞానముత్తమం ॥]
[సువ్రతస్సుముఖస్సూక్ష్మస్సుఘోషస్సుఖదస్సుహృత్ ।]

கதியானவன், సర్వదర్శీ - ஸகலத்தையுங்காண்பவன், నివృత్తాత్మా - நிவர்த்தித்தமன முடையவன், సర్వజ్ఞః - ஸகலமுமறிபவன், జ్ఞానముత్తమమ్ - உத்தமஞானஸ்வரூபன், సువ్రతః - நல்லவிரதம் பூண்டவன், సుముఖః - ஸுமுகமானவன், సూక్ష్మః - ஸூக்ஷ்ம ஸ்வரூபன், సుఘోషః - நல்லகோஷமுற்றவன், సుఖదః - சுகத்தைத்தருமவன், సుహృత్ - நல்லஹிருதயமுற்றவன்,

(வி.) (அவதாரிகை.) அதில் நிவ்ருத்தி தர்மாசாரியனான நரநாராயணுவதாரஞ் சொல்லுகிறது:—

நிவருத்தாத்மா=பரமவைராக்யத்தைப் பிரகாசிப்பிப்பதற்காக விஷயங்களினின்றும் மனதைத் திருப்பியவன். 410

ஸர்வஜ்ஞ:=அப்படியே ஸர்வப்பிரகாரத்தாலும் தன்னை யறிபவன்.

ஜ்ஞாநம் உத்தமம்=உத்தமமான வைஷ்ணவ தர்மங்களனைத்து மறிந்த ஞாநஸ்வரூபன். 411

ஸுவ்ரத:="நமேபார்த்தாஸ்தி கர்தவ்யம்" என்று தான் தனக்கென்று சிறிதும் செய்யவேண்டாம லிருக்கச்செய்தே பிறருக்காகச் செய்கையாலே சோபநமான விரதத்தை யநுட்டிப்பவன். 412.

ஸுமுக:=ஜபம்முதலியவைகள் அநுட்டிக்கும் பொழுதும் விகாரமடையாமையாலே தெளிந்த முகத்தையுடையவன் 413.

ஸூக்ஷ்ம:=தனக்குத்தானே ஸமாதிக ரஹிதமான ஸூக்ஷ்மதத்வத்தை ஸாக்ஷாத்கரித்தவன்.

ஸுகோஷ:=உபநிஷத் ஸம்பந்தமான நல்லகோஷத்தை யுடையவன்.

ஸுகத:=இப்படி ஸதாசாரமான ஸமாதியைக் கறபிக்கையாலே அந்த நிஷ்டையுடையவருக்குப் பயனான பரமஸுகத்தைத் தருமவன்.

இப்படி யிவன் பரோபகார சீலனாயிருக்கைக் கடியென்னென்னில்:—

ஸுஹ்ருத்=நல்ல ஹ்ருதயமுடையவன்.

[என்றால்-உபகாரம் பண்ணாதவன்விஷயத்தில்கூட இவனுக்கென்ன

(அ) ஸர்வஜ்ஞ:—ஸர்வஸ்வரூபனா யிருக்கச்செய்தே ஞாநாகாரமானவன்,

410 ఆత్మధ్యానపరాయణాయ ॥

411 పఠన్తమనిశం శాస్త్రం పఞ్చరాత్రపురస్సరమ్ ॥

412 ఏకపాదే స్థితిష్ఠన్తమాహారన్తం చ మారుతమ్ । పక్షమాసోపవాసాంశ్చ దిశన్తమనుచిన్తయేత్ ॥

413 ఓంకారలక్షణం మన్త్రం జపన్తాన్తరలక్షితం ॥ కృష్ణాయ కమలదళామలనేత్రాయ ॥

[మనోహరోజితక్రోధో వీరబాహుర్విదారణః ॥]

[స్వాపనస్స్వవశో వ్యాపీ]

మనోహరః - மனதைஹரிப்பவன், జితక్రోధః - கோவத்தைஜயித்தவன், వీరబాహుః-வீரமானதோள்களுடையவன், విదారణః-பிளந்தவன், స్వాపనః - தூங்கச்செய்பவன், స్వవశః - ஸ்வதந்திரன், వ్యాపీ-வியாபிக்குமவன்,

---

(வி.) வேண்டுவது! நாமென்செய்யலாம்! என்று நன்மையைததேடுமபடியான ஹிருதயமுடையவனென்றபடி.]

மநோஹரः—இப்படி ஸ்வபாவமாகவே ஸுஹ்ருத்தாயிருக்கையாலே அவர்களுடைய மனதைக் கொள்ளைகொள்ளுமவன்.

ஜிதக்ரோதः—அவர்களுடைய கோபம்முதலியவைகளை ஜெயித்தவன்.

[அதவா-மற்றொருயோஜனை:—

ஸுமுகः—அமுதங் கொண்டபோதிருந்த இருப்பைச் சொல்லுகிறதாய், அழகிய திருமுக மண்டலத்தையுடையவன். 414

ஸூக்ஷ்ம:-அசுரர்விஷயத்தில் மறைந்த அபிப்பிராயங் கொள்கையாலே ஸூக்ஷ்மன்.

ஸுகோஷः—தேவாசுரர்களிடும்கோஷத்தோடுகடைகிறகோஷமும்கூடியிருக்கையாலே அத்புதமான கோஷமுடையவன்.

ஸுகத:—அமுதநருவது முதலான சுகத்தைத்தந்தவன்.

ஸுஹ்ருத்—அதற்குக்காரணமான நல்ல ஹிருதயமுடையவன். அசுரரைமயக்குந் தன்மையவுடைகையாலே மநோஹர:-மனதைத்திருடுமவன்415. ஜிதக்ரோதः—தன்னிடத்தில் ஆச்சரியத்தைக்காட்டி அதனால் தேவர்களிடத்தில் அசுரர்க்குண்டான கோபத்தை ஜயித்தவன்.]

வீரபாஹுः—(மணிமயமான கஙகணமும் தோள்வளையும் மூதனுவடங்களும் திருமாலையும் அலையும்படி, க்ஷீரஸாகர மதநத்தில் நான்முன்னே நான்முன்னேயென்று பரபரக்கின்ற) அதிபராக்கிரமமுள்ள திண்டோள்களுடையவன். விதாரண:—(திவ்வியாஸ்திரங்களாலே ராஹு முதலானோரைப்) பிளந்தவன்.

ஸ்வாபந:—(அப்படி யொழிந்தவர்போக மற்றும் மிகுந்தோரையும் அதிஸுந்தரமான தனது புன்சிரிப்பாலும் இனியதான கடாக்ஷத்தாலும் புருவங்களின் விலாஸத்தாலும் மயக்கிப் பரவசமாய்) உறங்கச்செய்பவன்.

ஸ்வவச:—அவர்களிங்ஙனே முறங்கவே தமக் கன்பரான தேவாகளோடு யதேஷ்டமாய் விஹரித்தவன். வ்யாபீ—தேவர்கள், மந்தரபர்வதம்,

---

(அ) வ்யாபீ— ஆகாசமபோல் எங்கும் பரந்தவன்.

---

414 ఆనన్దామృతసంపూర్ణవదనేనేన్దుకాన్తినా । కలశాకృతిరూపేణకరస్థేనవిరాజితమ్ ॥

415 త్రైలోక్యవిస్మయకరం కాన్తకృతినరంస్మరేత్ ॥

[నైకాత్మా నైకకర్మకృత్ । వత్సరో వత్సలో వత్సీ రత్నగర్భో]
[ధనేశ్వరః ॥ ధర్మగుప్]

నైకాత్మా - அனேகஸ்வரூபன், నైకకర్మకృత్ - அனேகவியாபாரங்களைச்செய்யுமவன், వత్సరః-வஸிப்பவன், వత్సలః-பிரீதியுற்றவன், వత్సీ-கன்றுகளையுடையவன், రత్నగర్భః- இரத்தினத்தையுட்கொண்டவன், ధనేశ్వరః - தனத்துக்கீசுவரன், ధర్మగుప్ - த்ர்மத்தைரக்ஷிப்பவன்,

---

(வி.)வாசுகிமுதலானேருக்கு சசக்திகுறைவுபட்டபொழுது அவர்கள்தனது சக்தியைக்கொண்டு இளைப்பாறும்படி அவர்களிடத்தில் வியாபித்தவன்.

நைகாத்மா—(அவ்வேளையில் பிரம்மரூபமாயும், கூர்மரூபமாயும் மோஹினிரூபமாயும் மற்றும்) அனேகரூபமாய் விளங்கினவன்.

நைககர்மக்ருத—(மத்தான மந்தராசலத்தைத் தாங்கியும், அசுரரைப் புடைத்தும், அமுதத்தைதிரட்டியும் மற்றும்) அனேகம் காரியங்களைச் செய்தவன்.

(அவதாரிகை) இனிதர்ம ஸ்வரூபியைச் சொல்லுகிறது.

வத்ஸர:—(புருஷார்த்தஙகளை வியவஸ்த்தை பண்ணுவதற்காக யாவருள்ளத்திலும்) வஸிப்பவன். [416]

அதற்குக் காரணம் "வத்ஸல:" வத்ஸர்களான (அதாவது தன்னிடத்தில் விருப்பங்கொண்ட) சேதநர்களை விரும்புமவன்.

[இவன் தான்-சேதநகோடிகளிடத்தில நெடுங்காலமான பரிசயமிருக்கச்செய்தேயும், அவர்கள் சரணமென்றுமாத்திரம் அடைந்தாராகில் இன்னகாரணததிற்காக இப்படியாகிறுனென்றறியப்போகாமல்,அப்பொழுதுதானீன்ற கன்றினிடத்தில் பசுவானது ஹூங்காரத்தோடு கூடினதாய் மடியிற் சுரந்தபாலை அது ஊட்டுகிறதற்குள் இன்னது செய்யவேணுமென்பது தெரியாமல் தடுமாறுவதுபோல் அலைந்துபோகிறுனென்கிற விஷயம் [417]ராவணாதிகளிடத்திலுங் காணலாம். இப்படிப்பட்ட உதாரசீலனுன பகவானுக்கு உபகரணமாயிருப்பதுபற்றி யன்றே ஸாதாரணமான தர்மத்துக்கும அததன்மை யுண்டாயிருக்கிறது?]

வத்ஸீ—(இப்படி நித்தியமாய் தன்னுல் போஷிக்கப்படுகின்ற ஆத்மவர்க்கங்களாகிற) கன்றுகளை அதிகமாயுடையவன்.

ரத்நகர்ப்ப:—அவர்களில் தனத்தைக்கோரியவர்களுக் கொடுக்கவேண்டும்படியான விசேஷதநமுடையவன்.

தநேசுவர:—(அவரவரிஷ்டப்படுகின்ற தனத்தை) விரைவில் அளிப்பவன். தர்மகுப்—(இப்படிதான் தந்த அர்த்தகாமங்கள் துர்விஷயத்திற்செலலவொட்டாமற் றடுத்து அவைகளைக்கொண்டு) தர்மத்தைக் காப்

---

[416] సర్వాన్ వస్త్వాచ్ఛాదీర్ధరాత్మనే ॥

[417] విదితస్సహి ధర్మజ్ఞః శరణాగతవత్సలః ॥

[ధర్మకృద్ధర్మీసదసత్ క్షరమక్షరం ॥]

ధర్మకృత్ - தர்மத்தைச்செய்தவன், ధర్మీ - தர்மமுடையவன், సత్ అక్షరమ్ - ஸத்தாய்அழியாபவிருப்பவன். అసత్ క్షరం - அஸத்தாய் விகரிப்பவன்,

(வி) பாறறுமவன்[418]. தர்மக்ருத்—இப்படி ஸகலரையும் தார்மிகர்களாகச் செய்யவேணடி, தனது அநுக்கிரஹத்துக்குக் காரணமான தர்மத்தையா தொருகாரணமுமின்றி யுண்டுபண்ணுகையாலே தர்மஞ்செய்பவன[419].

தர்மீ—(பிரஸித்தமாய் லோகத்தில் வழங்குற் சருமமும மவனுக்கு ஸர்வஸாதாரணமான உபகரணமாகைகையால்) தர்மத்தை யுடையவன்.

ஸத்—இத்தருமங்களிற் சிறந்தவன்.

[இத்தருமத்தை ஸத்தென்று கொண்டாடுவதுதான் இதனால் ஸாதிக்கப்படும் பகவான் ஸத்தாயிருப்பதுபற்றி அவன் ஸததாயிருப்பதுதான் அவனெப்போதும் ஸத்தாயிருப்பதுபற்றி யென்றுணர்க.]

அக்ஷரம்—இப்படி நித்தியனாய் நிருபாதிகமான ஸத்பாவத்தோடுகூடி ஸாதுவாய் விளங்குகையாலே, குறைவுஅழிவுமுதலிய விகாரங்களொன்றுமின்றிக்கே விளங்குமவன்.[420]

[க்ஷரமாகில் சிலவிடத்தில சிலகாலத்தில் நாசமுறும். இவனுக்கு அதில்லாமையாலே அக்ஷரனென்றறிக. இதைத்தானே "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத" என்று சுருதியிற் சொல்லுகிறது.]

அஸத்க்ஷரம்—ஹேயமான பாவத்தில் பற்றினவர்கள்விஷயத்தில் அஸத்தாயும் க்ஷரமாயு மிருப்பவன்.

[அஸத்துக்களுக்கு நித்தியமாய் நிரவதிகமான ஸம்ஸாரபயத்தைத் தருகையா லிங்ஙனஞ் சொல்லுகிறது. இவ்விரண்டு விஷயமும் சுருதியில்[421] ஓதப்பட்டது.]

(அவதாரிகை.) அதில் ஸாதுக்களிடத்தில் அபராதங்கள் மிக்கிருக்கக் கண்டாலுமில் தண்டிக்காமல் அவைகளைப் பொறுத்துக்கொள்ளுகிறானென்பது மாத்திரமன்று மற்றப்படி:—

[418] సాధుమార్గస్థితానాంచ సంయచ్ఛన్ధియాచతే ॥

[419] ధర్మసామాన్యమమలమనాదినిధనంవిభుమ్ । దుర్లభంయత్ప్రబుద్ధానాంతత్ప్రసాదధియావినా ॥

[420] అపక్షయవినాశాభ్యాంపరిణామర్ధిజన్మభిః। వర్జితశ్శక్యతేవక్తుంయస్సదాఽస్తీతికేవలమ్ ॥

[421] ఏషఏవసాధుకర్మకారయతితంయమేభ్యోలోకేభ్యఉన్నినీషతిఏషఏవాఽసాధుకర్మకారయతితంయమధోనినీషతి ॥

[అవిజ్ఞాతా సహస్రాంశుర్విధాతా]

అవిజ్ఞాతా - அறியாதவன், సహస్రాంశుః - ஆயிரம்ஞானமுடையவன், విధాతా-விதிப்பவன்,

---

(வி.) அவிக்ஞாதா-அபராதமுண்டென்பதையறியுமவனேயல்லன்.

[“உச்யமானோபி பருஷம்நோத்தரம் ப்ரதிபத்யதே” பெருமாள் தம்மைப்பருஷமாகச் சிலவார்த்தைகள் சொல்லக் கேட்டாராகிலும், அதற்கு மறுமாற்றஞ்சொல்ல உணர்ந்திலர்போலும், என்கிறபடியே, ஆச்ரிதாளுடைய அபராதங்களைக் கணக்கிடாமையும் குணமேயாகவன்றோ ஸ்ரீவத்ஸாங்கமிச்சிரரும் அருளிச்செய்தார்?]

[சிலர் “பரமபுருஷன் ஞானமாத்திர னாகையாலே ஞாத்ருத்வமில்லாமைகொண்டு இங்கே அவிக்ஞாதாவென்கிறது” என்று ஸர்வக்ஞனை அஞ்ஞனென்பதாக இங்கே வியாக்கியானம் செய்தார்கள். அவர்கள் சுருதி, ஆசாரியஸேவை, ஔசித்யம், நியாயம் இவற்றை யறியாமையாலே அங்ஙனம் சொன்னார்களாகையால் அவர்கள் விஷயத்தில் நாம் வியஸநப்படவேண்டுமேயல்லது நிரஸிப்பதற்குத் தகுந்தவர்களல்ல ரென்றுணர்க.]

ஸஹஸ்ராம்சு:=அபரிமித ஞானங்களுடையவன்.

[நல்லது! ஆச்ரிதாளுடைய அபராதத்தை யொழிந்த மற்ற விஷயத்தில் ஸர்வக்ஞனென்பது எப்படி சேருமென்னில்—அபராதங்களை யறியாமையாவதென்? அபராதத்தைக் கவனிக்காமல உபேக்ஷிப்பது தானே? அப்படியே பகவான் உபேக்ஷிக்கிறானன்றோ?[422]]

(அவதாரிகை.) ஆச்ரிதபாபத்தை அவன்கணிசியாமற்போனாலும் பாபத்தின்பலனும், அதைவிடாமல் அனுபவிப்பிக்கும் யமன் யாதனை முதலியவைகளும் பாதிக்கமாட்டாவோவென்னில்-அவைகளும் பகவானுக்கு ஆதீனமாகையாலே பாதிக்கமாட்டாவென்கிற அபிப்பிராயத்தாலே சொல்லுகிறதுமேல்:—

விதாதா=அவைகளையும் விதிப்பவன். இப்படி [423]யமனே சொன்னானன்றோ!

[இவ்வர்த்தத்தில், பிராம்மம், வைஷ்ணவம், வாமநம், நாரஸிம்ஹம், லைங்கம், விஷ்ணுதர்மம், ஸ்ரீவிஷ்ணுதத்வம், பாகவதம் முதலானவிடங்களிலுண்டான யமகிங்கர ஸம்வாதங்களெல்லாங் கண்டுகொள்வது.]

---

(அ) அவிஜ்ஞாதா—ஆத்மாவிடத்தில் கர்த்ருத்வாதிகளெல்லாம் கல்பிதமாகையால், அந்தவாஸனையாலே ஜீவனைஜ்ஞாதாவென்கிறது; அந்த ஞாத்ருத்வமில்லாமையாலே பரமாத்மா அவிஜ்ஞாதாவாகிறான்.

---

[422] దోషో యద్యపి తస్య స్యాత్ ॥ అపి చేత్సుదురాచారో భజతే మామనన్యభాక్ ॥

[423] అహమమర వరార్చితేన ధాత్రా యమ ఇతి లోకహితాహితే నియుక్తః ॥

[కృతలక్షణః॥ గభస్తినేమిస్సత్వస్థస్సింహః]

కృతలక్షణః - லக்ஷணஞ் செய்தவன், గభస్తినేమిః - பிரகாசிக்கின்ற திருச்சக்ரந்தரித்தவன், సత్వస్థః-ஸத்துவத்திலிருப்பவன், సింహః -சிங்கம்போன்றவன்,

(வி) (அவதாரிகை.) இப்படி இவன் தோஷத்தை ஸஹிக்குமாகில், தியஜிக்கவேண்டு மவைகட்கும் கிரஹிக்கவேண்டு மவைகட்கும் வாசியென்னென்னில் சொல்லுகிறதுமேல்:—

க்ருதலக்ஷணஃ=லக்ஷணம் ஏர்ப்படுத்தினவன். ஸ்ரீராமாயணபாரதாதிகளில் கிரஹிக்கத்தக்கவைக ளிவையென்று அவனே லக்ஷணஞ் சொல்லியிருக்கிறபடியால் [424]விஷ்ணு வைப்பந்தமபெறறவன உபாதேயனென்று லக்ஷணம் ஏர்ப்பட்ட பின்பு மற்றதுதியாஜ்யமென்றாயிற்று. இனி பக்ஷபாதாதிகளான தோஷத்துக்குப் பிரஸக்தியில்லை.

(அவதாரிகை.) இந்த லக்ஷணமுள்ளவர்கள் யமனாலும் அவன் கிங்கரராலும் வருத்தப்படார்கள்; ஏனெனில் இவர்களுகிவனே ரக்ஷகனாக வன்றோ விருக்கிறானென்கிறதுமேல்:—

கபஸ்திநேமிஃ=இவரை ரக்ஷிப்பதற்காக அதிகப் பிரகாசமாய் ஆயிரம் இலைகள் பொருந்திய சக்கிரந் தரித்தவன்[425].

(அ-கை) மேலும் இவர்களை வருந்தச்செய்யுங் கர்மமுமில்லாமையாலே யமாதிகள் கிட்டவிடமில்லை; கருமமில்லாத காரணமேதென்ன:—

ஸத்வஸ்த்த:=ஸத்வத்திலிருப்பவன்.

[என்றால்-இவர்கள் ஸத்வத்தில் எம்பெருமானிருக்கையாலே கருமங்க ளிருந்தவிடந்தெரியாமலோடிப்போயின வென்றபடி. இப்படியே விஷ்ணுபுராணாதிகளில். [426]சொல்லுகிறது.]

(அவதாரிகை.) இதையறியாமல் ஒருக்கால் யமன் முதலானோர் அவர்களைக் கிட்டினார்களாகில்:—

ஸிம்ஹஃ=அப்பொழுது சிங்கம்போல் அவர்கள்மீது பாய்பவன்.

(அ.) க்ருதலக்ஷண:—ஸஜாதியாதி லக்ஷணங்களற்றவன்.

கபஸ்திநேமி:—தேஜோமண்டலங்களில் சூரியனாயிருப்பவன்.

ஸிம்ஹ:—விக்கிரமசாலியாகையாலே ஸிம்மம்போன்றவன்.

[424]మిత్రభావేన సంప్రాప్తమ్॥ న త్యజేయం కథంచన ...... యావదాగమనమ్మమ॥

[425]వసతిమనసియస్యసోఽవ్యయాత్మా పురుషవరస్యనతస్యదృష్టిపాతే। తవగతిరథవామమాస్తిచక్రప్రతిహతవీర్యబలస్యసోఽన్యలోక్యః॥

[426]స్ఫటికమణిశిలాఽమలః క్వవిష్ణుః మనసిన్నృణాంక్వచమత్సరాదిదోషః॥

[భూతమహేశ్వరః । ఆదిదేవో మహాదేవో ]
[దేవేశో దేవభృద్గురుః ఉత్తరో ]

భూతమహేశ్వరః - பூதங்களுக்கு ஈசரானவருக்கெல்லாம் ஈசுவரனானவன், ఆదిదేవః - முதலில் விளையாடுமவன், మహాదేవః - பெரிய விளையாட்டுக்காரன், దేవేశః - தேவர்க்கீசன், దేవభృత్ - தேவர்களைப் பரிப்பவன், గురుః - குருவானவன், ఉత్తరః - தாண்டுவிப்பவன்,

(வி.) [இவ்வர்த்தம் லிங்கபுராணத்தில் மார்க்கண்டேயர்சொன்ன வசநத்திலும் 427அங்குதானே கௌசிகோபாக்கியான வசநங்களிலுங்காண்க.]

(அவதாரிகை) கீழ்ச்சொன்ன விஷயங்களில் அவன் ஸமர்த்தனாகைக்குக் காரணமென்னென்னில்:—

பூதமஹேச்வர:=பூதங்களுக்கு ஈசுவரர்களான பிரம்மருத்திராதிகளுக்கெல்லாம் நியாமகனாய் அவர்களுக்குங் காரணமாய், அவர்களை யடக்கியாளுந் திறமையுற்றப் பிரபாவந்தங்கியவன். ஆதிதேவ:=யாவர்க்கும் ஆதியாய் விளங்குமவன்.

மஹாதேவ:=அந்தப் பிரம்மாதிகளை யெல்லாம் பந்துகள் போல் வைத்துக்கொண்டு விளையாடுமவன்.

தேவேச:=அவர்களுக்கெல்லாம் நாதன்.

தேவப்ருத்—அவர்களைத் தக்கபடி விநியோகங் கொள்ளத் தகுந்தவன். குரு:=வேதங்களைக் கொண்டு அவரவர் அதிகார பின்னமென்று அவர்களுக்கு உபதேசிக்கையாலே குருவானவன். 428இந்த குருத்வந்தான் ஹயக்கிரீவோபாக்கியாநப் பிரஸித்தம்.

உத்தர:=(இத்தேவர்களுக்கு அசுரர்களால் நேரிடும் ஆபத்தினின்றும் இவர்களைத் தப்புவிப்பவன்[429].)

(அ.) மஹாதேவ:—ஸகலபாவங்களுமற்று மஹத்தான யோகைசுவரியத்திலிருக்கையாலே மஹாதேவன்.

தேவப்ருத்குரு:-ஸகலவித்தைகளையும் பரிப்பவன்.

427 తాను దేవపరం దృష్ట్వా వైష్ణవం దగ్ధకిల్బిషమ్ । దేవావిభీతాస్సంయాన్తి ప్రణిపత్య యథాగతమ్ । దృష్ట్వాయమోపి విధం కిం వైష్ణవం దగ్ధకిల్బిషమ్ ॥ ఉత్థాయ ప్రాఞ్జలిర్భూత్వా నానామరవినన్దనః ॥

428 యో వై వేదాంశ్చ ప్రహిణోతి తస్మై ॥

429 ఏవం స్తుతస్స భగవాన్ పురుషస్సర్వతోముఖః । జహౌ నిద్రామథ తదా వేదకార్యార్థముత్థితః ॥

[గోపతిర్గోప్తా జ్ఞానగమ్యః పురాతనః । శరీరభూతభృద్భోక్తా కపీంద్రో]

గోపతిః - வாக்குகளுக்குப்பதியானவன், గోప్తా - பரிபாலிப்பவன், జ్ఞానగమ్యః - ஞானத்தால்அடையக்கூடியவன், పురాతనః - தொன்றுதொட்டுள்ளவன், శరీరభూతభృత్ - சரீரமானவைகளைத்தரிப்பவன், భోక్తా - புசிப்பவன், కపీంద్రః - வானரர்கோமான்,

(வி.) கோபதி:=(சங்கல் என்றும் பாஷையென்றும் வழங்கப்படும்) சொற்களுக்கெல்லாம பதியானவன்.

கோப்தா- இப்படி ஸகலவித்தைகளையும் ரக்ஷிக்கையாலே) ரக்ஷகன். ஜ்ஞாநகம்ய:=பரவித்தையா லறியப்படும் ஸமாதியால் அடையக்கூடியவன்.

புராதந=இப்படி வித்தையைப் பிரவர்த்திப்பிப்பது இப்பொழுது மாத்திரமன்று; மற்றப்படி கல்பந்தோறுமாகையால் புராதநன்-அதாவது அநாதியாய் பிரவர்த்திப்பிக்கிறனென்றபடி.

பஞ்சமசதகம—ஸம்பூர்ணம.

ஸ்ரீ:

# ஷஷ்டசதகம்.

சரீர பூத ப்ருத்=தனக்குச் சரீரமான தத்வங்களையெல்லாம் பரிப்பவன்[430]. போக்தா=ஹவ்யகவ்யங்களைப் புசிப்பவன்.

கபீந்த்ர:=வானரர் கோமான்.

[என்றால் - இப்படி தனக்குத்தகாத மனுஷ்யாவதாரத்தைச் செய்தருளி அதில் வேதோக்த கர்மங்களைப் பிரவர்த்திப்பித்தவனாய், தன்னைப்போலவே (வாநரரூபமான) மாறுவேஷந்தரித்த தேவர்களுக்கெல்லாம் இந்திரனாய் விளங்கினவன் 431.]

(அ.) ஜ்ஞாநகம்ய:-கர்மத்தாலாவது, கர்மஞ்ஞாநங்களாலாவது அடையக்கூடியவனல்லன்; மற்றப்படி ஞாநமாத்திரத்தாலே அடையக்கூடியவன்.

கபீந்த்ரः=வராஹமூர்த்தியாய் விளங்கியவன். வாநரர்களுக்கெல்லாம் இந்திரனாய் விளங்கின ஸ்ரீராகவனென்றுமாம்.

430 తస్య మూర్ధా సమభవత్ ద్యౌస్సనక్షత్రదేవతా ।

431 సర్వలోకేశ్వర స్సాక్షాత్ లోకానాం హితకామ్యయా ॥ సర్వైః పరివృతో దేవైర్వానరత్వముపాగతైః ॥

[భూరిదక్షిణః॥సోమపోఽమృతపస్సోమః పురుజిత్పుర]

భూరిదక్షిణః - அதிகதக்ஷிணை யளிப்பவன், సోమపః - ஸோமலதையைப்பிழிந்தவன், అమృతపః-அமிருதபானம்பண்ணினவன், సోమః - சந்திரன்போன்றவன், పురుజిత్ - பலரை ஜயித்தவன், పురుసత్తమః - ப[illegible]ான்களிடத்திலிருப்பவன்,

(வி) பூரிதக்ஷிண:—அநேக தக்ஷிணையுடையவன.

[என்றால்—லோகத்தையெல்லாம் இருத்துவதாக அசுவமேதம் முதலான யாகங்களை யநுஷ்டித்து அதில் விசேஷ தக்ஷிணையை யளித்தவன.]

ஸோமப:—ஆங்கே ஸோமஸவநஞ் செய்தவன்.

அம்ருதப:—கீதையிலருளிச் செய்தபடியே ஹவிஸ்ஸின்பரிணாம ரூபமான அமுதத்தைப்பானம்பண்ணுமவன். [432] தனது அநுஷ்டானத்தை பின்சென்றவர்களை பரமபதமேறக்கொண்டு சென்று தனது ப்ரமமாநுபவத்தை அவர்களுக்குத் தந்து அதனால் தனது அநுபவத்தைப் பரிபாலிக்குமவன [433].

ஸோம:—தனக்கும் தன்னை யநுபவிப்போருக்கும் அமுதமாய் விளங்குமவன [434]

புருஜித்—பலபெயர்களை ஜயித்தவன் [435]. புருஸத்தம:—தனது குணாமிருத ஸாகரத்தைப் பானம்பண்ண ஆசைப்பட்ட ஹநுமான் முதலானோரிடத்தில் நித்தியமாயிருப்பவன் [436].

(அ.) அம்ருதப:—அமிருதமயமான தனது ஆத்மாநுபவம பண்ணுமவன். அதவா கடைந்தெடுத்த அமுதத்தை அசுரர்கொண்டு போகவொட்டாமல் ரக்ஷித்து தேவர்களுக்குக்கொடுத்துத் தானும் பானம்பண்ணுகையாலே "அம்ருதப:" என்கிறதென்றுமாம்.

ஸோம:—சந்திர ரூபியாயிருந்து ஒஷதிகளைப் போஷிக்கையாலே ஸோமனென்கிறது; பார்வதியுடன்கூடிய சிவனென்றுமாம்.

[432] అహంహి సర్వయజ్ఞానాం భోక్తా చ ప్రభురేవ చ ॥

[433] యత్ర దేవా అమృతమానశానాస్తృతీయే ధామన్నధ్యైరయన్త ॥

[434] తృతీయస్యామితో దివి సోమ ఆసీత్ ॥ అమృతస్యేవ నాతృప్యన్ ప్రేక్షమాణా జనార్దనమ్ ॥

[435] సత్యేన లోకాన్ జయతి దీనాన్ దానేన రాఘవః । గురూన్ శుశ్రూషయా వీరో ధనుషా యుధి శాత్రవాన్ ॥

[436] స్నేహో మే పరమో రాజన్ త్వయి నిత్యం ప్రతిష్ఠితః । భక్తిశ్చ నియతా వీర భావో నాన్యత్ర గచ్ఛతి ॥

[సత్తమః। వినయోజయస్సత్యసంధో దాశార్హస్సాత్వతాంపతిః ॥]
[జీవో వినయితాసాక్షీ]

వినయః - சிக்ஷிப்பவன், జయః - விதேயமாயிருப்பவன், సత్యసన్ధః - ஸத்தியமானப்ரதிக்ஞையுடையவன், దాశార్హః - தானத்துக்கேற்றவன், సాత్వతాంపతిః - பாகவதாளுக்கு நாதன், జీవః - பிழைப்பிப்பவன், వినయితా - ரக்ஷகன், సాక్షీ - காண்பவன்,

(வி.) விநய:=மாரீசன் தொடக்கமான துர்ஜநர்களையும் தமது வீரியம் முதலிய குணங்களைக்காட்டித் திருத்தியவன்.

ஜய:=ஆச்ரிதாளாலே ஜயிக்கப்படுமவன்[437].

ஸத்யஸந்த:=அந்த மஹான்களிடத்தில் பண்ணின பிரதிக்ஞை ஸத்தியமாயிருக்க நடந்தவன்[438].

தாசார்ஹ:='தாச' என்று தானமாய் அதற்குத் தக்கவனென்கிறது.

[என்றால்-தனது பக்தர்களுக்குத் தன்னைக்கொடுக்கவும், அப்படியே அவர்கள் தங்களை தன்னிடத்தில் ஸமர்ப்பிக்கவுந் தகுந்தவனென்றபடி. அதவா—கிருஷ்ணவதாரத்தில் தசார்ஹ வம்சத்தில் அவதரிக்கையாலே தாசார்ஹனென்றுமாம்.]

ஸாத்வதாம்பதி:=பரமஸத்வ நிஷ்டாளாய் தனது திருவடித் தாமரைகளையன்றி மற்றொன்றை யுன்னாத பாகவதாளுக்கெல்லாம் பதியாய் விளங்குமவன். ஸாத்வத வம்சமான யாதவகுலத்தில் அவதரித்து அதற்கு நிர்வாஹகனாய் விளங்குமவனென்றுமாம். ஜீவ:=அந்த பாகவதாளை ஆத்மநாசம் பிறக்கவொட்டாமல் காப்பாற்றித் தனது பரிசரியையைத் தந்து ரக்ஷிப்பவன்[439]

விநயிதா=ராஜகுமாரனை லாலநம் செய்வதுபோல் அவர்களை லாலனாதிகள் செய்து ரக்ஷிப்பவன். ஸாக்ஷீ=அவர்கள் ஹிததத்

(அ) தாசார்ஹ:=தானத்துக்குத் தகுந்தவன். தாசார்ஹவம்சத்தில் பிறந்தவனென்றுமாம்

* அஸாக்ஷியென்று பிரித்து, அப்பொழுது ஆத்மஸ்வரூபத்தைத் தவிர மற்றொன்றைக் காணாதவனென்று பொருள்கொள்ளக்கடவது.

437 ఆజ్ఞాప్యోఽహంతపస్వినామ్ ॥

438 అప్యహంజీవితంజహ్యాంత్వాంవాసీతేసలక్ష్మణామ్ । నతు ప్రతిజ్ఞాంసంశ్రుత్య బ్రాహ్మణేభ్యోవిశేషతః ॥

439 ఆనన్దమూర్తిర్భగవాన్ హరిస్త్రైలోక్యపూజితః । దృష్టస్న సహతేజీవితుం స్వపరిచారకాన్ ॥

[ముకున్దోఽమితవిక్రమః । అంభోనిధిరనంతాత్మా]
[మహోదధిశయోంతకః ॥ అజో]

ముకున్దః - மோக்ஷபூமியைத்தருமவன், అమితవిక్రమః- அபாரமானபவுருஷமுற்றவன், అమ్భోనిధిః - ஜலத்தில் வைக்கப்பட்டவன், అనన్తాత్మా - ஆதிசேஷனுக்கு ஆத்மாவானவன், మహోదధిశయః- மஹோததியில்படுப்பவன், అన్తకః- நாசகரன், అజః- அகாரத்துக்குப்பொருளானவன்.

---

(வி.) லோகே ப்ரவர்த்திப்பதற்காக அவர்கள் செய்யும் நடவடிக்கைகளைக் கணிசிப்பவன்.

முகுந்த:—தந்தாலல்லது யாந்தரியோமென்று அவர்கள் பிரார்த்தித்தபோது அவர்களுக்கு முக்தி பூமியைத்தருமவன்.

அமிதவிக்ரம:—அவர்கள் தன்னைத் தியானிக்கும் பொழுதும் ஆராதிக்கும்பொழுதும் அநுஸந்திக்கப் படுகின்ற தத்வஸமுதாயங்களையெல்லாம் தரிக்கின்ற ஆதாரசக்தியென்கிற அபரிமிதமானபலத்தைப் படைத்தவன்[440].

அம்போநிதி:—ஜலத்தில் வைக்கப்பட்டவன்.

[என்றால்-ப்ரதானத்தில் கர்ப்போதகத்தில் ஸகல ஜகத்தையுந்தரிக்கும்படியான ஆதி கூர்மமாய் எழுந்தருளியிருப்பவனென்றபடி[441].]

அநந்தாத்மா—அதற்குமேல் ஜகத்துக்கெல்லாம் ஆதார ஸ்தம்பமான ஆதிசேஷனுக்கு அந்தராத்மாவாய் விளங்குமவன். ஸ்ரீஜயஸம்ஹிதையில் இவ்வர்த்தம் [442]கண்டுகொள்வது.

மஹோததிசய:—(அவனே பிரளயகாலத்தில் அந்த அநந்தனுகிற படுக்கையில்தானே சயனிக்கிறபடியால்) மஹோததியில் சயனிப்பவன். அந்தக:—(அப்பொழுது ஸகலத்தையும்) நாசம் பண்ணுமவன்[443]. அஜ:—அகாரத்துக்குப் பொருளானவன்.

[என்றால்-அக்காலத்தில் ஸகல தத்துவங்களும் லயிக்கவே அப்பொழுது இவன் ஸ்வரூபத்தை கேவலம் ப்ரணவத்துக்குப் பிரகிருதியாய்

---

[440] కాలవైశ్వానరశ్యాయీనానాస్యాధోనివాసినః। ఆధారశక్తిసంజ్ఞస్యహ్యమూర్తిస్యచవైవిభోః । అభిమానతనుర్యోవైనానాభేదైశ్చవర్తతే ॥

[441] అనన్తబలశక్తయేభువనభృతేకచ్ఛపాత్మనే ॥

[442] ఆధారశక్త్యుపరివిమలందీప్తవిగ్రహమ్ । జ్వాలాశతసమాకీర్ణంశఙ్ఖచక్రగదాధరమ్ ॥ అనన్తేశంన్యసేత్ ॥

[443] అన్తేపృథివ్యాంసలిలేదృశ్యసేత్వంమహోరగే ॥

[మహార్హస్స్వాభావ్యో జితామిత్రః ప్రమోదనః ।]
[ఆనందో నందనో నందస్సత్యధర్మా]

మహార్హః - பூஜிக்கத்தக்கவன், స్వాభావ్యః- சொத்துக்களாலே பாவிக்கப்படுமவன், జితామిత్రః - சத்துருக்களை வென்றவன், ప్రమోదనః - ஸந்தோஷத்தை உண்டுபண்ணுமவன், ఆనందః-ஆநந்திப்பவன், నందనః - ஆநந்திக்கச்செய்பவன், నందః - ஸம்ருத்திபொருந்தியவன், సత్యధర్మా- ஸத்தியமான தருமத்தையுடையவன்,

(வி.) ஸகல சப்தத்துக்குங் காரணமான அகாரத்திற்குப் பொருளாயிருப்பதாக ஸ்மரிக்கப்படுமென்றபடி 444.]

மஹார்ஹ:= அப்பொழுது ப்ரணவத்தாலே பூஜிக்கத்தக்கவன் 445.
ஸ்வாபாவ்ய:= தன் சொத்துக்களால் பாவிக்கப்படுமவன்.

[என்றால்-இப்படி இந்தப் பிரணவமென்கிற மந்திரத்தைக் கொண்டு தனது சொத்துக்களான ஆத்மகோடிகள் தன்னை வழிபடும்படி ஸ்வாமியாய் நின்றவனென்றபடி 446.]

ஜிதாமித்ர:= இந்த ரஹஸ்யார்த்தத்தை அறியவொட்டாமல் விரோதிக்கின்ற அவர்கள் அஹங்காரமமகாராதிகளையெல்லாம்போக்கடிப்பவன்.
ப்ரமோதந:= இப்படி தன் ஸம்பந்தம் பெற்றவர்களை அவர்கள் முதலில் தன்னை அநுஸந்திக்கும்போதே அவர்களுக்கு ஸந்தோஷமுண்டாகச் செய்பவன்.

(அவதாரிகை.) அநந்தரம் கபிலமூர்த்தியை வர்ணிக்கிறது:—
ஆநந்த:= ஆநந்தவல்லியில் அளவிடுவதாய் விசாரிக்கப்பட்ட வாசாமகோசரமான ஆநந்தத்துக்கு நிலமானவன்.

நந்தந:= அந்த ஆநந்தத்தை முக்திதசையில் சேதநவர்க்கத்துக்களித்து களிக்கச்செய்பவன் 447.

நந்த:= இப்படி அபரிமிதமான போக்தாக்களாலும் போக்யவஸ்துக்களாலும் போகோபகரணங்களாலும் ஸம்ருத்தியாயிருப்பவன். ஸத்யதர்மா = (இப்படி தன்னை ஆச்ரயித்தவர்களை

---

444 తస్యప్రకృతిలీనస్య యః పరస్స మహేశ్వరః ॥

445 బ్రహ్మణేత్వా మహస ఓమిత్యాత్మానం యుఞ్జీత ఏతద్వై మహోపనిషదం దేవానాం గుహ్యమ్ ॥

446 స్వాజీవనేచ్ఛా యది తే స్వసత్తా యాం స్పృహా యది। ఆత్మదాస్యం హరేః స్వామ్యం స్వభావం చ సదా స్మర ॥

447 ఏష హ్యేవానన్దయాతి ॥

[ త్రివిక్రమః ॥ మహర్షిః కపిలాచార్యః ]
[కృతజ్ఞో మేదినీపతిః । త్రిపద స్త్రిదశాధ్యక్షః ]

త్రివిక్రమః - வேதத்தில்வியாபித்திருப்பவன், మహర్షిః - மஹர்ஷி யானவன், కపిలాచార్యః - கபிலரென்கிற ஆசாரியனானவன், కృతజ్ఞః - செய்ததை யறிபவன், మేదినీపతిః - பூமியைத் தரிப்பவன், త్రిపదః - மூன்றுபதங்களுடையவன், త్రిదశాధ్యక్షః - தேவர் களுக்குத்தோழன்,

---

(வி.)முதல்தொடங்கி கடைசிபரியந்தம் நேராகநடத்துகையாலே) ஸத்யமான வியாபாரத்தையுடையவன்.

த்ரிவிக்ரம:=த்ரி: என்கிற வேதத்தில் வியாபித்தவன்

[என்றால்—இப்படி மஹாமஹிமை சாலியாயிருக்கையாலே வேதத்துக்கெல்லாம இவனே பொருளாகும்படி விளங்குமவ னென்றபடி 448 ]

மஹர்ஷி:=இந்த வேதத்தைத்தான் பிரத்தியக்ஷமாய்க் காணவல்ல கபில மஹர்ஷியானவன். இப்படியே அவாதியாகத்தில் சொல்லப்படும் 449.

கபிலாசார்ய:=கபிலாசாரியரென்று பிரஸித்தமாய் விளங்கியவன்

க்ருதஜ்ஞ:=தன்விஷயத்தில் அபராதம் பண்ணின ஸகரபுத்திரருக்காக அவர்கள் புத்திரனை அம்சுமான் வணங்கிப் பிரார்த்திக்க அதையே பெரிதாக நினைத்தவன் 450.

மேதிநீபதி:=பூமியை பரிப்பவன் 451.

த்ரிபத:=வராஹ ரூபந்தரித்தபொழுது மூன்று முசிப்புடன்கூடி யிருந்தவன் 452.

த்ரிதசாத்யக்ஷ:=இந்த வராஹ ரூபியான பகவானே பிரளயாபத்தில் ஸஹாயமாயிருக்கையாலே பிரம்மாதிதேவர்களுக் கெல்லாம் கடகாக நின்றவன்.

---

448 త్రిరిత్యేనం త్రయో వేదాః కీర్తితా మునిసత్తమైః । క్రమతే తాంస్తథా సర్వాన్ త్రివిక్రమ ఇతి స్మృతః ॥

449 శ్రుతీఋగాద్యావక్త్రేభ్యః ప్రోద్గిరన్తమతః స్మరేత్ ॥

450 కపిలముపగమ్య భక్తినమ్రః తదా తుష్టావ-స చైనం భగవానాహ ॥

451 యస్యేయం వసుధా సర్వా వాసుదేవస్య ధీమతః। కాపిలం రూపమాస్థాయ ధారయత్యనిశం ధరామ్ ॥

452 తత్రైవ సంత్రికకుదో వారాహం రూపమాస్థితః ॥

[మహాశృంగః కృతాంతకృత్ ॥ మహావరాహో]
[గోవిందస్సుషేణః కనకాంగదీ । గుహ్యోగభీరో]

మహాశృఙ్గః - பெரியபல்லுடையவன், కృతాన్తకృత్ - யமனை அழித்தவன், మహావరాహః - பெரிய வராஹமானவன், గోవిన్దః - புவியை அடைந்தவன், సుషేణః - நல்லஸேனையுடையவன், కనకాఙ్గదీ - பொன்தோள்வளையுடையவன், గుహ్యః - மறைக்கப்படுமவன், గభీరః-கெம்பீரன்,

(வி.) மஹாச்ருங்கஃ=பூமண்டலத்தை நுனியிற்கொண்ட பெரிய கோரப்பல்லுடையவன் [453].

க்ருதாந்தக்ருத்=யமன்போன்ற ஹிரண்யாக்ஷனைச் செகுத்தவன் [454]. வராஹஸ்மிருதி வராஹபுராணங்களில் தனது ஸித்தாந்தத்தை வெளியிட்டவ னென்றுமாம்.

மஹாவராஹஃ=பெரிய வராஹருபியாய் விளங்கியவன்.

கோவிந்தஃ=ஸ்ரீபாரதத்திற் சொல்லியபடி. [455]நஷ்டமான பூமியைமீண்டும் பெற்றமையாலே கோவிந்த னென்னப்படுமவன்.

(அவதாரிகை,) இனி ரஹஸ்யமான விஷயம் சொல்லப்படும்.

ஸு - ஷேணஃ=நல்ல சேனையுற்றவன்.

[என்றால்—பத்தர், முக்தர், நித்தியர் என்கிற மூவகைச் சேதநகோடிகளையும் ஜயிப்பதற்கு உபகரணமா யிருக்கையாலே சேனைபோல் விளங்கும் சுத்த ஸத்வமயமான ஐந்து உபநிஷத்தத்வங்களையும் திருமேனியாக வுடையவன்.]

கநகாங்கதீ=கீழ்ச்சொன்ன திருமேனிக்கேற்ற ஸுவர்ணமயமான தோள்வளைமுதலிய திருவாபரணங்க ளணிந்தவன். ஸுவர்ணமென்றால்-அபராகிருதத் திரவியமான பஞ்சோபநிஷத்தென்னும் தத்வங்களைச்சொன்னபடி.

குஹ்யஃ=இப்படி பஞ்சோபநிஷத்து மயமான திருமேனியால் மூடப்பட்டிருப்பவன். கபீரஃ=அதிநிர்மலமான மேனியில் தனது ஈசுவரத்வத்துக்கேற்ற காம்பீர்யம் விளங்கும்படியானவன். இவனுடன் கலந்த பாகத்திக்கில் அநாதியான அவித்தையால் கலங்கிய ஸம்ஸாரிசேதநனும் தேக்தாங்கொட்டையைத தேய்த்த

[453] ఏకశృంగో వరాహస్త్వమ్ ॥

[454] హతో హిరణ్యాక్షమహాసురః ॥

[455] నష్టాం చ ధరణీం పూర్వామవిందం యద్గుహాంగతామ్ । గోవింద ఇతి తేనాహమ్ ॥

[గహనో గుప్తశ్చక్రగదాధరః ॥ వేధాస్స్వాంగో జితః కృష్ణో]

గహనః- புகுதற்கரியன், గుప్తః- ரக்ஷிக்கப்பட்டவன், చక్రగదాధరః- சக்கிரமுமகதையும்தரித்தவன், వేధాః - செய்பவன், స్వాంగః- நல்ல அங்கங்களுடையவன், జితః- அஜிதையென்னும்பட்டணமுடையவன், కృష్ణః-சாமளாகாரன்,

(வி.) திரத்தமபோல் தெளிந்து அதிகம்பீரனுய் விளங்குகிறுனென்ருல, ஸ்வபாவமாகவே பிரகாசமானனுய் விளங்குகிற பகவான் அப்படி விளங்கக் கேட்கவேண்டுமா?

கஹநः=புகவரிதானவன்.

[என்ருல்—ரத்நாகர மென்கிற ஸமுத்திரமானது உள்ளுக்குள்ளிருக்கு மவைகளெல்லாம் ஸ்தலபமாய்க்காணும்படி தெளிவுற்றிருந்த போதிலும் காலிட்டிழிவதென்ருல் அரிதாமாபபோல், எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்கிரஹம் திவ்யாத்மஸ்வரூபத்துக்குப் பிரகாசமாய் விளங்கிற்றேயாகிலும் புகுவதற்கரிதா யிருக்குமென்றபடி.]

குப்தः=அதினெ ரஹஸ்யமறிந்த நம்பூர்வாசாரியர்களால் ரக்ஷிக்கப்பட்டவன்.

(அவதாரிகை) எங்கே எந்தலக்ஷணத்தோடு ரக்ஷிக்கபபடுகிறுனென்னில் சொல்லுகிறது.

சக்ரகதாதரः=ஸ்ரீராமாயணத்திற் சொன்னபடியே, கீழ்ச்சொன்ன நித்தியமான திவ்யமங்கள விக்கிரஹமும் திவ்யபூஷணங்களும்போல் பஞ்சசக்தி மயமான சக்கிரம், கதை, முதலிய திவ்யாயுதங்களுடன்கூடி பரமபதத்தில் ரக்ஷிக்கப்படுகிறவன்.

வேதாः=இப்படி அளவிடப்போகாத மஹாவைபவம் எப்பொழுதும் விளங்கும்படி பண்ணுமவன்.

ஸ்வாங்கः=அங்கே தனது ஆதிராஜ்யத்துக்குத் தகுந்த சத்திர சாமராதிகளான ஸகல அங்கங்களோடுங்கூடி விளங்குமவன்.

அஜிதः=கீழ்ச்சொன்ன பஞ்சோப நிஷத்துக்களால் சமைந்து நித்தியமாய் விளங்குகையாலே லீலாவிபூதியைப்போல் உத்பத்தி விநாசாதிகளாலே ஜயிக்கப்படாத அஜிதையென்னும் திவ்யநகரமுடையவன் [456]. க்ருஷ்ணः=காளமேகம்போல் அதிசியாமளமான திருமேனியன்

(அ.) அஜிதः—ஒருவராலும் ஜயிக்கப்படாதவன். [சவன்,
க்ருஷ்ணः=கிருஷ்ணதவைபாயநரென்கிற வியாஸரூபியாயவதரித்

456 పురం హిరణ్మయం బ్రహ్మా వివేశాపరాజితా ॥

[దృఢస్సంకర్షణోచ్యుతః। వరుణో వారుణో]
[వృక్షఃపుష్కరాక్షో మహామనాః॥]

దృఢః - திடமானவன், సంకర్షణః - ஸங்கர்ஷணனென்னும்திருநாமம்பூண்டவன, అచ్యుతః - நழுவாதவன், వరుణః - வரிப்பவன், వారుణః - வரிப்பவரையுடையவன், వృక్షః - விருக்ஷம்போன்றவன், పుష్కరాక్షః - போஷிக்கும்படியான திருக்கண்களுடையவன், మహామనాః - உதாரமான திருவுள்ளமுடையவன்,

(வி) [வராஹாதி அவதாரங்கள்கூட அந்த பஞ்சோப நிஷத்து மயமென்றே சொல்லப்[457]படுகிறது. இதுநிற்க கீழ்சொன்ன அர்த்தங்களெல்லாம் ஸ்ரீவிஷ்ணு தத்வத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது [458].]

த்ருட:=(இந்த திவ்யசரீரத்தில்தானே உபாஸகாளை அநுக்கிரஹிப்பதற்காக வியூஹமாய் வகுக்கப்பட்டு அதில்கொஞ்சம்) ஸ்தூலமானவன். ஸங்கர்ஷண:= இப்படி ஸ்தூலமானவந்தான் ஆரென்னில, ஸ்ரீஸங்காஷண பகவானென்கிறது.

அச்யுத:=நழுவாதவன்; வருண:=சூழ்ந்தவன்; வாருண:=தன்னைவரிப்பவர்ப் பலருண்டாகப்பெற்றவன் [459]

வ்ருக்ஷ:=அப்படி தன்னைவரிப்பவர்களில் எவர்களானால் தன்னை நிழல்போல் அநுவர்த்தித திருக்கிறார்களோ அவர்களுக்குத் தனது ஸர்வஸ்வத்தையுமளித்து அவர்களுடைய அபராதசதங்களையும் பொறுத்துக்கொண்டு அவர்களை வரிப்பவன் [460].

புஷ்கராக்ஷ:=அவாளிடத்தில் கிருபையை வர்ஷித்து ரக்ஷிக்கும்படியான திருக்கண்களுடையவன்,

மஹாமநா:=அவாளிடத்தில் அதிக உதாரமான திருவுள்ளத்தோடுகூடி விளங்குமவன்.

(அ) த்ருட:=தனது ஸ்வபாவத்திலிருந்து சிறிதும நழுவாதவன்.

வ்ருக்ஷ:—விருக்ஷம்போல் சலியாமலிருப்பவன்.

மஹாமநா:—ஸ்ருஷ்டி ஸ்திதியாதிகளை மனதினாலேயே செய்கிறபடியால் பெரியமனமுடையவன்.

[457] కృషామి మేదినీం పార్థ భూత్వా కృష్ణాయసో మహాన్ । కృష్ణో వర్ణశ్చ మేయస్మాత్ తేన కృష్ణోహమర్జున ॥

[458] మత్స్య కూర్మ వరాహాణాం అవిర్భావో మహాత్మనః । అనయైవ ద్విజశ్రేష్ఠ నాన్యయా తద్విరోధతః ॥ [459] తేషు చాప్యహమ్ ॥

[460] నివాస వృక్షస్సాధూనాం ప్రపన్నానాం పరాగతిః ॥

[భగవాన్ భగహానందీ వనమాలీ హలాయుధః ।]

[ఆదిత్యో జ్యోతిరాదిత్య]

భగవాన் - ஐசுவரியமுடையவன், భగహా-ஷாட்குண்யபூர்ணன், నందీ- ஸந்தோஷிப்பவன், వనమాలీ - வனமாலையணிந்தவன், హలాయుధః-கலப்பையை ஆயுதமாய்தரித்தவன், ఆదిత్యః-அதிதிகுமாரன்; జ్యోతిరాదిత్యః-தேஜோமயமான ஆதித்தியன்,

---

(வி.) பகவாந்—இப்படி ஸகல தோஷங்களுக்கும் எதிர்த்தட்டாய் கல்யாணஸ்வரூபனாயிருக்கையாலே மிகவும் பூஜ்யனாய் விளங்குமவன். பகஹா—ஞானைசுவரியாதி குணங்களாலும் அப்படியே விளங்குமவன். இங்கே ஸ்ரீவிஷ்ணு புராணத்திற்சொல்லுகிற பகவச்சப்த நிர்வசநத்தை அநுஸந்திப்பது 461.

நந்தீ:—இப்படி வியூஹத்தில் ஸங்கர்ஷணனாய் விளங்கி, தனது பலபத்ராவதாரத்தில் நந்தரைத் தமப்பனையடைந்தவன். அதவா, கோபிகைகளையும் மதுவையும் அநுபவிப்பதனால் ஆநந்தமுற்றவனென்றுமாம். வநமாலீ—தனது ஸ்ருஷ்டியிலகப்பட்டதாய் கெந்தத்துக்கு அபிமானியான வைஜயந்தியென்னும் திருமாலையை எப்போதும் அணிந்தவன்.

ஹலாயுதஃ—கீழ்ச்சொன்ன பூதங்களுக்கு ஸம்ருத்தியை உண்டுபண்ணுகின்ற கலப்பையென்னும் ஆயுதந்தரித்தவன் 462இப்படியேசொல்லப்படுகிறது. ஆதித்யஃ-தனக்கு வாசகமான அகாரத்துக்குபொருளானவன்.

[ஸங்கர்ஷண பீஜமந்திரம் அகாரமாகையாலே இங்ஙனம் சொல்லுகிறதென்றுணர்க. அல்லது, முன்பிறவியில் அதிதியாயிருந்த தேவகீதேவிக்குத் தனயனாய் பிறந்தவனென்றுமாம். இப்படியே விஷ்ணு தர்மத்தில் தேவியைப்பார்த்து பகவான் அருளிச்செய்தார் 463.]

(அவதாரிகை.) அநந்தரம் நாராயணன் விஷயம்சொல்லப் படுகிறது.

ஜ்யோதிஃ ஆதித்யஃ—ஜோதிஸ்வரூபனான ஆதித்தியன்.

---

(அ) பகஹா—பிரளயகாலத்தில ஸகல ஐசுவரியத்தையும் அழிப்பவன்.

வநமாலீ—பூததந்மாத்திரையின் வடிவமான வைஜயந்தி யென்னும் மாலையணிந்தவன்.

ஜ்யோதிராதித்ய:—சோதியான ஸௌரியமண்டலத்தில் விளங்குமவன்.

---

461 ఐశ్వర్యస్య సమగ్రస్య వీర్యస్య యశసః శ్రియః । జ్ఞానవైరాగ్యయోశ్చైవ షణ్ణాం భగ ఇతీరణా ॥

462 బలభద్రం సమృద్ధ్యర్థం సీరకర్షకకీర్తయేత్ ॥

463 దాక్షాయణీ త్వమదితిః సంభూతా వసుధాతలే । నిర్వైరత్వం జగద్ధాత్రి ప్రసాదం వై కరోమ్యహమ్ ॥

[సహిష్ణుర్గతిసత్తమః। సుధన్వా ఖండపరశు]
[ర్దారుణో ద్రవిణప్రదః]

సహిష్ణుః - ஸஹிக்குமசீலன், గతిసత్తమః - கதியாய்நின்றவன், సుధన్వా - நல்லவில்லை தரித்தவன், ఖణ్డపరశుః - பரசுவென்னும் ஆயுதத்தைக் கண்டித்தவன், దారుణః பயங்கரன், ద్రవిణప్రదః த்ரவிணம் கொடுப்பவன்,

(வி.) [அதென்? ஜோதிஸ்வரூபனை ஆதித்யனென்றால் ஜோதியில்லாத ஆதித்தன் ஒருவனிருப்பதுபோல் காண்கிறதே என்னில்—ஸத்யம்—பரம புருஷனுடைய தேஜஸ்ஸுக்கெதிரே சூரியதேஜஸ்ஸானது அந்தகாரத்துக்கு நிகராயிருக்கும். இப்படியே ஸ்ரீபாரதத்தில் ஸ்ரீநாராயணீயத்தில் 464 வசநங்காண்க.]

ஸஹிஷ்ணு:—பிரம்மாதிகளின் அபராதங்களைத் தத்காலத்தில் ஸஹித்தவன் 465. கதிஸத்தம:—அவனே பரமமான தர்மங்களை உபதேசிப்பதற்கு ஆசாரியனாய் விளங்குகையால் கதியென்று நம்பி அடையும்படியானவன் 466. ஸுதந்வா—அமிருதார்த்தமாக தேவாசுரர்களுக்குக் கலஹம் நேரிட அக்காலத்தில் அசுரரைத் தகர்க்கவேண்டி நல்ல வில்லேந்தினவன்.

கண்டபரசு:—ருத்திரசம்பந்தமான யுத்தத்தில் பரசுவைக் கண்டித்தவன் 467 தாருண:—இப்படி பாஹ்யசத்துருக்களையும் ஆந்தரசத்துருக்களையும் கண்டிக்கையாலே பயங்கரன்.

(அவதாரிகை.) அநந்தரம் வியாஸாவதாரம் சொல்லப்படும்.

த்ரவிணப்ரத:—தனம்போல் அதிச்லாக்கியமான ஸகல சாஸ்திரங்க

(அ.) ஸஹிஷ்ணு:—வெப்பம் குளிர்ச்சிமுதலியவைகளைச் சகிப்பவன்.

ஸுதந்வா—இந்திரியமான சார்ங்கமென்னும் வில்லுடையவன்.

464 తమోర్భవేన యుధ్యతోః। నిష్ప్రభాణి చ తేజాంసి బ్రహ్మా చైవాసనాచ్చ్యుతః॥

465 ప్రసాదయామాస భవో దేవం నారాయణం ప్రభుమ్। శరణం చ జగామాద్యం వరేణ్యం వరదం హరిమ్। తతోఽథ వరదో దేవో జితక్రోధో జితేన్ద్రియః। ప్రీతిమానభవత్తత్ర రుద్రేణ సహ సఙ్గతః॥

466 అహో హ్యనుగృహీతోఽద్య ధర్మ ఏభిస్సురైరిహ॥

467 అథ రుద్రవినాశార్థం ఇషీకాం నర ఉద్ధరన్। మన్త్రైశ్చ సంయుయోజాశు సోఽభవత్పరశుర్మహాన్। క్షిప్తశ్చ సహసా రుద్రే ఖణ్డనం ప్రాప్తవాంస్తదా। తతోఽహం ఖణ్డపరశుః॥

[దివిస్పృక్సర్వదృగ్వ్యాసో వాచస్పతిరయోనిజః ॥]
[త్రిసామా సామగస్సామ నిర్వాణం]

దివిస్పృక్-பரமபதத்தைப்பரிசிப்பவன், సర్వదృక్ - ஸமஸ்தமுங் காண்பவன், వ్యాసః - வியாஸனானவன், వాచస్పతిః-வாக்குக்கெல் லாம்பதி, అయోనిజః - யோனியிற்பிறவாதவன், త్రిసామా - மூன் றுஸாமமுடையவன், సామగః-ஸாமகானம்பண்ணுமவன், సామః - நாசஞ்செய்பவன், నిర్వాణమ్-பரமகதிக்குநிமித்தன்,

---

(வி) ளையும் அவற்றின் அர்த்தங்களையும் கொடுப்பவன் 468

திவிஸ்ப்ருக் — பரவித்தையினால் பரமபதத்திலிருக்கும் தத்வரஹஸ்யத்தையும் ஸ்பரிசித்தவன். என்றால் பரமார்த்தவித் தென்றபடி. இப்படியே அவர் மந்திரம் 469.

ஸர்வத்ருக்—மற்றுமுண்டான ஸகல வைபவங்களையுங் காணவல்லவன். வ்யாஸ:—யுகாநுஸாரமாய் மந்தமதிகளான மனுஷியாளுடைய க்ஷேமத்துக்காக வேதங்களைப் பிரித்தவன் 470.

வாசஸ்பதி:—ஜந்தாவது வேதமான ஸ்ரீபாரதவாக்கியங்களுக்குப்பதியானவர். அயோநிஜ:—ஸாரஸ்வதாவதாரத்தில் எம்பெருமானுடைய வாக்கினின்றுமுண்டாகையால் அயோநிஜர்471. த்ரிஸாமா—ப்ருஹத், ரதந்தரம், வாமதேவ்யம், என்கிற மூன்று ஸாமங்களாலும் பாடப்படுமவன்.

ஸாமக:—தானும் ஸ்வாநுபவத்திலுண்டான ப்ரீதியாலே அப்படிப்பட்ட ஸாமங்களைப்பாடுமவன்.

ஸாம—தன்னைப்பாடுமவர்கள் பாபத்தைப் போக்கவல்லவன்.

நிர்வாணம்—இப்படிபாவங்கள் தொலையப் பெற்றவர்களுக்குப் பரமகதியான ஆநந்தமானவன்.

---

(அ.) வ்யாஸ:—(ருகவேதத்தை இருபத்தோரு விதமாயும் யஜுர்வேதத்தை நூற்றொருவிதமாயும், ஸாமவேதத்தை ஆயிரம் விதமாயும் அதர்வணவேதத்தை ஒன்பதுவிதமாயும் வகுத்து, மற்றும் புராணங்களையும் பரவச் செய்கையாலே) பிரித்தவன்.

---

468 వహన్త్యేవామహస్తేన సర్వశాస్త్రార్థసఞ్చయమ్ । దక్షిణేనచశాస్త్రార్థానాదిశంశ్చ్యుతార్థాస్థితాన్ ॥

469 విదితపరమార్థః ॥

470 యుగానుసారబోధానాంఅక్షేదజననాయవై । విభజన్తుచతుర్థావైవేదమేకంత్రికాలవిత్ ॥

471 అథభూయోజగత్స్రష్టాభోశబ్దేనానునాదయన్ । సరస్వతీముచ్చచార తత్రసారస్వతోభవత్ ॥

[భేషజం భిషక్ । సన్న్యాసకృచ్ఛమశ్శాంతో నిష్ఠా శాంతిః]
[పరాయణం ॥ శుభాఙ్గ]

భేషజమ్ - மருந்தானவன், భిషక్ - வைத்தியன், సన్న్యాసకృత్ - ஸன்னியாஸத்தால்ஒழிப்பவன், శమః-சாந்தியைஉபதேசிப்பவன், శాన్తః - அடங்கியிருப்பவன், నిష్ఠా - நிலையிடமானவன், శాన్తిః - அடக்குமவன், పరాయణమ్-பரமபக்தியுண்டுபண்ணுமவன், శుభాఙ్గః-சோபனமான அங்கங்களுடையவன்,

---

(வி.) பேஷஜம்—அஸாத்தியமான ஸம்ஸாரமென்கிற வியாதிக்கு பரம ஔஷதமானவன். பிஷக்—வியாதிமூலத்தைக்கண்டு சிகித்ஸைசெய்யவல்ல வைத்தியனானவன்.

(அவதாரிகை.) அவன் சிகித்ஸை பண்ணுகிறபடிதா னெப்படிப் பட்டதென்றால்:—

ஸந்யாஸக்ருத்—ஸந்யாஸத்தால் அறுப்பவன்.

[என்றால்—விஷயங்களில் வைராக்யத்தையும், தான் தனது என்கிற அபிமானத்தையு மொழிக்கைகயென்கிற ஸாத்விகமான ஸந்யாஸத்தைக் கொண்டு ரஜஸ் தமஸ்ஸுக்களைப்போக்குமவனென்றபடி.]

(அவதாரிகை) ஸந்யாஸமென்றால் பர்த்தாவான பரமபுருஷனிடத்தில் தனது பாரத்தைச் சுமத்துவது; இதையேயன்றோ எம்பெருமான் சிகித்ஸையாகச் செய்கிறான் 472. இதற்காக இச்சை, பயம், கோபம் முதலியவைகளை யடக்கவேண்டுமென்று உபாயம் சொல்லுகிறானுகையால்:-

சமஃ—சாந்தியை உபதேசிப்பவன்.

சாந்தஃ—ஸமுத்திரம்போல் அபாரமஹிமை யுண்டாயிருக்கச்செய்தேயும் அலையடங்கி ஸ்தப்தமாயிருக்கிற ஸமுத்திரம்போல் சிறிதும் அஹங்காரமின்றி சாந்தனாய் விளங்குமவன்.

நிஷ்டா—விரக்தரான மஹான்களுடைய சுபமான உள்ளங்கள் நிலைக்கு மிடமானவன். சாந்திஃ—அவர்கள் பரமஸமாதியிலிருந்து தன்னை யநுபவிக்கும்பொழுது, நாம் இந்த நிலையிலிருக்கிறோமென்கிற தம்மதிகாரத்தை மறந்திருக்கும்படி விளங்குமவன்.

பராயணம்—அப்படி ஸமாதியில் நின்றவருக்கு உடனே மோக்ஷத்தை அளிக்குமதான பரமபக்தியைத் தருகின்ற உபாயமானவன். இதற்கெல்லாம் கீதையில் வசனங்காண்க 473.

சுபாங்கஃ—இப்படி தன்னிடத்தில் பக்திபண்ணுவதற்கு அநுகூலமான யமநியமாதி அங்கங்களைத் தருமவன்.

---

(அ) பராயணம்—புநராவ்ருத்தியில்லாத கதியுடையவன்.

---

472 వేదాన్తవిజ్ఞానసునిశ్చితార్థాః ॥

473 నిర్మమశ్శాన్తః ఇత్యుపక్రమ్య ॥ మద్భక్తిం లభతే పరామ్ ॥

[శాన్తిదస్స్రష్టా కుముదః కువలేశయః । గోహితో గోపతి ర్గోప్తా]

శాన్తిదః - சாந்தியைக் கொடுப்பவன், స్రష్టా - ஸ்ருஷ்டிப்பவன், కుముదః - பூமியில் உகப்பவன், కువలేశయః - பூமியில் ஈசரெனத் திரியும் ஜீவாகளைத் திரியச் செய்பவன், గోహితః - பிரகிருதிக்கும் வியவஸ்தையை உண்டுபண்ணுமவன், గోపతిః - சுவர்க்கத்துக்கு நாதன், గోప్తా - ரக்ஷகன்,

---

(வி) சாந்திதஃ=இப்படி பக்தியோகம் கைவந்தவர்களுக்கு மறுபடியும் ஸம்ஸாரமார்க்கத்தில் திரும்பாதவண்ணம் தனது ஸாயுஜ்யமென்னும் சாந்தியைத் தருமவன் 474.

ஸ்ருஷ்டா — இப்படி மோக்ஷாபேக்ஷையுடையோரை பிருகிருதியினின்றும் விவேசித்து, போகத்தில் அபேக்ஷையுடையரான சேதநவர்க்கங்களை அவரவர் கருமத்துக்கேற்க ஸ்ருஷ்டிப்பவன்.

குமுதஃ=இப்படி பிரம்மாதி ஸ்தம்பபரியந்தமுண்டான பிராணிகளுக்கு அவரவர் நிலைக்குத்தக்கபடி விஸ்தாரமான போகத்தை யுண்டுபண்ணும பூமியான பிரகிருதி மண்டலத்தில அவைகளைச்சேர்த்து அநுபவிக்கச்செய்து தான் ஸந்தோஷிப்பவன 475.

குவலேசய:=(கௌ வலமாநாந் ஈசாந்சயச்சதி என்று வ்யுத்பத்தி.) என்றால்-இந்த ஸம்ஸாரமண்டலத்தில் முழுதுந்திரிந்து, தமது தேஹம் இந்திரியம் முதலியவைகளுக்குத் தம்மையே ஈசுவரனாகப் பாவித்திருக்கும் ஜீவர்களை அம்மாதிரியாகவே பாவித்துத்திரியும்படி நியமிப்பவன்.

கோஹித:='கோ' என்று பூமியாய், அதனால் ஸம்ஸாரமென்கிற வித்தைவிதைக்கும் பூமியான பிரகிருதிமண்டலத்தைச்சொல்லி அதற்கு வியவஸ்தையைப் பண்ணுமவனென்கிறது 476

கோபதி:—போகபூமியான சுவர்க்கத்துக்கும் பதியானவன்.
கோப்தா—கருமப்பயனை இந்த சக்கிரத்தை ரக்ஷிப்பவன்.

ஷஷ்டசதகம்—ஸம்பூர்ணம்.

---

(அ.) குவலேசய:=குவலமென்று ஜலமாய் அதில் ஆதிசேஷன்மீது படுத்தவன் கோஹித:-கோவர்த்தநகிரியைத்தாங்கி ரக்ஷிக்கையாலே கோக்களுக்கு ஹிதமானவன் .கோப்தா—தன்னைத் தனது மாயையால் மூடுமவன்.

---

474 విశ్వస్యైకం పరివేష్టితారం జ్ఞాత్వా శివం శాన్తిమత్యన్తమేతి ॥ మత్ప్రసాదాత్ పరాం శాన్తిం స్థానం ప్రాప్స్యసి శాశ్వతమ్ ॥

475 అనీశశ్చాత్మా బధ్యతే భోక్తృభావాత్ ॥

476 యో యోనిం యోనిమధితిష్ఠత్యేకో యస్మిన్నిదం సఞ్చవిచైతి సర్వమ్ । తమీశానమ్ ॥

ஸ்ரீ:

# ஸப்தமசதகம்.

[వృషభాక్షో వృషప్రియః ॥ అనివర్తీ-నివృత్తాత్మా సంక్షేప్తా ]

వృషభాక్షః - தர்மத்தை சக்கிரக்கூடமாயுடையவன், వృషప్రియః - தர்மத்தை உகந்தவன், అనివర్తీ - நிவர்த்திப்பியாதவன், నివృత్తాత్మా - நிவ்ருத்தியடைந்த ஆத்மாக்களுடையவன், సంక్షేప్తా - சுருக்கச் செய்பவன்,

---

(வி) வ்ருஷபாக்ஷ:—வ்ருஷமென்று தர்மமாய் அதையே 'அக்ஷ:' சக்கிரத்தின் கூடமாய் வைத்திருப்பவன்.

[என்றால்-முற்கூறிய கர்மபலனுக்குத் தர்மம் ஸாதநமாயிருக்கையாலே அதைச் சக்கிரமென்றபோது, அதற்காதாரமான இதைக்கூடமென்கிறது என்று கண்டுகொள்வது.]

வ்ருஷப்ரிய:—இப்படி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைச் செய்யுந் தர்மங்களிரண்டும் பிரியமாயிருப்பவன்.

[அவனுக்குப்பிரியமாயிருக்கையாலன்றோ கர்மங்களைத் தருமமென்கிறது? சுருதியில் 'செய்யக்கடவன்' என்று விதிக்கிறவிதியும் அவனுடைய பிரீதியையேயன்றோ விளக்குகிறது? இவ்வாதத்தை த்ரமிடாசாரியர் உதஹரித்தார் 477.

அநிவர்த்தீ—அதில் பிரவ்ருத்தி தர்மத்தில் நிஷ்டையுடையோரை தூமாதி மார்க்கத்தாலே பிதருலோகாதிகளையடைவித்து மீண்டும் திருப்புகையாலே அவர்களை ஸம்ஸார மண்டலத்தினின்றும் கரையேறாதவன்.

[ஆனதுபற்றியன்றோ ஸம்ஸாரம் சுழ்வுறும் விருகிறது 478]

நிவ்ருத்தாத்மா—நிவ்ருத்தி தர்மநிஷ்டர்களான ஆத்மாக்களும் தன்னதானவன். ஸங்க்ஷேப்தா—ப்ரவ்ருத்தி தர்மநிஷ்டர்களுடைய ஸ்வாபாவிகமான ஞானத்தை ஸங்கோசிப்பிக்கிற ஸ்வபாவன் 479.

---

(அ.) வ்ருஷபாக்ஷ:—ஸாவாபீஷ்டங்களையும் வர்ஷிக்கும்படியான கண்களுடையவன் ஸங்க்ஷேப்தா—விஸ்தாரமான ஜகத்தை ஸம்ஹார ஸமயத்தில் சுருக்குமவன்.

---

477 ఫలసమ్బన్ధత్వయా హి కర్మభిరారాత్మసంప్రీణనే సప్రీతో లంఫలాయ ఇతి హి శాస్త్రమర్యాదా ॥

478 ధూమో రాత్రిస్తథా కృష్ణః షణ్మాసా దక్షిణాయనమ్ । తత్ర చాన్ద్రమసం జ్యోతిర్యోగీ ప్రాప్య నివర్తతే ॥

479 యయా క్షేత్రజ్ఞశక్తిస్సా వేష్టితా నృప సర్వగా ॥

[ క్షేమకృచ్ఛివః శ్రీవత్సవక్షాః శ్రీవాసః శ్రీపతిః శ్రీమతాంవరః శ్రీదః ]

క్షేమకృత్ - க்ஷேமத்தைச்செய்பவன், శివః - நன்மைசெய்பவன், శ్రీవత్సవక్షాః - சிரீவத்ஸத்தை மார்பிலுடையவன், శ్రీవాసః - லக்ஷ்மிக்கிருப்பிடமானவன், శ్రీపతిః - லக்ஷ்மீநாயகன், శ్రీమతాంవరః - சிரீமான்களில்சிறந்தவன், శ్రీదః-லக்ஷ்மியைக்கொடுப்பவன்,

(வி.) க்ஷேமக்ருத்—நிவ்ருத்தி தர்மநிஷ்டர்களுக்கு அந்த ஞானஸங்கோசத்தைப்போக்கி க்ஷேமத்தை யுண்டுபண்ணுமவன்.

சிவः=இப்படி போகத்திலும் மோக்ஷத்திலும் அபேக்ஷையுடையோரான யாவர்க்கும் மங்களத்தைச்செய்பவன் [480].

(அவதாரிகை.) அநந்தரம் இவனைச் சிவனென்று மங்களகரனுகச் சொல்லுகைக்கு வேண்டும் உபபத்திகளை மேலேசொல்லுகிறது:—

ஸ்ரீவத்ஸவக்ஷாः=நியாம்ய கோடிகளான சேதநகோடிகளைக் காட்டிலும் இவனை வேறுபடுத்திக் காட்டுமதாய் லக்ஷ்மீவல்லபனுயிருக்கும் அத்ருஷ்டத்துக்கு ஸூசகமான ஸ்ரீவத்ஸமென்னும் சிந்நமுடையவன்[481]. ச்ரீவாஸः=சிரீமஹா லக்ஷ்மியானவள் நித்தியமாய் யதேச்சவிஹாரம்பண்ணும் கல்பகவிருக்ஷ உத்யாநம் போன்றவன் [482].

ச்ரீபதி:—"துல்யசீலவயோவ்ருத்தாம்" என்கிறபடியே அந்த பெரிய பிராட்டியாருக்குத் தகுந்த ஸ்வயம்வர நாயகன்[483].

(அவதாரிகை.) ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் ஆதரத்துடன் அநவரதமும் தன்கண்களாரக்கண்டு மகிழும் பரிபூர்ண பாத்திரம் பகவான், பிரம்மாதிகளோ அவள் எப்போதோ ஒருகாரியாந்தரத்தைக் கடாக்ஷிக்கும்பொழுது அதில் விதிவசமாய் விழுகின்ற கடாக்ஷ லேசத்துக்குப் பாத்திரர்களாய் அதினுல் ஸாம்ராஜ்ய லக்ஷ்மியை அடைந்து ஸ்ரீமாந் என்கிற பெயரை வஹிக்கிறுர்கள் ஆகையால் அப்படிப்பட்டப் பிரம்மாதிகளுக்கெல்லாம் சிரேஷ்டனென்கிறது.

ச்ரீமதாம்வரः=சிரீமான்களுக்கெல்லாம் சிரேஷ்டன்.

ச்ரீதः=நித்தியமாய் தனது நிர்வ்யாஜமான பிரேமரஸத்தின் அழகை அவளுக்குக் கொடுப்பவன் [483].

(அ) ஸ்ரீபதி:—லக்ஷ்மீபதி-பராசக்திக்குப் பதியென்றுமாம்.

480 సంసారమోక్షస్థితిబన్ధహేతుః ॥

481 శ్రీవత్సవక్షాః ॥

482 శ్రియోనిత్యస్వైరవిహారకల్పద్రుమోద్యానమ్ ॥

483 హ్రీశ్చతేలక్ష్మీశ్చపత్న్యౌ ॥ అస్యేశానాజగతోవిష్ణుపత్నీ ॥

[ శ్రీదః శ్రీనివాసః శ్రీనిధిః శ్రీవిభావనః । శ్రీధరః శ్రీకరః శ్రేయః శ్రీమాన్ ]

శ్రీదః - லக்ஷ்மியைப் பிரியாமைகையாயுடையவன், శ్రీనివాసః - லக்ஷ்மியைத் தாங்குமவன், శ్రీనిధిః - லக்ஷ்மிக்கு நிதியானவன், శ్రీవిభావనః - லக்ஷ்மியால் பிரஸித்தியடைந்தவன், శ్రీధరః - லக்ஷ்மீதரன், శ్రీకరః - லக்ஷ்மியைச் செய்வித்துக்கொள்பவன், శ్రేయః శ్రీమాన్ - புருஷார்த்தங்களுக்காக ஆச்ரயிக்கப்படும் லக்ஷ்மியை நித்தியமாய் உடையவன்,

(வி.) [என்றால்—அவளுக்கு ஜீவநாதாரமாயிருப்பவனென்றபடி. அவனை ஆச்சிரயத்திருக்கையாலன்றோ அவளை ச்ரீயென்கிறது[484].]

ச்ரீசஃ=அவளுக்கும் அப்படிப்பட்ட தன்மையுண்டாகைக்குக் காரணனாகையால் ஈசனானவன். அதவா, ஸகல அவஸ்த்தைகளிலும் அவள் நியமிக்கப்பெற்றவன். இதற்கு வசநம் [485]காண்க.

ச்ரீநிவாஸ=கற்பகக் கொடிக்குக் கல்பக விருக்ஷம்போல் அவளுக்குக் கொள்கொம்பாய் விளங்குமவன்.

ச்ரீநிதிஃ=ஆபரணப்பெட்டியில் வைத்த ரத்தினமாலைபோல் அவளை வைத்து வாழ்பவன்.

ச்ரீவிபாவந:—அவள் ஸம்பந்தத்தாலே பிரஸித்தி யடைந்தவன்.[486]

ச்ரீதரஃ=ஒளியை இரத்தினமும, பரிமளத்தைப்புஷ்பமும், நிலவைச் சந்திரனும, இனிமையை அமுதமும்போல் அவளை ஸ்வபாவமாகவே தரித்தவன்[487].

ச்ரீகரஃ=பரத்வமான நிலையிற்போல் வியூஹம் அவதாரம் முதலிய நிலைகளிலும தனக்குத்தக்கபடி அவளைச் செய்துக்கொள்ளுமவன்[488]. ச்ரேயஃ ச்ரீமாந்=ஸகல புருஷார்த்தங்களும ஸித்திக்

(அ.) ச்ரீவிபாவந:—பிராணிகளுக்குக் கர்மாநு ரூபமாய் நாநாவிதமான ச்ரீயை உண்டுபண்ணுமவன்.

[484] నచసీతాత్వయాహీనా నచాహమపిరాఘవ । ముహూర్తమపిజీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ ॥

[485] ఆదావాత్మగుణత్వేన భోగ్యరూపేణవిగ్రహే । ఆధారకస్వరూపేణదాసీభావేనవాసదా ॥

[486] అప్రమేయంహితత్తేజో యస్యసాజనకాత్మజా ॥

[487] నహిహాతుమియంశక్యా కీర్తిరాత్మవతో యథా ॥

[488] దేవత్వేదేవదేహేయమ్ ॥

[ల్లోకత్రయాశ్రయః॥స్వక్షస్స్వంగశ్శతానందో నన్దిర్జ్యోతిర్గణేశ్వరః]

లోకత్రయాశ్రయః - உலகமூன்றுக்குமுறைவிடம், స్వక్షః - நல்ல கண்களுடையவன், స్వఙ్గః - நல்ல அவயவங்களுடையவன், శతానన్దః- அளவற்ற ஆநந்தங்கொண்டவன் నన్దిః- ஸம்ருத்தியுடையவன், జ్యోతిర్గణేశ్వరః- சோதிக்கணங்களுக கிறைவன்,

---

(வி.) கும்பொருட்டு ஆச்ரியிககவேண்டியவளான பெரிய பிராட்டியாரோடு நித்தியமாய் கூடிவிளங்குமவன [489].

லோகத்ரயாச்ரய:=ஜகந்மாதாவான அவளுடன்கூடி எப்போதும் ஸகலத்துக்கும ஆச்ரயமாய் விளங்குமவன் [490].

ஸ்வக்ஷ:=அவள் ஸௌந்தரியமாகிற அமுதக்கடலைக் கரைகாணும்படியான கண்முதலிய கரணங்களுடையவன்.

ஸ்வங்க:=அவளும் மேல்விழுந்து விரும்பும் படியான திருமேனியுடையவன்.

சதாநந்த:=ஒருவர்க்கொருவர் பிரணய ரஸம்வெள்ளமிடும்படி அபரிமிதமான ஆநந்தமுறுமவன்.

நந்தி:=இப்படி எப்பொழுதும் எங்கும் எல்லாப் பிரகாரத்தாலும் இவளால் ஸம்ருத்தி பொருந்தியிருப்பவன.

ஜ்யோதிர்கணேச்வர:=இருவர்க்கும் அநுகூலர்களாய் தேஜோரூபிகளாய் விளங்குகின்ற அநந்த கெருடவிஷ்வக்ஸேநாதிகளான பரிசாரக கணங்களால் ஸேவிக்கப்படுகையாலே அவர்களுக்கு ஈசுவரனாய் விளங்குமவன்.

[ஜோதி: என்கிற சபதம, புருஷ ஸூக்தத்தில் [491]சொல்லியபடி எப்பொழுதும் பிரகாசிககின்ற நித்திய ஸூரிகளைச் சொல்லக்கடவதா யிருக்குமென்றறிக.]

(அவதாரிகை.) இப்படி பரத்வாவஸ்தையில் கடைசிவரையிலுண்டான ரஹஸ்யம் சொல்லப்பட்டது. இனி ஸௌசீல்யத்தின் பரமாவதியிலுண்டான ரஹஸ்யம் சொல்லப்படும்.

---

(அ.) சதாநந்த:—பராநந்தனுன தான் ஒருவனே பலவிதமாயாகிறுனென்று சதாநந்தனென்கிறது.

---

489 యస్యాంహిరణ్యంవిన్దేయంగామశ్వంపురుషానహమ్ ॥

490 త్వమ్మాతాసర్వలోకానాందేవదేవోహరిఃపితా ॥

491 మరీచీనాంపదమిచ్ఛన్తివేధసః ॥ సాధ్యాస్సన్తిదేవాః ॥

[విజితాత్మావిధేయాత్మాసత్కీర్తిశ్ఛిన్నసంశయః ।]
[ఉదీర్ణస్సర్వతశ్చక్షురనీశశ్శాశ్వతస్థిరః ॥]

విజితాత్మా - ஜயிக்கப்பட்டவன், విధేయాత్మా - வசப்பட்டவன், సత్కీర్తిః-நல்லபுகழ்கொண்டவன், ఛిన్నసంశయః-ஸந்தேகந்தீரப்பவன, ఉదీర్ణః - விளங்குமவன், సర్వతశ్చక్షుః - எங்குங்கண்கள்உடையவன, అనీశః-பராதீனன, శాశ్వతస్థిరః - எப்பொதும் அசையாமலிருப்பவன்,

(வி) விஜிதாதமா=ஸ்ரீமஹாலக்ஷ்மியினுடைய நித்திய ஸம்பந்தம்பெற்று அதிகஸம்பந்நனாய் நிரபேக்ஷமாய் விளங்கினானாகிலும், தனது தாளடைந்தவர்களுக்கு வசபபட்ட மனதையுடையவன்.

விதேயாத்மா—அவர்களுக்கு விதேயனுமிடத்தில் அவர்கள், இங்கே வா, இங்கே இரு, இங்கேஉட்கார், இதைப்புசி என்று விதிக்கும்படியாய் விளங்குமவன்.

ஸத்கீர்த்திஃ=இப்படிப்பட்ட ஸௌசீல்ய மிருக்கச்செய்தே பெரிய கீர்த்தியுடையவன் 492.

சிந்நஸம்சயஃ=இப்படி அத்தியந்தம் ஸௌசீல்யமுடையனா யிருக்கையாலே, தன்னையறிவதும், தன்னை ஸாதிப்பதும், தன்னை அடைவதும் ஸுலபமோதுர்லபமோ அவ்விஷயத்திலுண்டான ஸம்சயத்தையெல்லாம் போக்கடிப்பவன் 493. எப்படி?

உதீர்ணஃ=கர்மசக்ஷுஸ்ஸுக்களுக்கும் ப்ரத்தியக்ஷமாய்க்காணலாம்படி அவதரித்தவன். ஸர்வதஃ சக்ஷுஃ=அப்படி அவதரிக்கையாலே நம்போல்வாருடைய கண்களையெல்லாம் நேர்கொடு நேரேகடாக்ஷிப்பவன்,

[இதனால் ஸம்சயம் அற்றபடி சொல்லித்தாயிற்று. ஸ்பஷ்டமாய் பிரத்தியக்ஷமான விஷயத்தில் ஸம்சயமுண்டோ?]

அநீச:=அப்படியே சேதனனிட்டவழக்காய் ஸ்நாநம், அலங்காரம் கோஷ்டிமுதலிய தனது வியாபாரங்களெல்லாம் அவானுடைய ஆதீனமாயிருக்கையால் பரதந்த்ரமாயிருப்பவன்.

சாச்வத: ஸ்திர:=அப்படியே எப்பொழுதும் பிரத்தியக்ஷமாய்க்கண்டனுபவிக்கும்படி அனேக பிம்பங்களைத் திருமேனியாய்த் தரித்து எப்போதும் மறையாமல் 494எழுந்தருளி யிருப்பவன்.

(அ.) சிந்நஸம்சய:—ஸம்சயந்தீர்ந்தவன்.

492 యదస్యకీర్త్యతే తదస్తి తావదితి నతు యావదస్తి తావదితి తదధికం వా ॥

493 తం హ దేవమాత్మబుద్ధిప్రసాదమ్ ॥

494 బిభ్రాక్షత్యాత్మనాబిమ్బే సమాగమ్యావతిష్ఠతే ॥

[భూశయో భూషణో భూతిర్విశోకశ్శోకనాశనః ॥ అర్చిష్మానర్చితః]

భూశయః - புவியில்படுத்தவன், భూషణః - அலங்கரிப்பவன், భూతిః-ஐசுவரியமானவன், విశోకః-சோகமற்றவன்; శోకనాశనః- சோகந்தீர்ப்பவன், అర్చిష్మాన్ - காந்தியுடையவன், అర్చితః-பூஜிக்கப்பட்டவன்,

---

(வி.) பூசயः=பக்தர்கள் தன்னுடைய நித்திய ஸாந்நித்யத்தை அபேக்ஷித்து, ஸ்வயம் வ்யக்தமான மனுஷ்யாதி ரூபமாய் விளங்குகிற ஆயாதநாதி பூமிகளைக்காட்டி இதிலிருக்கவேண்டுமென்றார்களாகில் அவர்களை அநுக்கிரஹிப்பதிலுண்டானஸௌகாதிசயத்தாலே அவைகளில் ஆவிர்ப்பவிப்பவன்.

பூஷணः=இப்படி யாவர்க்கும் ஹிதமாய் நடந்துகொள்வதென்கிற குணாதிசயத்தால் தன்னை பூஷித்துக்கொள்பவன்:

[நல்ல ஸ்ரீமான்களான புருஷர்கள், தரித்திராளுடைய கிருகத்திற்கு அதிதியாய்வந்து, அவர்கள்தந்த அல்பமான உணவுகளை யருந்தி, அவர்களோடு ஒருகோர்வையா யிருந்தால் அது அவர்களுக்கு தூஷணமாகுமோ? ஆகமாட்டாது; மற்றபடி பூஷணமே யாமென்றுணர்க.]

பூதிः=யாதொரு உபாயமும் தெரியாத அவர்களுக்கு ஸர்வஸம்ருத்தியான ஐசுவரியமானவன்.

[என்றால்—அவர்களுக்கு புத்திரன், பசு, போஜநம், பந்துமுதலிய வெல்லாந் தானாயிருப்பவனென்றபடி.]

விசோக:=இப்படி பிராணிகளொன்றையும் நாதனற்றதாக விடாமையாலே அவ்விஷயத்தில் சோகந்தீரந் திருப்பவன். சோகநாசந:=அவர்களுக்கு தன்னைப் பிரிவதிலுண்டாகும் சோகத்தைப் போக்குமவன்[495].

அர்சிஷ்மாந்=தன்பிரபாவங்களை யெல்லாம் மறைத்துக்கொண்டே அவர்களுடைய உட்கண் வெளிக்கண் ணென்கிற விரண்டுந் திறக்கும்படியான திவ்யதேஜஸ் ஸுடையவன்.

அர்ச்சித:=இப்படிக்கெல்லாம் விளங்கும் அர்ச்சாவதாரத்தைக்கொண்டருளுமவன்.

[இவ்வவதாரந்தான், பரத்வம்போல் வெகுதூரத்திலிராமலும், ஸுதநாதி அவதாரங்கள்போல் எப்பொழுதோ எங்கோ ஓரிடத்தி லிராமலும், எப்பொழுதும் ஸகலமான க்ஷேத்திரா யதநஙகளிலும் பிரத்தியக்ஷமாயிருக்கும். இதினுடைய தத்வரஹஸ்யம், பகவத் சாஸ்திரம் போதாய

---

(அ) அநீச:—தனக்கோ ரீசனில்லாதவன். பூசய:—லங்கையின் வழியைத்தேடவேண்டி ஸமுத்திரதீரத்தில் படுத்தவன்.

---

[495] సోऽహం భగవశ్శోచామితమ్మా భగవాన్ శోకస్యపారన్తారయతు ॥

[శంభుర్విశుద్ధాత్మా విశోధనః । అనిరుద్ధోఽప్రతిరథః]

శమ్భుః - விரும்பப்பட்டவன், విశుద్ధాత్మా பரிசுத்தஸ்வபாவன், విశోధనః - சோதிப்பவன், అనిరుద్ధః-அநிருத்தன், అప్రతిరథః- எதிர்த்தேரில்லாதவன்,

---

(வி.) நஸ்மிருதி, வைஷ்ணவ ஸ்மிருதிபுராணம் முதலானவைகளில்கண்டு கொள்வது. இன்னும் வைஷ்ணவ தர்மத்திலும் ஸாலபம் 496.]

கும்ப.—ஆங்கே அவ்வவர்கள் தாம் தாம் பரிசயம்பண்ணிய ஸவுந்தரி யாதிகளைப்போலவே பகவானுக்கும் இருப்பதாக ஆசைப்படப்பட்டவன்; அதவா-கு என்று பூமியாய் தியாநம் ஆராதநம் முதலானவைகளுக் கெல் லாம் எல்லை நிலமாய் விளங்கும் அர்ச்சா விக்ரஹத்தில் ஆச்ரிதாளுக்கு யமகிங்கராதிகளா லுண்டாகும் மஹாபயத்தையும் போக்கும்படி விளங்கு மவன் என்றுமாம்.

[இப்படி-எம்பெருமான் அர்ச்சாஸமாதிகொண் டருளிய திவ்யக்ஷே த்திரங்களில் சரீரத்தை விட்டவர்களுக்கு அவரவர் சுத்திக்குத்தக்கபடி எம்பெருமான், தானேயாவது, தனது பக்தாளைக்கொண்டாவது அவர் களைச் சோதித்து, அவர்களுக்கு அந்த ஜந்மத்திலோ அல்லது புண்யமான ஜந்மாந்தரங்களிலோ கிரமமாய் தனது பிராப்தியைத் தருவதாய் 497சொ ல்லப்படுகிறது.]

விசுத்தாத்மா=தன்னை ஆச்ரியித்தவாளிடத்தில் தாரதம்யமின்றி யா வர்க்கும்தனது ஸர்வஸ்வத்தையும் வழங்குகையாலே பரிசுத்தஸ்வபாவன்.

விசோதந:—தனது க்ஷேத்திரங்களில் சரீரத்தைவிட்டவர்களை ச்சோ தித்து தனது பிராப்திக்கு உரியவாளாகச் செய்துகொள்பவன்.

(அவதாரிகை.) அநந்தரம் க்ஷேத்திர விசேஷங்களில் எழுந்தருளும் பொழுது முன்சொன்ன வியூஹரூபமாயும் விபவரூபமாயும் எழுந்தருளி யிருக்கும்படி சொல்லுகிறது.

அநிருத்த:—ருஷிகள் நிருக்தியின்படி 498 பூமியில் வாஸுபாண்டமெ ன்கிற க்ஷேத்திரத்தில் ஜநார்த்தனனென்கிற திருநாமம்பூண்டு எழுந்தரு ளிய அநிருத்தஸ்வரூபன்.

அப்ரதிரத:—அவனே ஜநார்த்தநனுகையாலே அநிஷ்டமான ஜநங் களை நாசம்செய்யும் விஷயத்தில் தனக்கு எதிராய் மற்றொரு ரதம் நிற்க வொட்டாமல் விளங்குமவன்.

---

496సురూపాం ప్రతిమాం విష్ణోః ప్రసన్నవదనేక్షణామ్ । కృత్వాత్మనః ప్రీతికరీం సువర్ణరజతాదిభిః ॥ తామర్చయేత్ ॥

497అర్చావనిషు సర్వాసు నిత్యం సర్వేశ్వరో హి సన్నిధిమ్ । ముక్తయే సర్వభూతానాం విశేషేణ తు వైభవి ॥

498జనార్దనాఖ్యయా దేవస్త్వనిరుద్ధో జగత్ప్రభుః । భూభాగే వాసుభాణ్డాఖ్యే నిత్యసన్నిహితస్థితః ॥

[ప్రద్యుమ్నోఽమితవిక్రమః। కాలనేమినిహావీరశ్శౌరి]
[శ్శూరజనేశ్వరః। త్రిలోకాత్మా త్రిలోకేశః]

ప్రద్యుమ్నః - தோற்றுமவன், అమితవిక్రమః - அளவற்றபராக்கிரமன், కాలనేమినిహా - காலசக்கிரத்தையழித்தவன், శౌరిః - சௌரியென அவதரித்தவன், శూరః - சூரன்மைந்தன், శూరజనేశ్వరః - சூராளான ஜநங்களுக்கு ஈசுவரன், త్రిలోకాత్మా - மூன்றுலோகமும் எப்போதும் திரிபவன், త్రిలోకేశః - விசுவேசுவரன்.

---

(வி.) ப்ரத்யும்ந:- தன்னைத் தோற்றுவிக்குமவன் அமிதவிக்ரம:=மூவுலகத்திலும் அடங்காத பராக்கிரமசாலி. காலநேமிநிஹா-கீழ்ச்சொன்னக்ஷேத்திரங்களிலிருந்தபடி கலிகல்மஷமென்னுங்காலசக்கிரத்தைப் போக்கியவன்.

[இப்படியே யன்றோ காலநேமி நாசகனுடைய தியானத்தில் சொல்லப்பட்டது?499]

சௌரி:=உத்பலாவதக க்ஷேத்திரத்தில் சௌரியென்னும்திருநாமம் பூண்டெழுந்தருளியவன்.

சூர:=சித்திரகூட பர்வதத்தில் ஸகலராக்ஷஸ ஸம்ஹாரகர்த்தாவாய் விளங்கும் ராமனென்னும் சூரனவன் 500.

சூரஜநேச்வர:=சூராளுகெல்லாம் ஈசுவரன்.

த்ரிலோகாத்மா=மகததேசத்தில் த்ரிலோக நாதனென்று ப்ரஸித்தமாய் எழுந்தருளி யிருப்பவன் 501.

[த்ரிலோகத்துக்கும் ஆத்மாவென்றால் பக்தாளை அநுக்கிரஹிப்பதற்காக எந்தவேளையும் மூன்றுலோகமும் ஓடித்திரியுமவனென்றபடி.]

த்ரிலோகேச:=ப்ராக்ஜோதிஷ பட்டணத்தில் விசுவேசுவரனென்கிற திருநாமத்தோடு விளங்குமவன் 502.

---

(அ) காலநேமிநிஹா:—காலநேமியென்னும் அசுரனைக்கொன்றவன்.

---

499 అవిద్యాఖ్యాచయా నేమిః కాలచక్రస్యదుర్ధరా। సామయాయంసమాశ్రిత్యవిగ్రహంవిధునోతిచ ॥ ధ్యాయేత్తత్ప్రసరఘ్నఞ్చ దేవమ్ ॥

500 ధరాధరే చిత్రకూటే రక్షఃక్షయకరోమహాన్ । సంస్థితశ్శూరో రామఃపద్మపత్రాయతేక్షణః ॥

501 మగధామణ్డలే విప్రమహాబోధధరాశ్రితః । సంస్థితో లోకనాథాత్మా దేవదేవో జనార్దనః ॥

502 శుభమాసాద్యభూభాగం ప్రాగ్జ్యోతిషపురేతథా । దేవం విశ్వేశ్వరాఖ్యస్తు స్థితమేత్యస్వగోచరాత్ ॥

[కేశవః కేశిహా హరిః ॥ కామదేవః కామపాలః]

[కామీ కాంతః కృతాగమః। అనిర్దేశ్యవపు]

కేశవః - கேசவப்பெருமாள், కేశిహా - கேசியைச்செகுத்தவன், హరిః - ஹரி, కామదేవః - காமதேவப்பெருமாளானவன், కామపాలః புருஷார்த்தங்களைக்காப்பவன், కామీ-விரும்பப்படுமவன், కాంతః - இனியனானவன், కృతాగమః - ஆகமங்கள்செய்தவன், అనిర్దేశ్యవపుః-குறிக்கப்போகாததிருமேனியன்,

---

(வி) கேசவ:=மதுரையிலும காசியிலும கேசவனென்னும திருநாமமபூண்டு எழுந்தருளியிருப்பவன் [503].

கேசிஹா=கேசியைக்கொன்றவன்.

[என்றால் "கேசவம் கேசிஹந்தாரம்" என்று கேசவனென்னுந்திருநாமம் பூண்டவனென்றபடி.]

ஹரி:=கோவர்த்தந பர்வததகில ஹரியென்னுந் திருநாமத்தோடு எழுந்தருளியிருப்பவன்.

காமதேவ:=சங்கராலய க்ஷேத்திரத்தில் ஸகலருக்கும் ஸகல புருஷார்த்தங்களையுங் கொடுத்துக்கொண்டு காமதேவனென்னும் பெயர் பூண்டுஅப்ஸரஸ்ஸால் பூஜிக்கப்பட்டு விளங்குமவன்.

காமபால:=அப்படி தான்தந்ததைத் தானே பரிபாலிப்பவன்.

காமீ=புருஷார்த்தங்களை அதிகமாய் கொடுக்கையாலே ஆசைப்படும்படிவிளங்குமவன்

காந்த:=தானும் மனோஜ்ஞனா யிருப்பவன்.

[ஆகவேயன்றோ அப்ஸரஸ் அர்ச்சிக்கிறது? இப்படியே மேலும ஆங்காங்கு திருநாமத்தின் ஸாமர்த்தியத்தால் அந்தந்த க்ஷேத்திர ஸம்பந்தம் உளஹிக்கததக்கது.]

(அவதாரிகை,) அநந்தரம் சக்ரீசாவதாரம் சொல்லப்படும்.

க்ருதாகம:=நானாவித மந்த்ர வித்தைகளைச் செய்தவன்.

அநிர்த்தேச்யவபு:= அந்தந்த யுகத்துக்கேற்றபடி திருமேனியெடுக்கையாலே இதுதானென்று குறிப்பிடப்போகாத சரீரமுடையவன்.

---

(அ.) கேசவ:—பிரம்மருத்திரர்களுக்குக் காரணன்.

ஹரி:=ஸம்ஸாரததை வேர் பிடுங்கலாகப்போக்குமவன்.

காந்த:=பிரம்மாவின் வாழ்நாளான த்விபரார்த்தத்தின் முடிவில் பிரமனைமுடிப்பவனென்றுமாம்,

---

[503] కేశవః క్లేశహరణాత్ కేశిద్వయాన్వయాత్ స్థితః। మథురాయామహం క్షేత్రే వారాణస్యామపి ద్విజ ॥

[విష్ణుర్వీరో௽నంతో ధనంజయః॥ బ్రహ్మణ్యో బ్రహ్మకృత్ ।]

విష్ణుః-வியாபித்தவன், వీరః-வீரன், అనన్తః-அளவற்றவன், ధనఞ్జయః-தனத்தை ஜயித்தவன், బ్రహ్మణ్యః - பிரகிருதிக்கும் ஆத்மாவுக்கும் ஹிதமானவன், బ్రహ్మకృద్బ్రహ్మ - நான்முகனுக்கும் நியாமகனானவன்,

---

(வி) விஷ்ணுః=இப்படி. தனது நியமநசக்தியைக்கொண்டு வியாபித்தவன். வீரః=ஸாதுக்களுக்கு ஸந்தாபத்தை உண்டுபண்ணுமவர்களை தனது கதை, சக்கிரம் முதலிய ஆயுதங்களாலேயே நிரஸிப்பவன் [504].

அநந்தః=தேசத்தாலாவது காலத்தாலாவது வஸ்துவாலாவது அளவின்றியிருப்பவன்[505].

[எப்போதும் எங்கும் ஸகலவிதத்தாலும் பிரவர்த்திப்பவனென்றபடி.] (அ-கை.) குணமும் விபூதியும் இப்படியே அளவற்றிருக்குமென்கிறது.

தநஞ்ஜயః=தனத்தை ஜயித்தவன்.

[அதாவது, இதைநாம் அடையவேண்டுமென்கிற ஆசையும், ஸம்பாதித்தால் அதில் லோபமும், அதைக்காப்பாற்றுவதும், அதைக்கொண்டு ஜீவநம் பண்ணுவதும் எல்லாம் தனத்தைவிட இவனிடத்தில் அதிகமாய் உண்டாயிருக்கையாலே பொன், ரத்நம் முதலிய தநங்களையெல்லாம்விட மேலாய்விளங்குமவனென்றபடி.]

ப்ரம்ஹண்யః—பெரியவைகட்கு இதமானவன்.

[என்றால்—அபரிமிதமான போகமோக்ஷங்களிரண்டையும் கர்மஜ்ஞானங்கள்கொண்டு அநுபவிக்கிறபடியால் பெரிதாயிருக்கும் சேதநத்துக்கும், அளவிறந்த போகஉபகரணங்களாகப் பரிணமிக்கிறபடியால் பெரிதாயிருக்கும் அசேதனத்திற்கும், ஸ்திதி, போகம் முதலான ஸகலாவஸ்தைக்கும் ஹேதுவாய் ஹிதமாயிருப்பவனென்றபடி.]

ப்ரம்ஹக்ருத் ப்ரம்ஹா=பிரகிருதியின் காரியவர்க்கமான மஹத் அஹங்காரம் முதலிய விஸ்தாரங்களைச் செய்கின்ற சதுர்முகப் பிரம்மாவுக்கும் பெரியவனுய்க்கொண்டு நியமிப்பவன்.

---

(அ.) தநஞ்ஜய:=திக்விஜயகாலத்தில் தநம் ஸம்பாதித்தமைகொண்டுதனஞ்ஜயனென்னப்படும் அர்ச்சுனரூபியானவன்.

---

[504] ఆజ్ఞాం ప్రతీక్షతే నైవ గదాచక్రద్వయేన తు । హేతి తేనహీనస్త్వాశు సాధుసన్తాపకారిణః ॥

[505] నాన్తో௽స్తి విస్తరస్య మే ॥ అద్వైతస్యైవానన్తో నాస్తి యద్బ్రహ్మ ॥ సత్యం జ్ఞానమనన్తం బ్రహ్మ ॥

[వృద్ధో బ్రహ్మా బ్రహ్మవివర్ధనః । బ్రహ్మవిద్బ్రాహ్మణో బ్రహ్మీ బ్రహ్మజ్ఞో]
[బ్రాహ్మణప్రియః ॥]

బ్రహ్మ - பெரியவன், బ్రహ్మవివర్ధనః - தருமத்தை வளர்ப்பவன்,
బ్రహ్మవిత్ - வேதமறிந்தவன், బ్రాహ్మణః - பிராம்மணனானவன்,
బ్రహ్మీ - பிரமமத்தையுடையவன், బ్రహ్మజ్ఞః - வேதார்த்தமறிந்தவன்
బ్రాహ్మణప్రియః வேதாதிகாரிகளிடத்தில் அன்புகூர்ந்தவன்,

---

(வி) ப்ரம்ஹா=இப்படி வியக்தமாயும் அவ்யக்தமாயு மிருக்கின்ற ஸமஷ்டி வ்யஷ்டி புருஷர்களைப் பருக்கச்செய்வதோடு, தானும் நிரதிசயமான கல்யாண குணங்களாலும் விபவங்களாலும் பருத்து ஸகல வேதாந்த வேத்யமான பரப்பிரமஸ்வரூபமாய் விளங்குமவன் 506

ப்ரமஹவிவர்த்தனঃ=இப்படி விருத்தி யடைகின்ற பிரபஞ்சத்துக்கு ஆதிகாரணமான, தவம் முதலிய தருமங்களை விருத்தி பண்ணுமவன்.

ப்ரமஹவித்=பரப்பிரம்மத்துக்கு வாசகமாகையாலே பிரம்ம மெனப்படுகிற வேதத்தை முழுதும் அறிந்தவன் 507.

ப்ராமஹணঃ=அந்த வேதத்தில் அறியவேண்டிய விஷயங்களை வியவஸ்தை பண்ணுவதற்காகத் தான் அத்திரிவம்சத்திலும் மற்றும் அனேகப்பிராம்மண வம்சத்திலும் தத்தாத்திரேயாதிரூபப் பிராம்மணனாய் அவதரிப்பவன்.

ப்ரம்ஹீ=இப்படிப் பிரமாணப் பிரமேயரூபமாயுள்ள ஸகல வஸ்துக்களும் தனதாக உடையவன் 508.

ப்ரம்ஹஜ்ஞঃ=வேதங்களை அர்த்தபரியந்தம் ஸாக்ஷாத்கரிப்பவன் 509. ப்ராமஹணப்ரியঃ=வேதாதிகாரிகளான பிராமமணரிடத்தில் பிரீதிபண்ணுமவன் 510

---

506 బృహత్వాద్బృంహణత్వాచ్చ బ్రహ్మేతి పరికీర్త్యతే ॥

507 అనాదినిధనం బ్రహ్మన దేవా నర్షయో విదుః । ఏకస్తద్వేద భగవాన్ ధాతా నారాయణః స్వయమ్ ॥

508 సర్వం బ్రహ్మమయో హరిః ॥

509 వేదవిదేవ చాహమ్ ॥

510 ఘ్నన్తం శపన్తం పరుషం వదన్తం యో బ్రాహ్మణం న ప్రణమేద్యథార్హమ్ ॥

[ మహాక్రమో మహాకర్మా మహాతేజా మహోరగః । మహాక్రతు ]
మహాక్రమః - பெரிய படிகளுடையவன், మహాకర్మా - பெருஞ் செயலுடையவன், మహాతేజాః - மஹத்தான ஒளி பொருந்தியவன், మహోరగః - பெரியனான தான் உள்ளத்தில் செல்பவன், మహాక్రతుః - மஹத்தான ஆராதநமுற்றவன்,

(வி)(அவதாரிகை.) அநந்தரம் இப்படி உத்ஸாஹமடைந்தவர்கள் விஷயத்தில் அவனுக்குண்டான வாத்ஸல்யத்தின் அளவின்மை சொல்லப்படுகிறது:

மஹாக்ரமः=ஸர்வத்துக்கும் மேலாய் விளங்கும் தன்னையடையும்படி, ஸகலத்துக்கும் கீழாய் ஆழமான ஸம்ஸாரமென்னும் பாதாளத்திலிருந்து ஜீவர்களைக் கரையேற்றவேண்டி பெரியதான படியைக்கட்டி வைத்திருப்பவன்.

[என்றால்—தாயானவள் எப்படி ஸ்தநந்தயமான பிரஜைக்கு முதலில் முலைகுடுப்பது, அநந்தரம் பசுவின் பால்குடுப்பது அநந்தரம் ஆஹாரந்தருவது, அநந்தரம் போகங்களையிடுவது முதலிய க்ரமங்களைச் செய்கிறாளோ இப்படியே ஸர்வேச்வரன் ஸுக்ருதியான ஒருவனுக்கு முதலில் தன்னிடத்தில் த்வேஷத்தைப்போக்கி அநந்தரம் ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, பிறகு அநுவர்த்திக்கச்செய்து அதன்பின் ஞாநத்தையும் அதன்பின் பக்தியையும் அநந்தரம் விச்வாஸத்தையும் பிறப்பித்து இப்படி [511] படிப்படியாய் தனக்கு ஆள்ப்படுத்திக் கொள்ளுகிறானென்றபடி ]

மஹாகர்மா=பூச்சிப்புழுகுபோலிருக்கும் அற்பப்பிராணியையும் மஹத்தான தனது விபவத்தை அநுபவிக்கும்படி உயர்ந்த நிலையில்கொண்டுவைக்கிறபடியால அத்தியாச்சரியகரமான செயலை செய்பவன்.

மஹாதேஜாः=இப்படி தாமஸர்களுக்குண்டான அநாதியான அக்ஞாநத்தையும் போக்கும்படி மஹத்தான தேஜஸ் உடையவன்.

(அவதாரிகை.) அதாவதெப்படி?

மஹோரகः=மிகவும் பெரியனான தான் மிகவும் அற்பர்களையுங் கிட்டி அவர்கள் கரணங்களிலபுகுந்து அதிலும் அவர்மனதில் புகுந்து அவர்கள் அக்ஞாநத்தைப் போக்குமவன்[512].

மஹாக்ருதுः=மிகவும் சுலபமாயியற்றக்கூடிய ஆராதநத்தையுடையவன்[513].

(அ)மஹோரக:—ஸர்ப்பங்களுக்குள் வாசுகியென்னும் ஸாபபமானவன்.

[511] అభ్యాసయోగేన తతో మామిచ్ఛాప్తుం ధనంజయ ॥

[512] యోనపిత్తైర్న విభవైః నవాసోభిర్న భూషణైః । తోష్యతే హృదయే నైవ తుష్టమాసన్న పూజయేత్ ॥

[513] యత్కరోషి ॥

[మహాయజ్వా మహాయజ్ఞో మహాహవిః ॥ స్తవ్యః స్తవప్రియః]

మహాయజ్వా - பெரியயக்ஞம் செய்தவர்களைப்பெற்றவன், మహాయజ్ఞః - பெரியயக்ஞமுடையவன், మహాహవిః - மகத்தான ஹவிஸ்ஸை யுடையவன், స్తవ్యః - துதிக்கேற்றவன், స్తవప్రియః - துதியென்றால் உகப்பவன்,

(வி) மஹாயஜ்வா = தன்னை ஆராதிப்போர்கள் இதர ஆராதகர்களை விட சிறந்தவராதலால் மஹத்தான யாஜகர்களையுடையவன்[514].

மஹாயக்ஞ: = அபிகமநம், மதுபாக்கம் முதலான மஹாயக்ஞங்களுடையவன் [515]. மஹாஹவி: = ஹிம்ஸை முதலியவை யில்லாததாய் மிகவும் ஸாத்விகமான ஹவிஸ்ஸையுடையவன்[516] சுருதியிற்சொல்லுகிறபடியே [517]ஜீவாத்மாவாகிற மஹத்தான ஹவிஸ்ஸையுடையவனென்றுமாம்.

(அவதாரிகை.) இப்படி மாநஸ வியாபார காயிகவியாபாரங்களாலே ஆராதிக்குந் தன்மைசொல்லிற்று. இனிவாசிகவ்யாபாரத்தால் ஆராதிக்கும்படி சொல்லுகிறது.

ஸ்தவ்ய: — துதிசெய்தற்கேற்றவன்.

[இதற்குக்காரணம்-மிகவும் மங்களமாய் நித்தியமாய் நிரவதிகமாய் நிரவத்யமான குணங்கள் ஸ்வதஸ்ஸித்தமா யிருக்கப்பெற்று ஆயிரந்திருநாமங்கள் பூண்டிருக்கை. இப்படிக்கெல்லாமிருக்கிற நம்மிறைவனையன்றோ துதிக்கேற்றவன்? விபரீதகுணங்களான தேவதாந்தரங்களை எங்ஙனந் துதிக்கலாவது? இதை பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதியிற்காண்க. 518]

ஸ்தவப்ரிய: = எப்படியானாலும், எந்த பாஷையாலானாலும், எவனானாலும், தனக்குத் தேசுண்டாக்கினாலுமாம, இழுக்குண்டாக்கினுமாம், குணவிபரீதத்தைப் பண்ணிவைத்தாலுமென்கிற அபிமாநத்தோடு பண்ணப்படும் ஸ்தோத்திரமாய் தன் விஷயமாயிருந்ததாகில் அதைரொம்பவும் உகப்பவன். இந்தவிஷயம் கண்டாகர்ணன் விருத்தாந்தத்தில் ஸ்பஷ்டமாய்த் தெரியவருகிறது

[514] తేషామేకాన్తినః శ్రేష్ఠాస్తే చైవానన్యదేవతాః ॥

[515] యాః క్రియాః సంప్రయుక్తాస్స్యురేకాన్తగతబుద్ధిభిః । తాస్సర్వాశ్శిరసా దేవః ప్రతిగృహ్ణాతి వై స్వయమ్ ॥ నతత్రపశుఘాతోభూత్ ॥

[516] బ్రహ్మార్పణం బ్రహ్మహవిః ॥

[517] ఇదమహం మామమృతయోనౌ సూర్యే జ్యోతిషి జుహోమి ॥

[518] ఆదరేణయథాస్తౌతి ధనవన్తం ధనేచ్ఛయా । తథా చేద్విశ్వకర్తారం కో న ముచ్యేత బన్ధనాత్ ॥

[స్తోత్రం స్తుతస్స్తోతా రణప్రియః ॥ పూర్ణః పూరయితా పుణ్యః]

స్తోత్రమ్ - துதியை நிறைவேற்றுமவன், స్తుతః - துதிக்கப்பட்டவன், స్తోతా - துதிப்பவன், రణప్రియః - போருகந்தவன், పూర్ణః - குறைவற்றவன், పూరయితా - குறைதீர்ப்பவன், పుణ్యః - பரிசுத்தமாக்குமவன்,

(வி) ஸ்தோத்திரம் = தனது ஸ்தோத்திரமானதும் அதைத்தான் அநுக்கிரஹித்துத் தலைக்கட்டிக்கொள்பவன் இவ்விஷயம் துருவன செய்த ஸ்தோத்திரத்தில் ஸ்பஷ்டம்.

ஸ்துதஃ = ஆயிரம் படமுடைய ஆதிசேஷனாலும் வேதரூபியான கெருடனாலும் மற்றுமுண்டான ஸித்தர்களாலும் பிரம்மாதிகளாலும் நம்மாலும் யாவராலும் தாரதம்மிய மின்றி அவ்வற்றகாலங்களில் அவரவர இஷ்டஸித்திக்காக ஸ்தோத்திரம் செய்யப்பட்டவன் 519.

ஸ்தோதா = தன்னைத் துதிப்பவனைத் துதிக்கும் சீலன் 520 இவ்விஷயம் கைலாஸ யாத்திரையில் விளங்கும்.

ரணப்ரியஃ = ஸ்ரீராமாயணம், ஸ்ரீமஹாபாரதம் முதலானவைகளால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட யுத்தமுதலிய சேஷ்டமான திவ்யசேஷ்டிதங்கள் செய்தவன்.

[தனக்கு அன்பரானவர்கள் உகக்கவேண்டுமென்கைக்காக யுத்தமேயாகிலும்செய்யுமவனன்றோ? 521]

(அவதாரிகை) அதிக சிலவுசெய்து அதிகமாய் ஆயாஸப்பட்டு ஸத்கரிக்கவேண்டாதே இப்படி ஸ்தோத்திரமாத்திரத்தால் இவன் ஸாத்தியனாகைக்குக் காரணமென் என்னில்:—

பூர்ணஃ = ஸகல அபீஷ்டங்களுமுண்டாயிருக்கப் பெற்றவன்.

பூரயிதா = இப்படி பூர்ணனாயிருக்கச் செய்தேயும் குறைவாளனைப்போல் ஸ்தோத்திரத்தை அபேக்ஷித்தவனாய் ஸ்தோத்திரிப்பவனது மநோரதத்தைப்பூர்த்திசெய்விக்குமசீலமுடையவன்.

புண்யஃ = பாபிகளைக்கூட புண்ணியத்துக் கேறும்படி பரிசுத்தமாக்குமவன்.

519 అశేష దేవేశ నరేశ్వరేశ్వరైస్సదా స్తుతం యచ్చరితం మహాద్భుతమ్ ॥

520 యం స్తువన్ స్తవ్యతా మేతి వన్ద్యమానశ్చ వన్ద్యతామ్ ॥

521 తతస్స [illegible] ... రావణమాహవే ॥

[పుణ్యకీర్తిరనామయః ॥ మనోజవస్తీర్థకరో వసురేతా]

పుణ్యకీర్తిః - பரிசுத்திகரமானகீர்த்தியுடையவன், అనామయః - நோய்க்கு விரோதி, మనోజవః - மனம்போல வேகசாலி, తీర్థకరః - தீர்த்தங்களைச் செய்தவன், వసురేతాః - திரணவேகாரணமாகப் பிறந்தவன்,

---

(வி.) புண்யகீர்த்தி:= தன்னுடைய ஸங்கீர்த்தநமும் அப்படியே பரிசுத்திகரமாயிருக்கப்பெற்றவன [522] இதைப்பற்றியேயன்றோ அவன்விஷயமான ஸூக்திகளைக்கூடப் பரிசுத்திகரமென்கிறது?

அநாமய:= (இப்படி தன் ஸம்பந்தமாகிற திவ்ய ஔஷதங்கொண்டு ஸம்ஸாரமென்கிற மஹத்தான நோயைப்போக்கியருளுகையாலே நோய்க்கு விரோதியானவன். எம்பெருமானை அநுபவிக்கவொட்டாமல் சேதனனுடைய சக்தியைக்கெடுக்கையாலே ஸம்ஸாரத்தை நோயாகவன்றோ சொல்லுகிறது?

மநோஜவ:= கீழ்ச்சொன்னவைகளைச் சீக்கிரமாய்ச் செய்கையாலே மனதைக்காட்டிலும் வேகமானவன் [523].

தீர்த்தகர:= தன்னைப்போலவே ஸ்மரித்தாலும் கீர்த்தநம்செய்தாலும் அவ்வளவுமாத்திரத்தால் ஸகலத்தையும் பரிசுத்தியாக்கச்செய்கிற கங்கை, புஷ்கரம் முதலிய தீர்த்தங்களுக்கும் பரிசுத்தி ஹேதுபூதன். சுருதிஸ்மிருதி முதலிய நல்லாமயங்களைப் பிரவர்த்திப்பிக்கிறவனென்றுமாம் [524]; ஸமுத்திரம்போல் அகாதமாய்ப் பகவரியனாயிருக்கிற தன்னிடத்தில பிரவேசிப்பதற்கேற்ற துறைகளைக்கட்டினவனென்றுமாம்.

(அவதாரிகை) அதில் கிருஷ்ணாவதாரம் சொல்லுகிறது.

வஸுரேதா:= திவ்யதேஜஸ்ஸை உபாதானகாரணமாய் அவதரித்தவன். வஸுவென்று தேஜஸ்ஸைச் சொல்லுகிறது [525].

---

(அ) தீர்த்தகர:— சதுர்த்தசவித்தைகளையும் மற்றும்பாஹ்யவித்தைகளையும் படைத்தவன்; ஹயக்கிரீவரூபியாய் மதுகைடபர்களை நிரஸித்து ஸ்ருஷ்டிகாலத்தில பிரம்மாவின்பொருட்டு ஸகல வேதங்களையும் மற்றும் ஸ்மிருதியாதிகளையும் உபதேசித்து, அசுரர்கள் அழிவதற்காக மற்றும்வேதவிருத்த சாஸ்திரங்களையும் உபதேசித்தானென்று புராணக்ஞர்கள்சொல்வார்கள்.

---

[522] నామసంకీర్తనంభక్త్యావిలాపనమనుత్తమమ్। మైత్రేయాశేషపాపానాం ధాతూనామివపావకః ॥

[523] సప్తజన్మకృతంపాపంస్వల్పంవాయదివాబహు । విష్ణోరాలయవిన్యాసప్రారమ్భాదేవనశ్యతి ॥

[524] యోగో జ్ఞానంతథాసాఙ్ఖ్యమ్ ॥

[525] ఉజ్జహారాత్మనః కేశౌ సితకృష్ణౌ మహామునే ॥

[వసుప్రదః । వసుప్రదో వాసుదేవో వసుర్వసుమనా హవిః ॥

వసుప్రదః - ஸித்தியைத் தந்தவன், వసుప్రదః - தேஜஸ்ஸைத் தந்தவன், వాసుదేవః - வசுதேவன் மைந்தன், వసుః - வஸிப்பவன், వసుమనాః - வசுதேவரிடத்தில் மனமை வைத்தவன், హవిః - கொண்டுபோகப்பெற்றவன்,

(வி.) வஸுப்ரதஃ=பரமஸித்தியான தன்னை தேவகீ வஸுதேவர்களுக்குப் புத்திரனாய்த் தந்தவன். வஸுப்ரதஃ=அவர்களுக்கே ஜகத்பிதாவான தனக்கும் பிதாவாகும்படியான மஹாதேஜஸ்ஸைத் தந்தவன்.

வாஸுதேவஃ=வசுதேவன் மைந்தன்.

ஸப்தமசதகம் — ஸம்பூர்ணம்.

ஸ்ரீ:

## அஷ்டமசதகம்.

(அவதாரிகை.) இந்த அவதாரத்துக்கு நிதானமான க்ஷீரஸாகரவாஸத்தைச் சொல்லுகிறது:—

வஸுஃ=க்ஷீரஸாகரத்தில் வஸிப்பவன்[526]. வஸுமநாஃ=தனக்குப்பிராணபதமான லக்ஷ்மியின் அவதாரஸ்தலமான க்ஷீரஸாகரத்தில் இருக்கச்செய்தேயும் வசுதேவனிடத்தில் திருவுள்ளமுடைத்தாயிருந்தவன்.

[தேவதத்தனை தத்தனென்பதுபோலும் ஸத்யபாமையைப் பாமையென்பதுபோலும் வஸுதேவனை வஸுவென்கிறது என்று மஹாபாஷ்யகாரர் வார்த்தையாகையால் இங்கே வஸு என்று வசுதேவனைச் சொல்லுகிறதென்றுணர்க.]

ஹவிஃ=(இவன் இப்படி தேவகீ வசுதேவர்களிடத்தில் வாஸம்பண்ண ஆசைப்பட்டிருக்கச் செய்தேயும், அவர்கள் இவனுக்குக் கம்ஸனால் என்ன பயமுண்டாகுமோவென்று இவனிடத்தில் உண்டான ப்ரீதிபயத்தாலே இவன் ஆண்மையைக் கணிசிக்கமாட்டாமல் யசோதா நந்தர்களிடம் கொண்டுபோகப்பெற்றவன்.

(அ) வஸுப்ரதஃ=ஸ்ரேஷ்டமான மோக்ஷத்தைத் தருமவன்.

526 ఏష నారాయణః శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః । నాగపర్యంకముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్ ॥

సద్గతిస్సత్కృతిస్సత్తా సద్భూతిస్సత్పరాయణః శూరసేనో యదుశ్రేష్ఠః

ஸத்கதி: - ஸாதுக்களுக்கு கதியானவன், ஸத்க்ருதி: - நற்செய்கையுடையவன், ஸத்தா - ஸத்தையானவன்; ஸத்பூதி: - ஸாதுக்களுக்கு ஐச்வரியமானவன், ஸத்பராயணம் - ஸாதுக்களே தனக்குப்பரமகதியானவன், சூரஸேந: - சூரரைச் சேனையாகவுடையவன், யதுச்ரேஷ்ட: - யதுகுலதிலகன்,

(வி.) ஸத்கதி:= அப்ராக்ருதமாம்பொழுது அசுரர்செய்த ஆபத்தைப் போக்குகையாலே வசுதேவாதி ஸத்துக்களுக்குக் கதியானவன்[527].

ஸத்க்ருதி:= நற்செய்கையுடையவன்.

[என்றால் — தயிர் வெண்ணெய்களைக் களவுகண்டும் உரலில் கட்டுண்டும் ராஸக்கிரீடை முதலிய விளையாட்டுகள் ஆடியும், இவற்றையெல்லாம் கண்டும் கேட்டும் போருகிற பிராணிகளினுடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குகையாலே நல்லசெய்கைகள் செய்தவனென்றபடி[528].]

ஸத்தா= ஸத்துக்களுடைய ஸத்தையும் தானேயா யிருப்பவன், அவனில்லாதபோது ஒன்றுந்தரிபாதன்றோ?[529].

ஸத்பூதி:= ஸத்துக்களுக்கு புத்திரன், மித்திரன், பந்து-தாதன், ஸாரதி முதலிய ஸகலவிதமும் தானேயானவன்[530].

ஸத்பராயணம்= ஸத்துக்களுக்குப் பரமகதியானவன்[531].

ஸதபராயண:= என்று பாடமானால் ஸாதுக்களை தனக்குக் கதியாக நினைத்தவன்[532].

சூரஸேந:= யாதவபாண்டவாதிசூரர்களைப் புவியினது பாரத்தை யொழிப்பதற்கு ஸஹாயமாய்க் கொண்டவன்.

யதுச்ரேஷ்ட:= யாதவ வம்சத்தை உத்தரிக்கத் தோன்றியவன்[533]

(அ.) ஸத்பூதி:— ஸஜாதீய விஜாதீய பேதமின்றிக்கே கேவல ஸத்தாமாத்ரமாயிருக்கச்செய்தே நாநாப்பிரகாரமாய் தோற்றமவன்

சூரஸேந:— ஹநுமான் முதலான சூரரை ஸேநாவீரராயுடையவன்.

527 సన్తస్సన్తోషమదనైః ప్రశమం చ గణ్డనారుతః ॥ 528 జన్తుకర్మ చ మేదిన్యామ్ ॥

529 నతదస్తి వినా యత్ స్యాత్ మయా ॥

530 కృష్ణాశ్రయాః కృష్ణబలాః కృష్ణనాథాశ్చ పాణ్డవాః కృష్ణః పరాయణం తేషామ్ ॥

531 మామేవైష్యసి ॥ 532 మమ ప్రాణాహి పాణ్డవాః ॥

533 అయం స కథ్యతే ప్రాజ్ఞైః పురాణార్థవిశారదైః । గోపాలో యాదవం వంశం మగ్నమభ్యుద్ధరిష్యతి ॥

[దర్పదోదృప్తోదుర్ధరోథాపరాజితః ॥]

దర్పదః - கொழுப்பைத்தந்தவன், అదృప్తః-மதமற்றவன், దుర్ధరః-தரிக்கமுடியாதவன், అపరాజితః - பிறரால்ஜயிக்கப்படாதவர்களையுடையவன்,

(வி.) தர்பதః—சத்துருககளைப்போக்கி, ஒருவராலும ஜயிக்கமுடியாத த்வாரகாபுரியை நிருமித்தும், சங்கநிதி, பத்மநிதி, தேவபாரிஜாதம், தேவஸபை முதலியவைகளைப் பறித்துத் தந்ததினால் நிரப்பராளான யாதவாளுக்கு மதுபாநாதிகளைப் பண்ணுவித்து கொழுப்புண்டாக்கினவன்.

அத்ருப்தః—அப்படியிருக்கச்செய்தேயும் தான் மதமற்றிருப்பவன்[539]; அதவா "திருப்தః" யசோதைப் பிராட்டியினது லாலநாதிகளாலே மதித்துத்திரிபவனென்றுமாம.

துர்தரః—பாலக்கிரீடைகள் செய்யுமிடத்து மதித்தயானைக்குட்டிபோல் யசோதாநந்த கோபர்களால் தரிக்கப்போகாத சேஷ்டை செய்பவன்; அதவாः-துராத்மாக்களால் கிரகிக்கமுடியாதவன்.[540]

அபராஜிதः—பாரதயுத்தத்தில் வேறு யாதொருபரிகரமுமின்றி கேவலம் தன்னை ஸஹாயமாய்க்கொண்டமாத்திரத்தில், பகைவர்களால் ஜயிக்கப்போகாமல் விளங்கின பாண்டவாளை யுடையவன்[541]. பீஷ்மாதிகளும் இப்படியேசொன்னார்கள்[542]. ஆயுர்வேதத்தில் சரகஸம்ஹிதையில் இப்படி சொல்லுகிறது[543]. இன்னும்வைதரண ஸம்ஹிதையில் விஷத்தைப்போக்கும்மந்திரத்தின்பிரபாவம்சொல்லுமிடத்தில்இவ்வர்த்தம்சொல்லுகிறது[544].

[539] ఏవంవిధాని కర్మాణి కృత్వా గరుడవాహనః । నవిస్మయముపాగచ్ఛత్ పారమేష్ఠ్యేన తేజసా ॥

[540] దుర్గ్రాహః పాణినా వాయుః దుస్స్పర్శః పాణినా శశీ । దుర్ధరా పృథివీ మూర్ధ్నా దుర్గ్రాహః కేశవో బలాత్ ॥

[541] యస్య త్వం పురుషవ్యాఘ్ర సారథ్యముపజగ్మివాన్ । ధ్రువ ఏవ జయస్తస్య న తస్యాస్తి పరాజయః ॥

[542] శక్తోऽహం ధనుషైకేన నిహన్తుం సర్వపాణ్డవాన్ । యద్యేషాం న భవేద్గోప్తా విష్ణుః కారణపూరుషః ॥

[543] యథాహం నాభిజానామి వాసుదేవే పరాజయమ్ । మాతుశ్చ పాణిగ్రహణం సముద్రస్య చ శోషణమ్ । ఏతేన సత్యవాక్యేన సిధ్యతామగదో హ్యయమ్ ॥

[544] రత్నాకర ఇవాక్షోభ్యో హిమవానివ చాచలః ॥ జాతవేదా ఇవాధృష్యో నారాయణ ఇవాజయః ॥

[విశ్వమూర్తిర్మహామూర్తిర్దీప్తమూర్తిః]
[అమూర్తిమాన్ । అనేకమూర్తిః]

విశ్వమూర్తిః - ஸகலமுந் தனது சரீரமாயிருப்பவன், మహామూర్తిః - பெரியசரீரமுடையவன், దీప్తమూర్తిః - பிரகாசமானதெல்லாம் தன்மூர்த்தியானவன், అమూర్తిమాన్ - சரீரமில்லாத வாகளையுடையவன், అనేకమూర్తిః - அனேகம்சரீரங்களெடுத்தவன்,

(வி.) (அவதாரிகை.) அதெப்படி துர்பலரான கௌரவர்கள் பலஹீனரான பாண்டவாளை ஜயிக்காம லிருக்கக்கூடுமென்னில்—ஸமஸ்த பூதங்களும் எம்பெருமானுக்குச் சரீரமாகையால் அதில், தனக்கு இஷ்டமான பாண்டவாள் பலஹீனராலும் அவாளை ஜயிப்பதில தனக்கிஷ்ட மில்லாமையாலே தனக்கிஷ்ட மில்லாத விஷயத்தில் தன் சரீரம் பிரவர்த்திக்கமாட்டாதாகையால் ஜயிக்கப்படவில்லை யென்கிற இவ்வர்த்தத்தை யுட்கொண்டு மேலேசொல்லுகிறது.

விச்வமூர்த்திः—ஸகலத்தையும் தனக்குச் சரீரமாயுடையவன்[545].

மஹாமூர்த்திः—விசுவரூபத்தைக் காட்டினபோது ஜகமெல்லாம் ஆசிரயிக்கும்படி பெரிதாய் விளங்கின திருமேனியுடையவன்[546].

தீப்தமூர்த்திः-பிரபஞ்சத்தில் ஏதேனுமொன்று ஏதேனுமொருகுணத்தால் பிரகாசித்ததாகில் அதெல்லாம் தனது விசேஷமூர்த்தியாயுடையவன்[547]. அமூர்த்திமாந்—அவ்யக்தம் புருஷன்முதலான மூர்த்திஹீனங்களையும் தனது சொத்தாக உடையவன்[548].

[இங்கே முன்னும் பின்னும் பகவானுக்கு மூர்த்தியிருப்பதாகச் சொல்லுகையாலே இந்த மூர்த்தி நிஷேதபரமாக வியாக்யானம் செய்யத்தகாது; மேலும் அமூர்த்திः என்றாலே போதுமாயிருக்கையாலே அமூர்த்திமாந் என்றதும் அப்பொழுது சேராது; ஆகையாலே இங்கேசொன்னதே யுக்தம்.]

அநேகமூர்த்திः—கிருஷ்ணனாய் அவதரித்திருக்கச்செய்தேயும் வாசுதேவாதி வியூஹமூர்த்திகள் நான்கையும்விடாமையாலும், இன்னும் இவ்வவதாரத்தில் அனேகம் மூர்த்திகளைப்பரிக்கிரஹிக்கையாலும் அநேகமூர்த்தி[549].

(அ.) அமூர்த்திமாந்—கருமமடியாகவந்த சரீரமில்லாதவன்.

545 అహమాత్మా గుడాకేశ సర్వభూతాశయస్థితః ॥

546 ఇహైకస్థం జగత్ కృత్స్నం పశ్యాద్య సచరాచరమ్ । మమ దేహే గుడాకేశ యచ్చాన్యద్ద్రష్టుమిచ్ఛసి ॥ 547 యద్యద్విభూతిమత్సత్త్వం శ్రీమదూర్జితమేవ వా ॥

548 భూమిరాపోఽనలో వాయుః ॥ అపరేయమితస్త్వన్యాం ప్రకృతిమ్ ॥ యస్యావ్యక్తం శరీరమ్ ॥ యస్యాత్మా శరీరమ్ ॥

549 షోడశ స్త్రీసహస్రాణి శతమేకం తతోఽధికమ్ । తావన్తి చక్రే రూపాణి భగవాన్ దేవకీసుతః ॥

[అవ్యక్తశ్శతమూర్తిశ్శతాననః ॥ ఏకో నైకస్సవః]

అవ్యక్తః-மறைந்திருப்பவன், శతమూర్తిః - நூறுசரீரமுடைய வன், శతాననః-நூறுதிருமுக மண்டலங்களுடையவன், ఏకః-ஒருவன், నైకః-அநேகன், సః முடிப்பவன், వః-வஸிப்பவன்,

(வி.) அவ்யக்தஃ=இதைத் தான்மனுஷியனாயிருக்கின்றமைகொண்டு மறைப்பவன்[550]. சதமூர்த்திஃ=தன்னைக்காண ஆசைப்பட்ட அர்ச்சுனனுக்கு வியக்தமாய் தனது விசுவரூபத்தைக்காட்டினவன். சதாநநஃ=அநேகம் முகஙகள்கொண்ட ரூபந்தரித்தவன[551]. ஏகஃ=கீழ்ச்சொன்ன மஹிமைகளுடன்கூடி தன்னைப்போ லொருவனில்லாமையால் இரண்டுமுதலிய எண்ணிக்கையி லகப்படாமல் ஒருவனாயிருப்பவன்.

[இரண்டுப் பிராம்மணர், மூன்று க்ஷத்திரியர் என்கிறவிடத்தில், பிராம்மணடம் முதலியஜாதிதர்மம் ஒத்திருக்கின்றமை கொண்டு இரண்டு மூன்று என்று எண்ணப்படுவதுபோல பகவானுக்குண்டான ஸர்வேசுவரத்வாதி தர்மஙகள் மற்றொருவ்யக்தியி லுண்டாகில் எண்ணலாகும்; அதில்லாமையாலே ஏகமென்று அத்வைதமாகச் சொல்லுகிறது. பகவானோடுஸமான மான கக்ஷியில் சொல்லும்படி மற்றொருவஸ்து இல்லையன்றோ?[552]]

(அவதாரிகை) இஙகே ஏகமென்றது, ஈசுவரனைத்தவிர வேறொன்றுங் கிடையாமையால அத்தைப்பற்றச் சொல்லுகிற தென்றும், எல்லாம் அவனுடைய விகாரமாகையாலே அத்தைப்பற்றச் சொல்லுகிறதென்றும் சொல்வது அநுசிதம்-மற்றப்படி கீழ்ச்சொன்னபடி இவனைப்போன்ற மஹிமைசாலி மற்றொருவனும் கிடையாதென்பதே ஸித்தாந்த மென்கிறதுயேல்;—

நைகஃ=தனக்கு விபூதியாய்க்கொண்டு விஜாதீயமாயிருக்கிற ஸகல பதார்த்தங்களையு முடையனாய் அதினால் அநேகமானவன்[553].

ஸஃ=இப்படி யிந்த ஸித்தாந்தத்தை ஆபால வ்ருத்தமாய் நிச்சயித்துக்கொள்ளச் செய்பவன்.

வ:=பிரஸித்தமாய் ஸகல பூதங்களிலும் வஸிப்பவன்[554].

(அ) ஏகஃ=உண்மையில் ஸஜாதீயமாயாவது விஜாதீயமாயாவது தன்னை விட வேறு ஒன்றுமில்லாமையால் ஒருவன்

நைகஃ=மாயையால் அநேகரூபந் தரிக்கையாலே அநேகன்.

550 నాహం ప్రకాశస్సర్వస్య ॥ నాహం వేదైర్న తపసా ॥

551 పశ్య మే పార్థ రూపాణి శతశోథ సహస్రశః ॥

552 ఏక ఇద్రాజా జగతో బభూవ ॥ న తస్య ప్రతిమాస్తి ॥

553 నాన్తోస్తి మమ దివ్యానాం విభూతీనాం పరన్తప ॥

554 వసన్తి త్వత్ర భూతాని భూతాత్మన్యఖిలాత్మని । స వభూతేష్వశేషేషు వకారార్థస్తతో మునే ॥

[కఃకింయత్తత్పదమనుత్తమం। లోకబంధుర్లోకనాథో మాధవో]

కః-பிரகாசிப்பவன், కిమ్-கேட்கப்படுமவன், యత్-யத்தினம்செய்பவன், తత్-செய்பவன், పదమనుత్తమమ్-மேலானபதவியானவன், లోకబన్ధుః-லோகத்துக்கெல்லாம பந்துவானவன், లోకనాథః-லோகஸ்வாமி, మాధవః-லக்ஷ்மீவல்லபன்,

---

(வி) கஃ=மலினபதார்த்தங்களில் தான் வஸித்தபோதிலும் பிரகாசித்தபடியே யிருப்பவன்.

கிம்=தத்வத்தை யறிய விரும்பியவர்களாலே நிருபாதிகமாய்க்கேட்கப்படுமவன்[555]. யத்=அவாளை ரக்ஷிப்பதற்காக யத்தினம் செய்பவன்[556]. தத்=அவர்களுக்கு ஸகல ஞானபக்திகளையும் உண்டுபண்ணுமவன். ஆகையாலன்றோ ஞானப்ரதானார்த்தமாக காயத்ரியை ஜபிக்கிறது[557].

பதம் அநுத்தமம்=அவர்களுக்கு பரமப்ராப்யமானவன்.

(அவதாரிகை.) இப்படி தாரதம்மிய மில்லாமல் யாவரையும் அநுக்கிரஹிப்பதற்குக் காரணமான ஸம்பந்தம் சொல்லுகிறது.

லோகபந்து:=லோகங்களுக்கெல்லாம் தான் ஸ்வஜநமாயிருப்பவன்[558].

(அ-கை.) லோகபந்துவாகைக்கு அஸாதாரண ஸம்பந்தஞ்சொல்லுகிறது.

லோகநாத:—லோகத்துக்கெல்லாம் நாதன்.

அ-கை.) இவன் லோகத்துக்குப் பந்துவாம்பொழுது லக்ஷ்மீஸஹிதனுய்க் (கொண்டு மாதாபிதாவா யிருக்கையாலே அத்தைத் தெரிவிக்கிறது:—

மாதவ:=லக்ஷ்மீவல்லபன். அதவா-மதுவென்னும் பெயர்கொண்ட யாதவகுலத்தில் பிறந்தவனென்றுமாம்.

(அவதாரிகை.) கீழ்ச்சொன்ன எம்பெருமானுடைய ஸ்வாமித்வத்துக்கிசைந்து அதில் உத்ஸாகத்தோ டிருக்கும் பக்தாளிடத்தில் அவன் இருக்கும் விசேஷாகாரம் சொல்லுகிறது.

---

(அ.) கஃ=ஸுகரூபன். கிம்—ஸகல புருஷார்த்த ரூபனுகையாலே விசாரணைக்குரியவன். யத்—ஸ்வதஸ்ஸிதமானவற்றைச் சொல்லும் சொல்லால் சப்திக்கக்கூடியவன்.

---

555 సోఽన్వేష్టవ్యః సవిజిజ్ఞాసితవ్యః ॥

556 కృష్ణకృష్ణేతి కృష్ణేతి యో మాం స్మరతి నిత్యశః। జలంభిత్వా యథా పద్మం నరకాదుద్ధరామ్యహమ్ ॥ అహం స్మరామి మద్భక్తం నయామి పరమాం గతిమ్ ॥

557 తత్సవితుర్వరేణియమ్ ॥ ఓమ్ తత్ సత్ ఇతి నిర్దేశః ॥

558 మాతా పితా భ్రాతా నివాసశ్శరణం సుహృత్ గతిర్నారాయణః ॥

[భక్తవత్సలః॥ సువర్ణవర్ణో హేమాంగో వరాంగశ్చందనాంగదీ।]
[వీరహా విషమశ్శూన్యో ఘృతాశీ]

భక్తవత్సలః-பக்தாளிடத்தில் ஆவல்கொண்டவன், సువర్ణవర్ణః-நிறமுடைய செம்பொன்நிறத்தவன், హేమాఙ్గః - சிலாக்கியமானதிருமேனியுடையவன், వరాఙ్గః-உத்கிருஷ்ட அங்கமுடையவன், చన్దనాఙ్గదీ-உகப்பிக்கும்தோள்வளையுடையவன், వీరహా-வீரரைச்செகுத்தவன், విషమః-வித்தியாஸமானவன், శూన్యః-அற்றவன், ఘృతాశీః-நெயயில் ஆசையுடையவன்,

---

(வி.) பக்தவத்ஸலஃ=இப்படி தனது தாஸ்யத்தை ஆசைப்பட்ட பக்தாளை க்கிடைக்கப் பெற்ருளுகில் தனக்கு மற்ருென்றிருப்பதாக நினையாமல் எலலாவற்றையும மறக்கும்படியானவன்.

ஸுவர்ணவர்ணஃ=கீழ்ச்சொன்ன குணத்துக்கேற்க, பசும்பொன்னுரைத்ததுபோல் பளபளாயமான திருநிறமுடையவன்[559].

ஹேமாங்கஃ=பொன்மேனியன்.

[என்ருல்-கீழ்ச்சொன்ன நிறத்துக் காதாரமாய் நித்தியமாய் சுத்த ஸத்வமயமாய் விளங்கும் திருமேனியுடையவ னென்றபடி.]

வராங்கஃ=இப்படி உபநிஷத்தில் சொல்லப்பட்டதும், தேவப்பிராட்டி மிகவும் உவக்கும்படியானதும் திவ்யசின்னங்களை யெல்லாம் மறைத்துக்கொண்டிருப்பதுமான திவ்யமங்கள விக்கிரஹத்தைப் பரிக்கிரஹித்தவன்[560]. சந்தநாங்கதீ=தோள்வளைமுதலிய திவ்யாபரணங்களணிந்தவன்.

வீரஹா=கேவலம் பேதைக்குழவியா யிருக்கச்செய்தேயும் பூதநாசகடார்ஜ்ஜுநாதிகளான தேவசத்துருக்களை வேர்பிடுங்கலாக ஹதம்பண்ணினவன். விஷமஃ—(இப்படி நல்ல அபிப்பிராயமுடையோரும் கெட்டஅபிப்பிராயமுடையோருமான பிராணிகளுக்கும் முறையே க்ஷேமத்தையும் பயத்தையும் உண்டாக்கும்படி வித்தியாஸமாய் நடக்கையாலே) வைஷம்யமுடையவன்.

சூந்யஃ—மனுஷியனுய் அவதரித்திருக்கச் செய்தேயும் யாதொருதோஷமுமில்லாமல் விளங்குமவன். க்ருதாசீஃ—தனது திருக்கல்யாண குணங்களாலே ஜகத்தை வாழ்விப்பதில் திருவுள்ளமுடையவன். அல்லது ஆயர்பாடியிலுள்ள தயிர் பால் முதலியவைகளில் ஆசைகொண்டவன்.

---

(அ.) சூந்யஃ=யாதொரு விசேஷமுமில்லாமையாலே சூந்யமென்னும்படி இருப்பவன். க்ருதாசீஃ=பிரார்த்திக்கவேண்டும் விஷயமில்லாதவன்.

---

[559] యదా పశ్యః పశ్యతే రుక్మవర్ణమ్ ॥ రుక్మాభం స్వప్నధీగమ్యమ్ ॥

[560] ఫుల్లేన్దీవరపత్రాభం చతుర్బాహుం సరీక్ష్యతమ్ । శ్రీవత్సవక్షసంజాతం తుష్టావానకదున్దుభిః ॥

[అచలశ్చలః ॥ అమానీమానదోమాన్యో]

[లోకస్వామీత్రిలోకసుధృత్ । మేధామేధజో]

అచలః- அசைக்கமுடியாதவன், చలః-சலிப்பவன், అమానీ அபி மானமற்றவன், మానదః -வெகுமதிதந்தவன், మాన్యః - வெகுமதிக் கப்படுமவன், లోకస్వామీ -லோகநாதன், త్రిలోకధృత్ - மூன்று லோகத்தையும்தரிப்பவன், సుమేధాః - நல்லமதிப்புடையவன், మేధజః-வேள்வியில்பிறந்தவன்,

---

(வி.) அசல:--துரியோதநன் முதலிய துராத்மாக்களாலே சலிப்பிக்கமுடியாதவன். . சல:—தன்னைச் சரணடைந்த பாண்டவாதிகளின் நிமித்தமாகத் தனது ஸத்திய ஸங்கல்பத்தையுங்கைவிடுமவன்.

[இவந்தான், பாண்டவ ரக்ஷணார்த்தமாகப் பாரதயுத்தத்தில் புகுந்து பீஷ்மர்முன்னே தான் ஆயுதமெடுப்பதில்லையென்று பிரதிக்ஞைபண்ணியிருக்கச்செய்தேயும், அர்ச்சுநன்கை சளைக்கக்கண்டு உடனே சக்கிராயுதங்கொண்டு தன் பிரதிக்ஞையைக் கொலைத்துக்கொண்டானன்றோ561.]

அமானீ—பக்தாள் விஷயத்தில் அஹங்காரமற்றிருப்பவன் ஆகவேயன்றோ தூதுசெல்வதில் சிறிதும் வெட்கமின்றி ப்ரவேசித்தான்?

மாநத:—அர்ச்சுனனுக்கு 'ஸாரதி' என்கிற பஹுமானத்தையும், உக்கிரஸேந மஹாராஜனுக்கும் தர்மபுத்திரருக்கும் ஸார்வபௌமன் என்கிற பஹுமானத்தையு மளித்தவன். மாந்ய:—அவராலுக்காட்பட்டிருக்கையே தனக்கு பஹுமானமாக நினைத்தவன்.

[இப்படியேயன்றோ இவன் வெகுமதிக்கப்பட்டான்? 562]

(அ-கை) இப்படிப்பட்ட காரியங்கள் செய்தவந்தானாரென்னில்:

லோகஸ்வாமீ—ஸகல லோகநாயகன். இப்படி மிகவும் உந்நதமாய் விளங்குமவன் எப்படி அதிநீசாளுடன் சேர்ந்தானென்றால்:—

த்ரிலோகத்ருக்—மூவுலகத்தையும் தரிப்பதும் போஷிப்பதும் தானாயிருப்பவன்; ஆகையாலென்றபடி.

ஸுமேதா:—தன்னை யாராதிப்பவாளிடத்தில் சோபநமான திருவுள்ளமுடையவன். மேதஜ:—(ஆகையாலே தேவகிப்பிராட்டி புத்திரன் வேண்டுமென்று நோர்த்த விரதமென்கிற) யக்ஞத்தில பிறந்தவன்563.

---

561 తమాత్తచక్రం ప్రణదన్తమచ్చైః క్రుద్ధం మహేన్ద్రావరజం సమీక్ష్య । సర్వాణి భూతాని భృశం వినేదుః క్షయం కురూణామితి చిన్తయిత్వా ॥

562 న సారథే స్సాత్వతకౌరవాణాం క్రుద్ధస్య ముచ్యేత రణేద్య కశ్చిత్ ॥

563 స్తుతో హం యత్త్వయా పూర్వం పుత్రార్థిన్యా తదద్య తే । సఫలం దేవి సఞ్జాతం జాతో హం యత్తవోదరాత్ ॥

[ధన్యస్సత్యమేధా ధరాధరః । తేజోవృషో ద్యుతిధరస్సర్వశస్త్ర]
[భృతాంవరః । ప్రగ్రహో నిగ్రహో వ్యగ్రః నైకశృంగో]

ధన్యః - செல்வன் సత్యమేధాః - நன்மதியன், ధరాధరః-மலையை த்தரிப்பவன், తేజోవృషః - காந்தியை வருஷிப்பவன், ద్యుతిధరః - காந்தியைத்தரிப்பவன், సర్వశస్త్రభృతాంవరః - ஸகல ஆயுதபாணிகளிலும்சிரேஷ்டமானவன், ప్రగ్రహః - கடிவாளமிடுமவன், నిగ్రహః-நிக்கிரஹிப்பவன், వ్యగ్రః-விரைபவன், నైకశృంగః-பலகொம்புகளுடையவன்,

(வி.) தந்ய:=அவளிடத்தில் பிறந்தமையென்கிற தனத்தைப்பெறுகையாலே தந்யனானவன்[564]. ஸத்யமேதா:=இடையரிடத்திலும் வஸுதேவாதிகளிடத்திலும், மேலுக்கு நடநம்செய்யாமையால் தன்னை ஸத்யமாய் அவர்களுடன் ஒரு கோர்வையாக நினைத்திருந்தவன். இவன்தான் ஆயர்களைப்பார்த்து இங்ஙனம் அருளிச்செய்தானன்றோ? [565]

தராதர:=கோவர்த்தநமென்னும் மலையைத்தரித்தவன்[566].

தேஜோவ்ருஷ:=ஸுஹ்ருத்துக்களைப் பரிபாலநம் பண்ணுவதென்கிற மஹத்தான தேஜஸ்ஸை வர்ஷிப்பவன். த்யுதிதர:=அதினால்தான் இளம்பருவமாயிருக்கச்செய்தேயும் இந்திரனையும் ஜயிக்கும்படி மனுஷ்யனுக்குத் தகாத மிகுந்த காந்தியை வஹித்தவன்.

ஸர்வசஸ்த்ரப்ருதாம்வர:=நரகாசுரன் ஜராஸந்தன் முதலானவர்களுடைய யுத்தங்களில் ஆயுதபாணிகளான யாவர்க்கும்மேலாய் விளங்கினவன்[567]. ப்ரக்ரஹ:=அர்ச்சுநனைக் கடிவாளமிட்டாட்டுமவன்.

நிக்ரஹ:=அர்ச்சுநனுடைய பவுருஷத்தை யெதிர்பாராமலே தனது ஸாரத்திய வைசித்ரியாலே சத்ருக்களை நிரஸிக்க வல்லவன்.

(அ.) தேஜோவ்ருஷ:=சூரியரூபியாய்க்கொண்டு ஜலத்தை வர்ஷிப்பவன். ப்ரக்ரஹ:=பக்தர்கள் ஸமர்ப்பித்த பத்திரபுஷ்பாதிகளை உகந்து அங்கீகரிப்பவன். வ்யக்ர:=அந்தமில்லாதவன்.

[564] జాతోహం యత్తవోదరాత్ ॥ అహం వో బాంధవో జాతః ॥

[565] యది వోస్తి మయి ప్రీతిః శ్లాఘ్యోహం భవతాం యది । తదాత్మబంధుసదృశీ బుద్ధిర్వః క్రియతాం మయి ॥

[566] తదేతదఖిలం గోష్ఠం త్రాతవ్యమధునా మయా । ఇమమద్రిమహం ధైర్యాదుత్పాట్యోరుశిలాఘనమ్ । ధారయిష్యామి గోష్ఠస్య పృథుచ్ఛత్రమివాపరమ్ ॥

[567] మనుష్యధర్మలీలస్య లీలా సా జగతః పతేః । అస్త్రాణ్యనేకరూపాణి యదరాతిషు ముంచతి ॥

[గదాగ్రజః॥ చతుర్మూర్తిశ్చతుర్బాహుశ్చతుర్వ్యూహ]
[శ్చతుర్గతిః ।]

గదాగ్రజః - கதனுக்குமூத்தவன் - చతుర్మూర్తిః - நான்குமூர்த்தியுடையவன், చతుర్బాహుః - நான்குதோள்களுடையவன், చతుర్వ్యూహః - நான்கு வியூஹம வகுத்தவன், చతుర్గతిః - நான்குகதிகளுடையவன்,

---

(வி.) வ்யக்ரஃ—அர்ச்சுனன் வைரிகளை யழிக்கும் விஷயத்தில் யுத்தமென்று ஒருவியாபாரத்தைச்செய்யும் வரையிற் சகியாதவன். இவ்வர்த்தம் பீஷ்மயுத்தத்தில் விளங்குகிறது[568].

நைகச்ருங்கஃ—பலவித உபத்ரவங்கள் செய்பவன்.

[என்றால்-யுத்தத்தில் புத்திஸாமர்த்தியம், ஸாரத்யம் செய்கை, ஆயுதங் கிரஹிக்கிற தில்லையென்ற ஒரு வியாஜம், ஸமயம்வந்தபோது ஆயுதக் கிரஹணஞ்செய்வது என்று இபபடி வெகுசாய் வைரிகளைப்பாதிக்கும்படியான வியாபாரங்கள செய்பவனென்றபடி.]

கதாக்ரஜஃ—வஸுதேவர் பத்தினியான ஸுநாமையின் குமாரன் கதனென்பவனுக்கு முன்பிறந்தவன்.

(அவதாரிகை.) இந்த விபவாவதாரத்திலும் இதற்குக் காரணமான வியூஹத்தை ஞாபகப்படுத்துகிறதுமேல்:—

சதுர்மூர்த்தி:—பலபத்ரன், வாசுதேவன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்கிற நான்குமூர்த்திகளுடன் யதுகுலத்தில் அவதரித்தவன்.

சதுர்பாஹுஃ—வியூஹத்துக்கும் மூலமான பரஸ்வரூபத்துடன் தேவகீ கர்ப்பத்தில் உதிக்கையாலே நான்கு திருத்தோள்களுடையவன்.

[தேவகிப் பிராட்டியே யிப்படி சொன்னாளன்றோ? 569]

சதுர்வ்யூஹஃ—இவ்வவதாரத்திலும் தனது குணங்கள் ஆறையும் சேர்த்தும் பிரித்தும் வியவஸ்தைபண்ணுகையால் நான்குவியூஹமுடையவன்.

சதுர்கதிஃ—உபாஸகாளுடைய தாரதம்மியத்துக்குத் தக்கபடி நான்கு விதமான ப்ராப்தியை யுடையவன்.

---

(அ) காதாக்ரஜ:-நிகதமென்று மந்திரமாய் அதினால் அக்ரஜஃ-முதலில்(சொல்லப்படுகையாலே) உண்டானவனென்கிற பொருளின்பேரில் 'நி' என்பதைக்குறைத்து கதாக்ரஜனென்றிருக்கிறது. சதுர்மூர்த்தி:—வெளுப்பு, சிவப்பு, பொன்னிறம், கருப்பு என்றுநான்குநிறமுள்ள மூர்த்தியுடையவன்.

---

568 యేయాన్తియాన్త్వేవశిని ప్రవీరయేవస్థితాః సత్వరంతేపియాన్తు । భీష్మంరథాత్ పశ్యతపాత్యమానంద్రోణంచసంఖ్యేసగణంమయాద్య ॥

569 ఉపసంహరసర్వాత్మన్రూపమేతచ్చతుర్భుజమ్ । జానాతుమావతారన్తే కంసోయందితిజన్మజః ॥

[ చతురాత్మా చతుర్భావశ్చతుర్వేదవిదేకపాత్ ॥
సమావృత్తోనివృత్తాత్మాదుర్జయోదురతిక్రమః । దుర్లభో]

చతురాత్మా - நான்குஸ்வரூபமுடையவன், చతుర్భావః - நான்குபாவனைகளுற்றவன், చతుర్వేదవిత్ - நான்மறையோருக்குப் பிரகாசிப்பவன், ఏకపాత్ - ஒருபாதமாயிருப்பவன், సమావర్తః - எங்குமிருக்கப்பெற்றவன், నివృత్తాత్మా-நிவர்த்திக்கப்பட்டமனமுடையவன், దుర్జయః - ஜயிக்கவரியன், దురతిక్రమః- கடக்கவரியன், దుర్లభః-பெறவரியன்,

(வி) சதுராத்மா=அதிகாரி தாரதம்மியத்துக்குத் தக்கபடி பரிக்கிரஹிக்கப்பட்ட ஸ்தூல ஸூக்ஷ்மங்களில் ஜாக்கிரதாதி அவஸ்தாரூபமான தனது நான்கு ஸ்வரூபத்தையும் பிரகாசிப்பிக்குமவன்.

சதுர்ப்பாவ:=(இப்படி பதினாறுப்பிரகாரமான வியூஹங்கள் நான்கிலும் ஜகத்வ்யாபாரத்தைச்செய்தல், சாஸ்திர ப்ரதாநம் பண்ணுதல், முதலிய ஸ்தூல ஸூக்ஷ்மவ்யூஹ ப்ரயோஜந ஸமுதாயத்தைப் பிரகாசிப்பிக்கையாலே) நான்கு பாவனைகளுடையவன்.

சதுர்வேதவித் ஏகபாத்=வ்யூஹத்திலும் விபவத்திலும் பிரகாசிப்பிக்கப்பட்ட இந்த மஹாவைபவமானது, மஹாவிபூதியென்கிற ஸமுத்திரத்தின் லேசமாத்திரமென்பதாக, பராவர தத்வங்களை நன்கறிந்த நான்மறையோர்கள் அறியும்படி விளங்குமவன். ஆகவேயன்றோ அவாளு மிப்படி சொன்னார்கள்[570]

ஸமாவர்த்த:=இந்த வியூஹவிபவங்களெல்லாம் இவனிடத்தில் எப்போதும் எல்லாவிடத்தும் எல்லாவிதத்திலும் சுழன்றுகொண்டிருக்கப் பெற்றவன்.

நிவ்ருத்தாத்மா=கிருபைக்கு வசப்பட்டு இப்படி இந்த ஜகத்ஸம்பந்தமான வியாபாரததிலிழியுமதொழிய, ஸ்வயம் அவாப்த ஸமஸ்தகாமனுகையாலே இதில் சிறிதும அபேக்ஷையற்றிருப்பவன் 571.

துர்ஜய:=தேவமநுஷ்யாதிகளின் சக்தியைக்கொண்டு ஜயிக்கமுடியாதவன்572. துரதிக்ரம:=இப்படி யெல்லாமிருக்கையாலே இனி தன் திருவடிகளைத்தவிர பூதங்கள் மற்றொருகதியைத் தேடிப்போக விடமில்லாமலிருப்பவன்573 துர்லப:-இந்திரிய ஜயம் பண்ணிதன்னை ஆராதியாதவாகளால் அடைவதற்காகாதவன்.

570 అంశావతీర్ణో బ్రహ్మర్షియోఽయం యదుకులోద్భవః ॥

571 అవాక్యనాదరః ॥

572 యన్న దర్శితవానేషః కస్తదన్వేష్టుమర్హతి ॥

573 వాసుదేవమనారాధ్య కో మోక్షం సమవాప్నుయాత్ ॥

[దుర్గమో దుర్గో దురావాసో దురారిహా॥ శుభాంగో
లోకసారంగస్సుతంతు స్తంతువర్ధనః]

దుర్గమః - கிட்டவரியன், దుర్గః - புகவரியன், దురావాసః - ஸஹவஸிக்கவரியன், దురారిహా - துஷ்ட சத்துருக்களை கொல்ப கவன், శుభాంగః - அழகியசரீரமுடையவன், లోకసారంగః - லோகத்தில்ஸாரத்தைக்கைப்பற்றியவன், సుతంతుః - நல்ல நூலுடையவன், తంతువర్ధనః-நூலைவளர்ப்பவன்,

(வி) துர்கம:=கண்ணேய்க்காரர் மத்தியான்னத்தில் சூரியனைப்பார்க்க மாட்டாதாப்போல் எதிரில்லாத தேஜஸ்ஸோடுகூடி விளங்குகையாலே ஒருவராலுங்கிட்ட ப்ரஸக்தியில்லாதபடி விளங்குமவன்.

துர்க்க:=அவித்தைமுதலிய ஆவரணங்க ளிருக்கையாலே பிரவேசித்துக் கிட்டுவதற்கு முடியாதவன்.

துராவாஸ:=இப்படியான பின்பு தன் திருவடி வாரத்தில் வஸிப்பதென்பது துர்லபமாம்படி விளங்குமவன்.

(அ-கை) இப்படி துர்லபமாயிருக்கைதான் இவனையடையவேண்டுமென்கிற எண்ணமேயில்லாத பாபிகள் விஷயமென்கைக்காகப் புத்தாவதாரத்தைச் சொல்லுகிறது மேல்:—

துராரிஹா=துர்மார்க்கங்களில் சென்று அதனுல் தனக்குப் பகைவராயிருப்பவர்களை, வேதமார்க்கத்தைக் கைவிடும்படி செய்து மற்றும் அநேக உபாயங்களாலே அழிப்பவன் 574.

(அ-கை.) இவன் அவாளுக்குட்புகுவதுதா னெப்படியென்றல்:—

சுபாங்க:=இவன் ரொம்பவும் நம்பத்தக்கவனென்று மயங்கும்படி அதிமநோஹரமான திவ்யமங்கள விக்கிரஹமுடையவன்.

(அ-கை.) அதாவதெப்படி மயக்குகிறனென்னில்:—

லோகஸாரங்க:=லோகத்தில் ஸாரமான போகமோக்ஷமார்க்கங்களை விடாமலே மயக்குமவன். ஸுதந்து=சாந்தனயிருப்பதுபோல்தோன்றி, தான்செய்யும் கிருத்திரம மென்னும் வலைநூலை அவர்கள் கடக்கமாட்டாதபடி விளங்குமவன். தந்துவர்த்தந:=இப்படி அவர்களுக்குப் பாவத்தில் ருசியை உண்டுபண்ணி அதைக்கொண்டு ஸம்ஸாரமென்னுங் கயிற்றை விருத்திபண்ணிவிடுமவன் 575.

(அ.) லோகஸாரங்க:=லோகத்தில் ஸாரமான பிரணவத்தால் அறியக்கூடியவன்.

574 మాయామోహేన తే దైత్యాః ప్రకారైర్బహుభిస్తదా । వ్యుత్థాపితా యథా నైషాం త్రయీం కశ్చిదరోచయత్ । హతాశ్చ తే సురైర్దైత్యాస్సన్మార్గపరిబన్ధినః ॥

575 తానహం ద్విషతః క్రూరాన్ సంసారేషు నరాధమాన్ ॥

[ఇంద్రకర్మా మహాకర్మా కృతకర్మా కృతాగమః ॥
ఉద్భవస్సుందరస్సుందో రత్ననాభస్సులోచనః ।]

ఇన్ద్రకర్మా - இந்திரனுக்காகச் செயலுற்றவன், మహాకర్మా - நற்செய்கையுடையவன், కృతకర్మా - கருமஞ்செய்தவன், కృతాగమః- ஆகமங்கள்செய்தவன், ఉద్భవః - ஸம்ஸாரத்தின் மீதெழுந்தவன், సున్దరః - அழகன், సున్దః - நனைப்பவன், రత్ననాభః-சிரேஷ்டமானநாபியையுடையவன்; సులోచన - நல்லகண்களுடையவன்,

(வி.) இந்த்ரகர்மா—சரணாகதரான இந்திராதிகளுக்காக இவ்விதமான செயல்களைச் செய்பவன். இப்படி ஆச்ரித ரக்ஷணார்த்தமாகவும் துராசாரப் பிராணிகளின் தண்டனைககாகவும் பரமதயாளுவானபகவான் வஞ்சிக்கத் தகுமாகையால், மஹாகர்மா—மிகுந்த நியாயமானசெயல்செய்பவன்.

க்ருதகர்மா—அவர்களை வஞ்சிக்கவேண்டி தானும் அந்த செயல்களைச் செய்பவன். க்ருதாகம:—அந்தசெயல்கள் நடப்பதற்காக புத்தமதம், ஆர்ஹதமதம் முதலியவைகளை யேர்ப்படுத்தினவன். உத்பவ:—மோக்ஷோபதேசம் பண்ணுமிடத்தில் அப்பொழுதே ஸம்ஸாரத்தினின்றும் கிளம்பினவன்போல விளங்குமவன். ஸுந்தர:—அவர்கள் கண்ணுக்கு மிகவும் ஸுந்தரனாய்த் தோற்றுமவன்.

ஸுந்த:—அதனால் அசுரர் மனதில்மிகவும் ஈரமுண்டாகும்படி செய்பவன். ரத்நநாப:—பண்டிதனனமைக் கேற்றபடி திரண்டவயிறும் அழகிய நாபியுமாய் விளங்குமவன். ஸுலோசந:—அப்படியே தன்னிடத்தில் கொஞ்சம் மனந்தாழ்ந்தவனை முழுதும் திருடவல்ல கண்கள்படைத்தவன்[576].

அஷ்டமசதகம்—ஸம்பூர்ணம்.

---

[576] తతోదిగమ్బరోముణ్డః ॥ పునశ్చరక్తామ్బరధృక్ మాయామోహాపహా ఉజి
తేక్షణః ॥

ஸ்ரீ:

# நவமசதகம்.

[అర్కః-వాజసనిశ్శృంగీజయంతస్సర్వవిజ్జయీ ॥ సువర్ణబిందు రక్షోభ్యస్సర్వవాగీశ్వరేశ్వరః । మహాహ్రదోమహాగర్తో]

అర్కః- துதிக்கப்பட்டவன், వాజసనిః-அந்நாதிகளை மதிப்பவன், శృంగీ - கொம்புடையவன், జయన్తః-ஜயிப்பவன், సర్వవిజ్జయీ-ஸர்வக்ஞரையும் ஜயிப்பவன், సువర్ణబిన్దుః - நற்சொற் களாலே மறுப்பவன், అక్షోభ్యః - கலக்கப் போகாதவன், సర్వవాగీశ్వరేశ్వరః-ஸகலமானவாகீசாளுக்குமீசன், మహాహ్రదః - பெரியமடுவானவன், మహాగర్తః-பெரும்பள்ளமானவன்,

(வி) அர்க்க:—"அஹோ, இவர் மஹாத்மா, இவர் மகாதார்மிகர்" என்று அவர்களால் துதிக்கப்பெற்றவன். வாஜஸநி:—நாஸ்திக்கியவாதஞ்செய்து இஹலோக வாழ்வான அன்னம் முதலியவைகளையே பெரிதாயுகந்து அநுபவிப்பவன்.

[பிரதி தினமும் காலையில் தயிருஞ்சோறுமாய்ப் புசிப்பதென்பது சமணருக்கு விரதமன்றோ? ஆகவே சொல்லுகிற தென்றுணர்க.]

ச்ருங்கீ—ஹிம்ஸை செய்யலாகாதெனபதற்கு அடையாளமாகக் கையில் ஒருதோகை தரித்தவன்[577]. ஜயந்த:—ஞானமேதான் ஆத்மாவென்றும் பிரபஞ்சமெல்லாம் மித்தையென்றும் இபபடி மித்தியாவாதங்கள்செய்து ஆஸ்திக்யவாதிகளை ஜயித்தவன்.

(அ-கை.) எபபடிதான் இவர்களை பிரமாணத்துக்கு விரோதமான வாதங்களால் நம்பவைக்கக்கூடும் என்னில்:—

ஸர்வவித்ஜயீ—ஸர்வஜ்ஞரைக்கூட ஜயிக்கவல்லவன்.

[ஆனபின்பு இவர்களை ஜயிப்பது அரிதல்லவென்றபடி.]

ஸுவர்ணபிந்து:—ரொம்பவும் சாதுரியமான அக்ஷரங்கள் சேர்த்த வாக்சாதுரியததாலே ஆஸ்திக வாதத்தைப் போக்கவல்லவன்.

அக்ஷோப்ய:—கெம்பீர ஹிருதயனாகையாலே கலக்கப்போகாதவன். ஸர்வவாகீச்வரேச்வர:—வாய்படைத்தவர்யாவரையும் அடக்கியாள்பவன்.

மஹாஹ்ரத:—பாபிகளாயிருப்பார் மறுபடி தலையெடுக்காமல் முழுகும்படியாயும், புண்ணியவான்கள் முழுகிமுழுகித் திருப்தியடையும்படியாயும் அதிகெம்பீரமாய் விளங்குகின்ற மடுபோன்றவன்.

மஹாகர்த்த:—இப்படி பாஹ்யமதங்களிலும் குத்ருஷ்டி மதங்களிலும்

(அ.) வாஜஸந:—அந்நார்த்திகளுக்கு அன்னத்தைத் தருமவன்.

ஸுவர்ணபிந்து:—சுவர்ணமயமான அவயவங்களுடையவன்.

577 బర్హిపత్రధరః ॥

[మహాభూతో మహానిధిః ॥ కుముదః
కుందరః కుందః పర్జన్యః పవనోఽనిలః]

మహాభూతః - மகான்களைத்தனக்காகப்பெற்றவன், మహానిధిః - பெரியநிதியானவன், కుముదః - புவியில்மகிழ்பவன், కుందరః-குருக்கத்தியைத்தருமவன், కుందః - குருக்கத்திபோல் நிர்மலஞான ஸ்வரூபன், పర్జన్యః - தாபஹரன், పవనః - பரிசுத்திகரன், అనిలః- பிரேரகாளில்லாதவன்,

(வி) பிரவேசித்து ஆத்மநாசந் தேடிக்கொண்டவர்களுக்கு ரௌரவாதிநரகக்குழிகளைத் தருமவன் 578.

(அவதாரிகை.) இப்படி பகவானுடைய ஆக்ஞாரூபமான சாஸ்திரத்தை அதிலங்கநம் செய்யும் அசுரப்பிறவிகளை நிக்கிரஹம்செய்யும்பிரகாரஞ் சொல்லப்பட்டது. இனி தனது தைவீகமான ஸம்பத்துக்களை அநுபவிக்கத்தோன்றிய சாஸ்திர வசியர்களை அநுக்கிரகிக்கும்படி சொல்லுகிறது.

மஹாபூத:—மஹாத்மாக்களைத் தனது சொத்தாய் மதிப்பவன்579.

மஹாநிதி:—நிதியைப்போல் அவர்களிடத்தில் அதிகப்பிரியமாயிருப்பவன்580. குமுத:—இந்தப்பிரகிருதி மண்டலத்திலேயே அவர்களோடு கலந்து ஸந்தோஷிப்பவன். அதவா அவர்களுக்குமோக்ஷபூமியைத் தருமவனென்றுமாம்.

குந்தர:—குருக்கத்தி மலர்போல் அதிநிர்மலமான பரதத்வஞானத்தை அவர்களுக்குத் தந்தவன்581. குந்த:—கிரமக்கிரமமாய் பூர்வவாஸனையை ஜயித்து மேலே ஞானம்பக்தி முதலியவைகளை அடைந்தோருக்கு மென்மேலும் பரபக்தி பரக்ஞாநாதிகளைத் தருமவன், அதவா:—
குந்தர:-பாவத்தைப் பிளப்பவன். குந்த:-பிளந்தபாவத்தைச்சோதிப்பவன்.

பர்ஜந்ய:—தனது தத்வமறிந்த ஞானிகளுடைய தாபத்திரயத்தையும் போக்குவதற்காக பர்ஜந்யதேவதைபோல் கடாக்ஷங்களை வர்ஷிப்பவன்.

பவந.—அப்படியே பரிசுத்தியாகச்செய்பவன். அநில:—அவர்களை அநுக்கிரஹிக்கும் விஷயத்தில் ஒருவர் ஏவவேண்டாதவன்582.

(அ.) மஹாபூத:—முக்காலத்தாலும் அளவிடப்போகாதவன்.

குந்த:—பூமியைக்காசியபருக்கு தானஞ்செய்தவன்.

அநில:—தூங்குந்தன்மையனான ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணனாகையால் தூங்காதவன்.

578 అశ్రద్దధానాః పురుషాః ధర్మస్యాస్య పరంతప। అప్రాప్య మాం నివర్తన్తే మృత్యుసంసారవర్త్మని ॥

579 మహాత్మానస్తు మాం పార్థ ॥      580 యే తు ధర్మ్యామృతమిదమ్ ॥

581 దదామి బుద్ధియోగం తమ్ ॥ 582 తదస్య ప్రీతం ధ్యాతో దదాతి మధుసూదనః ॥

[అమృతాశోఽమృతవపుస్సర్వజ్ఞస్సర్వతోముఖః ॥ సులభస్సు
వ్రతస్సిద్ధశ్శత్రుజిచ్ఛత్రుతాపనః । న్యగ్రోధోదుంబరో]

అమృతాశః - அமுதத்தைபக்ஷிக்கச்செய்பவன், అమృతవపుః - அமுதமேனியன், సర్వజ్ఞః - யாவுமறிபவன், సర్వతోముఖః - எங்கும் முகமுடையவன், సులభః - சுகமாய் பெறக்கூடியவன், సువ్రతః - நல்விரதம்பூண்டவன், సిద్ధః - ஸித்தமானவன், శత్రుజిచ్ఛత్రుతాపనః - சத்துருக்களை ஜயிக்கவல்லவரின் சத்துருக்களைத் தவிக்கச் செய்பவன், న్యగ్రోధోదుంబరః - கீழ்படிந்துதுதிப்பதாயேர்ப்பட்டவர்களால் அநிஷிலக்ஷணமான உம்பருலகத்தையுடையவன்,

---

(வி.) அம்ருதாச:— தனது குறையிருதத்தை அவர்கள் பாநம்பண்ணச் செய்பவன். அம்ருதவபு:— அம்ருதம்போன்ற திருமேனியுடைத்தானவன்.

ஸர்வக்ஞ:— அவர்களால், இது ஆகும், இது ஆகாது, இதைச்சாதிப்பர்கள், இதைச்சாதிக்க மாட்டார்களென்று ஸகலத்தையும் அறிந்துகொள்பவன். ஸர்வதோமுக:— இந்த உபாயத்தால்தான் இவனை ஸாதிக்கக்கூடும்; இதைத்தவிர வேறு உபாயமில்லை யென்கிற நிர்பபந்தமின்றிக்கே ஏதேனும் ஒருவியாஜத்தாலே அவர்கள் பிரவேசிக்கும்படியானவன்[583].

ஸுலப:— ஆனதுபற்றியேதான் பெருவிலையுறு யிருக்கச்செய்தேயும் சிறிதும் விலையின்றிபெறக் கூடியவன்.

[இப்படியே ஆயிரங்கூனுடையளான ஓர் பெண்பிள்ளை கண்ணனுக்குச்சிறிது சந்தனத்தைத் தந்து தனது இல்லமேற வரவேண்டுமென்று மடிபிடித்து இழுத்தாளன்றோ[584].]

ஸுவ்ரத:— எவ்விதத்தில் புகுந்தோரையும் ஸகல விதத்திலும் பரிபாலிப்பதென்று திடமான விரதம்பூண்டவன்[585].

ஸித்த:— தனது தத்வஸ்திதியை உள்ளபடியே அறிந்தவர்களுக்குச் சிறிது யத்தினங்கொண்டு ஸாதிக்கவேண்டாமல் ஸித்தமாயிருப்பவன்.

(அ-கை.) இப்படி அவன் நேரிலிருந்து ரக்ஷிக்கும்படி சொல்லிற்று. இனிமறைந்து; புருஷார்ந்தரத்தாலே ரக்ஷிக்கும்படி சொல்லப்படுகிறது.

சத்ருஜித்சத்ருதாபந:— சத்துருக்களை ஜெயிக்கவல்லரான ககுஸ்த புருகுத்ஸாதிகளுக்குத் தனது சக்தியைத் தந்து அவர்கள் மூலமாய் அவர்கள் சத்துருக்களைத் தவிக்கச்செய்பவன்[586]. ந்யக்ரோதோதும்பர:— தான்

---

[583] ఆర్తో వా యది వా దృప్తః పరేషాం శరణాగతః ॥

[584] వస్త్రైః ప్రగృహ్య గోవిన్దం మమ గేహం వ్రజేతి వై ॥ [585] సకృదేవ ప్రపన్నాయ ॥

[586] శతక్రతోర్వృషభరూపధారిణః కకుత్స్థోఽతిరోషసమన్వితో భగవతశ్చరాచరగురోః అమృతస్య తేజసాప్యాయితో దేవాసురసంగ్రామే సమస్తానేవాసురాన్ నిజఘాన ॥

[శ్వత్థశ్చాణూరాంధ్రనిషూదనః ॥ సహస్రార్చిస్సప్తజిహ్వస్సప్తైధాః]

అశ్వత్థః - அநித்தியமானவர்களுக்குள் நியாமகனாயிருப்பவன், చాణూరాంధ్రనిషూదనః - சாணூராந்திரனென்னுமசுரனைச்செகுத்தவன், సహస్రార్చిః - ஆயிரங்கிரணங்களைத் தந்தவன், సప్తజిహ్వః - ஏழுநாக்குகளுடையவன், సప్తైధాః - ஏழுஸமித்துக்களுடையவன்,

(வி.) மிகவும் சிரேஷ்டர்களாலே ஸேவிக்கத்தகுந்தவனாயினும், அதிநீசரான அவர்களால் தனது அநுக்கிரஹத்தை அபேக்ஷித்துப் [587]பிரார்த்திக்கப்படுமவனாய், ஸகல குணங்களாலும் உயர்ந்து லக்ஷ்மீபரிஜநாதிகளாலே ஸமிருத்திபொருந்திய பரமாகாசத்தை உரைவிடமாயுடையவன்.

(அவதாரிகை.) அநந்தரம் அந்தந்த தேவதாமுகத்தாலே ஜகத்தை நியமிக்கிறதென்கிற ப்ராதுர்ப்பாவாந்தரம் சொல்லப்படுகிறது.

அச்வத்தஃ=அநித்தியமான இந்திராதி பதவிகளிலிருக்கும் அதிகாரி புருஷர்களுடைய ஹ்ருதயத்தில் நியாமகனாய் விளங்குமவன். சாணூராந்த்ரநிஷூதநஃ=அந்த இந்திராதிகளுக்கு விரோதியான சாணூராந்திராசுரனை ஹதம்பண்ணினவன்.

ஸஹஸ்ரார்ச்சிஃ=பரிசுத்தமானவைகளும் சோஷிப்பிக்குமவைகளும், தபிக்குமவைகளும், பிரகாசமானவைகளும், தர்மத்திற்கு அத்தியக்ஷமானவைகளுமாய்க்கொண்டு லோகத்திற்கு உபகரிக்கின்ற ஆயிரம் கிரணங்களை சூரியனுக்கு அளித்தவன்[588].

ஸப்தஜிஹ்வஃ—அப்படியே சாலி, காளிமுதலாய் தேவதைகளுக்குஹவிஸ்ஸைக்கொண்டு செல்லுமவைகளான ஏழுஜ்வாலைகளோடு அக்கினியில் விளங்குமவன்[589].

ஸப்தைதாஃ=ஏழுஇந்தநங்களுடையவன்.

(அ) அச்வத்தஃ—அச்வத்தவிருக்ஷம்போல் அநித்தியமான ஸம்ஸார ரூபமாய் பிரதிபாஸிப்பவன்.

[587] అఞ్జలిః పరమా ముద్రా క్షిప్రం దేవప్రసాదినీ ॥

[588] యదాదిత్యగతం తేజో జగద్భాసయతేఽఖిలమ్ । యచ్చన్ద్రమసి యచ్చాగ్నౌ తత్తేజో విద్ధి మామకమ్ ॥

[589] తద్వక్త్రం దేవతానాం చ హుతభుక్ పరమేశ్వరః । మన్త్రపూతం యదాదాయ హుతమాజ్యపురస్సరమ్ ।
బ్రహ్మాణ్డభువనం సర్వాన్ సన్తర్పయతి సర్వదా ॥

[స్ప్తవాహనః । అమూర్తిరనఘోచింత్యో
భయకృద్భయనాశనః ॥ అణు]

సప్తవాహనః - ஏழுவாஹனமுடையவன், అమూర్తిః - மூர்த்தியில் வேறுபட்டவன், అనఘః - குற்றமற்றவன், అచింత్యః-நிரூபிக்கப் போகாதவன், భయకృత్ - பயமுண்டுபண்ணுமவன், భయనాశనః- பயத்தைப்போக்குமவன், అణుః-அணுவானவன்,

(வி.) [என்றால்: வைதிக அக்கினிக்கு, ஔபாஸநம், வைசுவதேவம், ஸ்தாலீ பாகம், அஷ்டகை, மாஸிச்சிராத்தம், ஈசாநபலி, ஸர்ப்பபலியென்கிற பாக யக்ஞங்கள் ஏழும், அக்நிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், பிண்டபித்ருயக்ஞம், பசுபந்தம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், ஸௌத்ராமணியமென்கிற ஹவிர்யக்ஞம் ஏழும், அக்நிஷ்டோமம், அதியக்நிஷ்டோமம், உக்த்யம், ஷோடசம், வாஜபேயம், அதிராத்ரம், ஆப்தோர்யாமமென்கிற ஸோமஸம்ஸ்தங்களேழும், ஸமித்துக்களானவையாலே அவைகளை உடையனென்றபடி. யத்வா, இஷ்டாபூர்த்தாதிகளான கருமங்கள் ஏழையும் ஸமித்தாயுடையவன் என்றவுமாம். யத்வா-அரசுமுதலிய ஏழுவிதகாஷ்ட்டங்களை யுடையவனென்றுமாம்.]

ஸப்தவாஹநः=காயத்திரிமுதலிய வைதிக மந்திரங்களுக்கு அபிமாநிகளான சூரியரதவாஹநங்களேழையும் உடையவன். அதவா, வாயுஸ்கந்தங்களேழையும் அதிஷ்டித்திருப்பவனென்றுமாம். அமூர்த்தி:=இப்படிதான் அதிஷ்டித்திருக்கும் ஸ்தூலமான பௌதிக மூர்த்தியைக்காட்டிலும் தான் வேறுபட்டிருப்பவன்.

அநகः=கருமத்துக்கு வசப்படாமையாலே அந்த பூதசக்ரங்களில் முழுகிக்கிடக்கிற ஜீவனைக்காட்டிலும் விலக்ஷணமானவன்.

அசிந்த்யः=முக்தபுருஷர்களோடும் ஸமமாக எண்ணப்போகாதவன். பயக்ருத்—தனது ஆக்ஞையைக் கடப்போருக்கு பயந்தையுண்டுபண்ணுமவன்.

பயநாசநः=அப்படியே ஆக்ஞையை அநுவர்த்திப்போருக்கு நேரிடும் பயத்தைப்போக்கடிப்பவன்[590].

(அவதாரிகை.) அநந்தரம் அணிமைமுதலியவைகளை அதிஷ்டித்திருக்கும்படி சொல்லுகிறது.

அணு:=அதிஸூக்ஷ்மமான தஹராகாசம், அவ்யக்தம், ஜீவன் இவைகளில் பிரவேசிக்கிற ஸாமர்த்தியமுடையனாகையாலே அணுவாய் விளங்குமவன்.[591]

(அ.) அசிந்த்யः—ஸர்வப்ரமாணங்களுக்கும் விஷயமாகாதவன்.

590 భయాద్భీషోదేతి ॥ 591 అణోరణీయాన్ ॥

[బృహత్కృశస్థూలోగుణభృన్నిర్గుణోమహాన్ । అధృత]
బృహత్ - மஹத்தானவன், కృశః-இளைத்தவன், స్థూలః-பருத்தவன், గుణభృత్ - குணங்களைப்பரித்தவன், నిర్గుణః - குணஹீனன், మహాన్- பெரியவன், అధృతః-தரிக்கப்பட்டவன்,

---

(வி.) ப்ருஹத்=அதிவிஸ்தாரமான பரமாகாசத்தையும் அற்பமாகத்தில் அடக்கிக்கொள்ளும்படியான பரமமஹத்தாய்விளங்குபவன்[592]. க்ருசஃ=பஞ்ச, காற்று முதலியவைகளைக் காட்டிலும் மிகவும் லேசாயிருக்கையாலே எங்குந்தடையற்றுச் செல்லும்படி இளைத்திருப்பவன்[593]

ஸ்தூலஃ—தான்ஓரிடத்திலிருந்தபடியே பரிசிக்கும்படியான (அதாவது பூமியிலிருந்தபடியே சந்திரனைத் தொடும்படியான) பிராப்தியென்னும் ஐசுவரியமுடையனாகையாலே பருத்தவன்.

குணப்ருத—தனது ஸங்கல்பத்தாலே ஸகலத்தையும் ஸகலாவஸ்த்தைகளிலும் தனக்குக்குணம்போல் தரித்திருப்பவன். இதுதான் இவனுடைய உத்கிருஷ்டமான ஈசுவரத்தன்மை.

நிர்க்குண:—இப்படி ஸகலத்தையும் பரித்தாலும் அவற்றிற்கு வசப்படாமையால் அதன் குணம் சிறிதும் தன்மீது தட்டாதவன். பரமஸ்வதந்திரனென்றபடி. இதுதான் இவனுடைய உத்கிருஷ்டமான வசித்வம்.

மஹாந=ப்ராகாம்யமென்கிற உத்கிருஷ்ட ஐசுவரியத்தோடு கூடினவன்.

(அவதாரிகை) பிறருடைய சாயையில் புகுந்து அவர் உள்ளத்தை வசீகரிக்கையென்றும், தன்னைத் தியானிப்பவருள்ளத்தில் அதிஷ்டானம் பண்ணுந்திறமையென்றும், ஜீவனுடன்கூடினதும் ஜீவனையொழித்ததுமான சரீரத்தில் பிரவேசிப்பதென்றும், இஷ்டாபூர்த்தாதி ஸத்கார்யங்களில் அதிஷ்டித்திருக்கையென்றும் நான்குவிதமான அவனுடையதேச்சாவியாபாராதிசயத்தாலே யாதொன்றிலும் கட்டுப்படாமையாலே:—

அத்ருதஃ=தரிக்கப்படாதவன்.

[இதனால்—இவனது நினைத்தபடியெல்லாம் செய்யவல்லமையென்கிற காமாவஸாயித்வத்தின் அதிசயம் சொல்லப்பட்டது. இவந்தான்

---

(அ.) க்ருசஃ—திரவ்ய மல்லாமையாலே கிருசனென்கிறது.

---

592 సభూమింవిశ్వతోవృత్వాఅత్యతిష్ఠద్దశాఙ్గులమ్ ॥ మహతోమహీయాన్ ॥

593 అప్రమేయోనియోజ్యశ్చ యత్రకామగమోవశీ ॥

[స్వధృతః స్వాస్యః ప్రాగ్వంశో వంశవర్ధనః॥ భారభృత్]
ஸ்வத்ருதஃ-தானாகவே தரிக்கப்பட்டவன், ஸ்வாஸ்யஃ-நல்ல ஆஸனமுடையவன், ப்ராக்வம்சஃ-முதுவர் முதல்வன், வம்சவர்த்தனஃ-வம்சத்தை வளர்ப்பவன், பாரப்ருத்-பாரத்தைப்பரிப்பவன்,

(வி.) பரமபதத்துக்குப் போகத் தகுந்த ஸித்தியில்லாயிலிருந்தும் வைதிகன் புத்திரர்களைத் தனது ஸங்கல்பமாத்திரத்தாலே பரமபதத் தேறப் போக விட்டதோடு, புநராவர்த்தியில்லாத அங்கினின்றும் மறுபடியும் அவர்களை இந்தபவக்கடலில் வரச்செய்தான். இதனால் இவன் சித்தையும் அசித்தையும் அவற்றின் ஸ்வரூபம் மாறுபடும்படி செய்யவல்லனாயிருந்தும், ஏதோஒரு காரணத்தால் அவைகளை அழியமாற்றாமலிருக்கிறானென்று ஊகிக்கப்படுகிறது.]

(அவதாரிகை.) மந்திரம், ஓஷதி, தபஸ், ஸமாதி இவைகள் ஸித்திக்கப்பெற்ற பத்தஸம்ஸாரிகளுடைய அணிமாதி ஐசுவரியங்களைக் காட்டிலும் இவன் ஐசுவரியத்துக்குண்டான வேற்றம் சொல்லுகிறது மேல்.—

ஸ்வத்ருதஃ=ஸமாதிமுதலிய உபாதிவசத்தால் வந்ததன்றிக்கே கீழ்ச்சொன்ன ஐசுவரியம் ஸ்வயமாகவே உண்டாயிருக்கப்பெற்றவன். ஸ்வாஸ்யஃ=ஸம்ஸாரதசையில் மழுங்கிக்கிடந்து முக்திதசையில் ஆவிர்ப்பவிக்கின்ற முக்தபுருஷர்களுடைய ஸ்வாபாவிகமான ஐசுவரியம்போலன்றிக்கே எப்போதும ஆவிர்ப்பவிக்கப்பெற்ற ஐசுவரியமென்னும் நல்ல ஆஸநமுடையவன்[594].

ப்ராக்வம்சஃ=தொன்றுதொட்டு முக்தாளான நித்திய ஸூரிகளுக்கும் உத்பத்தி ஸ்தானமானவன்.

[என்றால்:—ஸர்வமும் ஸகலவிதத்திலும் அவனுடைய இச்சையைப் பின்செல்லுகிறதென்கிற விஷயத்தில் விவாதமில்லாமையாலே நித்தியாளுக்குண்டான அநாதியான ஸ்வரூப ஆவிர்ப்பாவமும் பகவதிச்சாதீநமென்றபடி[595].]

(அவதாரிகை.) அந்த நித்தியஸூரிகளைக் காட்டிலும் இவன் விலக்ஷணனுகைக்கடியான இவனுடைய ஹேதுத்வம் சொல்லப்படும்.

வம்சவர்த்தநஃ=கீழ்ச்சொன்ன தனது ஸந்தாந பூதர்களான நித்திய ஸூரிகளினது வம்சத்தை வளர்ப்பவன்.

பாரப்ருத்=முக்தாளுடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குகையும், அவர்கள் ஸ்வரூபத்தை ஆவிர்ப்பவிக்கச் செய்கையும்,

(அ.) ஸ்வாஸ்யஃ—அழகிய முகமுடையவன்.

594 నైవం భగవతః స్వాభావిర్భావాత్ ॥

595 తథాష్టగుణ మైశ్వర్యం నాధస్యాభావి కంపరమ్ । నిరస్తాతిశయం యస్య తస్యాస్త్యాను కీర్తనమ్ ॥

[కథితో యోగీ యోగీశస్సర్వకామదః । ఆశ్రమశ్శ్రమణః]

కథితః-சொல்லப்பட்டவன், యోగీ - ஸம்பவிக்கப்பெற்றவன், యోగీశః - யோகிகட்கீசன், సర్వకామదః - ஸாவகாமங்களையுந் தந்தவன், ఆశ్రమః-இளைப்பாறுமிடமானவன், శ్రమణః-அப்பிய ஸிக்கச்செய்பவன்,

(வி) தின்னேறு சோத்துசகொள்ளுகையுமென்கிற அவாகளபாரத்தைவஹிப்பவன். கதிதः—கீழ்ச்சொன்னவைகளும் மேலேசொல்லப்போகிறவைகளுமான குணங்களோடுகூடி விளங்குவதாக ஸகல சாஸ்திரங்களாலும சொல்லப்பட்டவன்[596].

யோகி—இவையெல்லாம ஸம்பவிக்கக்கூடியவன். சேராதவைகளையெல்லாம சேர்ப்பிக்கை யென்கிற மஹாவைபவமுண்டாயிருக்கப்பெற்றவன்.

யோகீச:—ஸநகாதிகளான யோகிகளுக்கெல்லாம் தூரந்தான்[597].

ஸர்வகாமத:—யோகத்தினின்றும் நழுவினவர்களுக்கும் அணிமாதி ஸகல பலன்களையும் இடையுறாகத் தருமவன்.

ஆச்ரம:—அவாகளை அந்த அணிமாதிகளினின்று நிவ்ருத்தரானபொழுது, ப்ரம்மவித்தை யபேக்ஷடமா யுண்டாவதற்கிடமான ஸ்ரீவைஷ்ணவ கிருஹங்களில் அவாகளுக்குப் பிறவியைத் தந்து இளைப்பாறச்செய்பவன்[598]. ச்ரமண:-இப்படி அந்த யோகப்பிரஷ்டர்கள் அணிமாதிபலன்களை அநுபவித்தும், மஹான்

(அ) ச்ரமண:—அவிவேகிகளை சிரமப்படுத்துமவன்.

கதித:—வேதாதிகளாலே இவனொருவனே பானென்று சொல்லப்பட்டவன்.

யோகீ:—ஞானத்தாலே அடையக்கூடியவன்.

யோகீச:—இதரயோகிகளைப்போல் தனது யோகத்தினின்றும் நழுவாமையாலே யோகீசன்.

ஆச்ரம:—ஸம்ஸாரமென்னும் பெருங்காட்டில் வருந்தியவருக்கு இளைப்பாறுமிடமானவன். ச்ரமண:—அவிவேகிகளை வருத்துமவன்.

596 వేదేషు సపురాణేషు సాఙ్గోపాఙ్గేషు గీయసే ॥
వేదే రామాయణే పుణ్యే భారతే భరతర్షభ ।
ఆదౌ మధ్యే తథాఽన్తే చ విష్ణుస్సర్వత్ర గీయతే॥

597 సనన్దనాదిభిః అపకల్మషైః మునీంశ్చ కారభూయోఽభిపవిత్రితంపదమ్ ॥

598 శుచీనాం శ్రీమతాం గేహే యోగభ్రష్టోఽభిజాయతే ॥

[క్షామస్సుపర్ణో వాయువాహనః ॥ ధనుర్ధరో ధనుర్వేదో దండో]

క్షామః - ஸமர்த்தமாக்குமவன், సుపర్ణః - கரைசேர்ப்பவன், వాయువాహనః - வாயுவால் கொண்டுபோகப்படுமவன், ధనుర్ధరః - விற்பிடித்தவன், ధనుర్వేదః - வில்வித்தைகற்பிப்பவன், దండః - தண்டிப்பவன்,

---

(வி.) களின் கிருஹங்களில், பிறந்தும் மிகுந்தபட்ட ஸம்ஸ்காரத்தாலே அந்தஜந்மத்திலும் அநாயாஸமாய் ஸமாதியை அப்பியஸிக்கச் செய்பவன்[599].

க்ஷாமঃ—இப்படி தனது யோகத்தில் திரும்பின மாத்திரத்திலேயே அவர்கள் யோகப் பிரஷ்டர்களாயிருக்கச்செய்தேயும் துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்ள சக்தராகச் செய்பவன்[600].

ஸுபர்ணঃ—இப்படி ஸமாதியிலே நைபுணத்தவர்கள் சுகமாய் தமஸ்ஸினது கரையைச்சேருமபடி கொண்டுவிடுத்துமவன்[601].

வாயுவாஹநঃ—அவர்கள்தான் பிரபல ஹேதுக்களால் பதிதாளாக ஆய்விட்டால் அவர்களை அதிவேகசாலியான கருடனைக் கொண்டு உத்தரிப்பவன்.

[இப்படியே பரமபாகவதனுன வஸுவானவர், பரமர்ஷி சாபத்தால் அதோகதியாய்ப்போக நேரிட, அவருக்குக் கருடனைக்கொண்டு மறுபடியும் உச்சகதியை உண்டாக்குவித்ததாய் ஸ்ரீவிஷ்ணுதத்வத்தில்பிரஸித்தம்[602].]

தநுர்த்தரঃ—இப்படிப்பட்ட உபாஸகாளுடைய விரோதிகளைப் போககு நிமித்தம் தானே கையும் வில்லுமாய் வருமவன்[603].

தநுர்வேதঃ—மற்றுமுண்டான சுரங்ரேகதிராதிகளும தநுர்வித்தை முதலியவைகளைத் தன்னிடத்தில் பெறும்படி அந்தந்த சாஸ்திரங்களுக்குப் பிரவர்த்தகனுனவன்.

தண்டঃ—வேததர்மங்களுக்கு ரக்ஷகனுன ராஜாக்கள்மூலமாய் தண்டநீதியைக்கொண்டு துஷ்டாளை நிரஸிப்பவன்.

---

(அ.) ஸுபர்ண:—ஸம்ஸாரமென்னும் விருக்ஷரூபியானதனக்கு வேதமென்னும் இலைகளுடையவன்.

---

599 తత్ర తం బుద్ధిసంయోగం లభతే పౌర్వదేహికమ్ ॥

600 నహి కల్యాణకృత్ కశ్చిద్ దుర్గతిం తాత గచ్ఛతి ॥

601 స్వపారం భగవాన్ నయతి ॥

602 అథ శాపక్షీణోఽ తూర్ణమాగత్యైనం వినశ్వరపదమ్ । నేష్యతి ॥

603 ధార్యతే క్షత్రియైశ్చాపో నాఽఽర్తశబ్దో భవేదితి ॥

[దమయితా దమః ॥ అపరాజితస్సర్వసహో నియంతా
నియమోయమః ॥ సత్త్వవాన్ సాత్త్విక]

దమయితా-அடக்குஞ்சீலன், అదమః - தன்னை யடக்குவாரொருவரில்லாதவன், అపరాజితః பிறரால் ஜயிக்கப்படாதவன், సర్వసహః ஸகலத்தையும் ஸஹிப்பவன், నియన్తా - ஆள்பவன், నియమః - கொடுப்பவன், యమః - நியமிப்பவன், సత్త్వవాన్ - ஸத்வமுடையவன், సాత్త్వికః-ஸத்வத்துக்கேற்றவன்,

---

(வி.) தமயிதா—தானும் அப்படியே ராவணாதிகளை நேரில் எடுத்துவிட்டு சிக்ஷிக்குந்தன்மையன். அதம:—தனக்கும் இப்படி ஒருவனுண்டாயிருக்கப்பெறாது நிரங்குசமாய் விளங்குமவன்[604].

அபராஜித:—இப்படி ஸர்வதோமுகமான தனது ஆக்ஞையைச் செலுத்தும்பொழுது ஓரிடத்திலும் ஒருகாலத்திலும் ஒருவராலும் அபஜயமடையாதவன்[605].

ஸர்வஸஹ:—மந்தாதிகாரிகள் ஆராதிக்கும்படியான தேவதாந்தரங்களைத் தனது ஆக்ஞைகொண்டு பரிப்பவன்.

நியந்தா—அத்தேவர்களை ஆச்ரயித்தோருக்கு அவர்களிடத்தில் சிரத்தையுண்டாகும்படி செய்பவன்[606].

நியம:—அத்தேவர்களைக்கொண்டு அவர்களுக்கு ஜாதி, ஆயுஸ், போகம், முதலியவைகளைத் தருமவன்[607].

யம:—அந்தந்த பலன்களுக்கு நியாமகாளான யமன்முதலானோரையும் அடக்கி ஆள்பவன்[608].

(அவதாரிகை.) இப்படி ரஜஸ்தமஸ்ஸுக்களை அடக்கும்படி சொல்லிற்று; இனிஸத்வத்தை வளர்க்கும்படி சொல்லுகிறது.

ஸத்வவாந்—மோக்ஷகாரணமான ஸத்வத்துக்குத் தானே அதிஷ்டாதாவாயிருக்கையாலே ஸத்வமுடையவன்[609]. ஸாத்விக:—ஸாத்விகமான தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வரியம், ரூபம், பலம் இவைகளுக்கு நியாமகனாகையாலே ஸத்வகுணத்துக்கேற்றவன்.

---

[604] భస్మకుర్యాజ్జగత్సర్వం మనసైవ జనార్దనః । నతు కృత్స్నం జగచ్ఛక్తః కిఞ్చిత్ కర్తుం జనార్దనే ॥

[605] దాశార్హమపరాజితమ్ ॥

[606] యో యో యాం యాం తనుం భక్తః శ్రద్ధయార్చితుమిచ్ఛతి ॥

[607] లభతే చ తతః కామాన్ మయైవ విహితాన్ హి తాన్ ॥

[608] ప్రభవతి సంయమనే మమాపి విష్ణుః ॥

[సత్యస్సత్యధర్మపరాయణః। అభిప్రాయః
ప్రియార్హోఽర్హః ప్రియకృత్ప్రీతివర్ధనః ॥]

సత్యః - யதார்த்தமானவன், సత్యధర్మపరాయణః - ஸத்யமான தருமத்தில் பரமப்பிரீதிபண்ணுமவன், అభిప్రాయః - இஷ்டப்பட்டவன், ప్రియార్హః - பிரியத்துக்கேற்றவன், అర్హః - தகுந்தவன், ప్రియకృత్ - பிரியஞ்செய்பவன், ప్రీతివర్ధనః - பிரீதியைவளர்ப்

(வி) ஸத்யः—ஸாத்விகசாஸ்திரங்களில் பிரதிபாதிக்கப்படுகையாலே யதார்த்தமான ஷுவபவசாலி. அல்லது பாரதத்திலே[610] சொல்லுகிறபடி, ஸத்தியத்தில் பிரதிஷ்டிதனாய் ஸத்தியத்திற்குப் பிரதிஷ்டாபகனுயிருக்கையாலே ஸத்யனென்னப்படுமவனென்றுமாம். ஸத்யதர்மபராயணः—ஸாத்விகமான அதிகாரியையும் பலத்தையுமுடையதான தர்மமானது, நிருபாதிகமாய்க்கொண்டு. தனக்கு ரொம்பவும் பிரீதிஹேதுவாயிருக்கப்பெற்றவன்.

அபிப்ராய—ஸத்திய தர்மத்தில் நிஷ்டையுடைய மஹாத்மாக்களால் நிருபாதிகமாய்விரும்பப்படுமவன். ப்ரியார்ஹ—இப்படி தனக்கென்று அற்றுத்தீர்ந்தவர்களை ஸ்வயமேரொம்ப . . ம் உகப்பவன்.

[ஏகபக்தியா யிருப்பாரிடத்தில் எம்பெருமானுக்குத் தனக்குத்தானே பிரீதியுண்டாய் விடுகிறதன்றோ? அர்த்தகாமரிடத்திலும் ஆத்மப்ராப்திகாமாளிடத்திலும், அவாள் தன்னைப் பிரார்த்திதாரர்களே யென்கிற ஔதாரியத்தாலே பிரீதிபண்ணுகிறானித்தனையேயன்றோ?[611].]

அர்ஹः—மற்றொன்றை யுண்ணாதே மாதவனுக்காட்செய்யவே வேணுமென்று உளந்தெளிந்த அவர்களுக்கும் தானே தகுந்திருப்பவன்[612]. ப்ரியக்ருத்—இதரப் பிரயோஜனத்தை அபேக்ஷித்துத் தன்னை அடைந்தோரையும அவர்களிஷ்டத்துக்குத் தக்கபடி நடந்து அவர்களுக்கும நல்லனாயிருப்பவன். ப்ரீதிவர்த்தனः—அப்படியே அவர்களுக்கு மென்மேலும் குணங்களைக்காட்டித் தன்னிடத்தில் பிரீதியுண்டாகுமபடி செய்துக்கொள்பவன்[613].

[609] మహాన్వైభుర్వైపురుషస్సత్త్వస్యైషప్రవర్తకః ॥

[610] సత్యేప్రతిష్ఠితఃకృష్ణస్సత్యమస్మిన్ప్రతిష్ఠితమ్ । సత్యాసత్యేచగోవిన్దస్తస్మాత్సత్యస్సతాంస్మృతః ॥

[611] తేషాంజ్ఞానీనిత్యయుక్తః ఏకభక్తిర్విశిష్యతే ॥ ఉదారాస్సర్వఏవైతే ॥

[612] ఆస్థితస్సహియుక్తాత్మా మామేవానుత్తమాంగతిమ్ ॥

[613] భజతాంప్రీతిపూర్వకమ్ । దదామిబుద్ధియోగంతమ్ ॥

[విహాయసగతిర్జ్యోతి-స్సురుచిర్హుత-భుగ్విభుః । రవిర్విరోచన]

பவன், విహాయసగతిః - ஆகாசகதியைத்தருமவன், జ్యోతిః - சோதியானவன், సురుచిః - பகலானவன், హుతభుగ్విభుః-சந்திரனால் பூரணமானபக்ஷத்தையுடையவன், రవిః - கொண்டாடப்படுமவன், విరోచనః-கூட்டுமவன்,

---

(வி.) விஹாயஸகதிः= அப்படிப்பந்தியினது பரமாவதியில் நிலைநின்ற மஹான்களுக்கு கதியாகப் பரமாகாசத்தைத் தருமவன்[614].

(அவதாரிகை.) அநந்தரம் அவர்கள் பரமபதத்திற் கெழுந்தருளுவதற்கு ஸோபானமாய் விளங்கும் அர்ச்சிராதிகதி சொல்லப்படுகிறது. பிரம்மநிஷ்டனான அதிகாரியினது உபாஸநத்துக்கு முகமலர்ந்த பகவான், அவனைப் பரமபத மேறக் கொண்டுசெல்லுகைக்காக அர்ச்சிராதிகளான சில தேவதைகளை நியமிக்கிறானன்றோ? அந்தகதியில் பிரதமபதமான அர்ச்சிஸ் சொல்லப்படுகிறது.

ஜ்யோதிः= அர்ச்சிஸ் என்கிற முதல்பதத்தை நியமிப்பவன்[615]

ஸுருசிः— அநந்தரம் அஹஸ் என்கிற நற்பகலை நியமிப்பவன்[616].

ஹுதபுக்விபுः=(அமுதமாய் பரிணமிக்கும் ஹுத த்ரவியத்தைப் புசிக்கின்ற சந்திரனுக்குப் பூர்த்தியுண்டுபண்ணும் சுக்கிலபக்ஷாபிமானியானவன்[617].

ரவிः— சித்திரையினின்றும் எழுந்திருக்கும் காலமாகையாலே உத்தராயணத்தில் கொண்டாடப்படுமவன். என்றால்:— ஷண்மாஸாத்மகமான உத்தராயணாபிமானி தேவதையைச் சொன்னபடி.[618]

விரோசநः= அநந்தரம அங்கங்களின்வழியே ஆதித்தியனோடு கொண்டுசேர்க்கும ஸம்வத்ஸராபிமானியானவன[619].

---

(அ) விபு:— எங்கும் பரந்தவன்.
ரவிலோசந:— சூரியனை நேத்திரமாயுடையவன்.

---

614 భుక్త్వాచ భోగాన్ విపులాంస్త్వమన్తే మత్ప్రసాదతః। మమానుస్మరణంప్రాప్య మమలోకే నివత్స్యసి ॥

615 తేఽర్చిషమభిసమ్భవన్తి ॥

616 అర్చిషోఽహః ॥

617 అహ్న ఆపూర్యమాణపక్షః ॥

618 ఆపూర్యమాణపక్షాద్యాన్ షడుదఙ్ఙేతి మాసాన్ ॥

619 మాసేభ్యః సంవత్సరం ॥ సంవత్సరాదాదిత్యం ॥

[సూర్యస్సవితా రవిలోచనః ॥ అనంతహుత
భుగ్భోక్తా సుఖదో నైకదో౽గ్రజః ॥]

సూర్యః - செய்பவன், సవితా - உண்டுபண்ணுமவன், రవిలో చనః-சூரியன்வழியேசெல்பவன், అనంతహుతభుగ్భోక్తా-அதிகமஹி மைபொருந்திய ஹோமபோக்தாவையும் பரிபாலகனையு முடையவன், సుఖదః - சுகத்தைத்தருமவன், నైకదః - அநேகந் தருமவன்,

(வி.) ஸூர்ய:=எங்குந்திரியுந் தன்மையுள்ள வாயுலோகாபிமானி யானவன். ஸவிதா—சூரியனுமவன்620.

[ஸம்வத்ஸராபிமானி ஆதித்தியனோடு சேர்ப்பதும் வாயுலோகத்தின் வழியாகத்தானென்று 621ஸூத்திரகாரரும் நிஷ்கர்ஷிக்கையாலே இங்கும் வாயுவைச்சொல்லி மேலே ஆதித்தியனைச் சொல்லுகிறதென்று கண்டு கொள்வது.]

ரவிலோசந:=சூரிய கிரணத்வாரா சந்திரன், மின்னல், வருணன் முதலானோரிடம்கொண்டு நடத்துமவன்622.

அநந்தஹுதபுக்போக்தா=அதிக மஹிமைசாலிகளான, ஹுதபோக்தாவையும் பாலனஞ்செய்பவனையு முடையவன்.

[என்றால்:—யாகாதிகளில் ஹோமம்பண்ணப்படும் ஹவிஸ்ஸைப் புசிக்கின்ற இந்திரனையும், ஸகலப் பிரஜைகளையும் பரிபாலிக்கின்ற பிர ஜாபதியையுங்கொண்டு சேரப்பவனென்றபடி. இதுவேயன்றோ அநந் தரக்ரமம்?623.]

ஸுகத:=அமாநவர் திருக்கைகளாலே பரிசிக்கச்செய்து ஸம்ஸாரத் தை வாஸனையோடு போக்கடித்து ஸ்வப்ராப்தியென்னும் சுகத்தைத்தரு மவன்624. நைகத:=பலவுங்கொடுப்போரை யுடையவன்.

[என்றால்—அபரிமிதமான திவ்யமாலை, திவ்யாஞ்சநம், திவ்யவஸ்திரம் தொடக்கமானப் பிரம்மலங்காரத்தை யெடுத்துக்கொண்டு முக்தனை யெதிர்கொண்டுவரும் திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் பலருண்டா யிருக்கப்பெ ற்றவன்625.]

(அ.) நைகஜ:—தர்ம பாலனத்திற்காகப் பல்படியாய் பிறப்பவன்.
அக்ரஜ:—முதலிற் பிறந்தவன்.

620 సంవత్సరాదాదిత్యమ్ ॥ 621 వాయుమబ్దాదవిశేషవిశేషాభ్యామ్ ॥
622 ఆదిత్యాచ్చన్ద్రమసమ్ చన్ద్రమసో విద్యుతమ్ ॥ స వరుణలోకమ్ ॥
623 స ఇన్ద్రలోకమ్ స ప్రజాపతిలోకమ్ ॥
624 తత్పురుషో౽మానవస్స ఏనాన్ బ్రహ్మ గమయతి ॥
625 తం పఞ్చశతాన్యప్సరసాం ప్రతిధావన్తి శతం మాలాహస్తాః శతమాఞ్జనహస్తాః ॥

[అనిర్విణ్ణస్సదామర్షీ లోకాధిష్ఠానమద్భుతః ॥
సనాత్సనాతనతమః కపిలః కపిరవ్యయః]

అగ్రజః - முன்னே விளங்குமவன், అనిర్విణ్ణః - மனவருத்தமற்றவன், సదామర్షీ - எப்போதும்ஸஹிப்பவன், లోకాధిష్ఠానమ్ - லோகத்துக்கெல்லாம் அதிஷ்டானமானவன், అద్భుతః - ஆச்சரியபூதன், సనాత్ - ஸேவிக்கப்படுமவன், సనాతనతమః - எங்ஙாளும்புதுசானவன், కపిలః - பொற்கந்தவர்ணன், కపిరవ్యయః - நித்தியாநந்தத்தை அநுபவிப்பவன்,

(வி.) அக்ரஜ:=இப்படி ஆச்ரிதநிகதியாலேசென்றுகிட்டின முக்தர்களுக்குஎதிரே,ஸகலஐசுவரியரூபையானபிராட்டியுடன்கூடி,பரியங்கவித்தையிற் சொன்னபடிபரமபோக்கியமாய் ஸேவைஸாதித்து விளங்குமவன்[626].

அநிர்விண்ண:=இப்படி ஆச்ரிதரை மஹத்தான ஸம்ஸாரமென்னும் பெரும்பள்ளத்தினின்றும் கரையேற்றித் தன்தாளின்கீழ்ச்சேர்த்து அவனைச் சோகப்படாமலிருக்கக்காண்பதனால், தான்துயர்நீங்கியிருப்பவன்[627].

ஸதாமர்ஷீ=அதுமுதல் ஸர்வகாலமும் அவன் தான்பெற்றபேற்றுக்குப் பதிலாகச்செய்யும் பணிகளையெல்லாம் திருவுள்ளம்பற்றுமவன்[628].

லோகாதிஷ்டானம்—முக்த புருஷர்களுக்குப போக்கியமான உத்தம லோகங்களுக்கெல்லாம் அதிஷ்டானமானவன்[629].

அத்புத:=அவ்வுலகங்களிலும் எப்போதும் எல்லோரும் எல்லாப் பிரகாரங்களாலும் அநுபவித்தாலும் அப்போதைக்கப்போ புதிதாய்த்தோன்றி அத்தியாச்சரியத்தை உண்டுபண்ணுமவன்.

ஸநாத்=இப்படி அவர்களால் அநுபவிக்கப் படுமவன்.

ஸநாதநதம:=எப்போது முண்டாயிருந்தாலும் அப்போதுதான் தோன்றினதுபோல் எப்போதும் போக்கியமாய் விளங்குமவன்.

கபில:=மின்னல் தொகையின் நடுவில் விளங்கும காளமேகம்போன்ற திருமேனியோடு விளங்குமவன். கபிரவ்யய:=தானும் அக்ஷயமான ஆநந்தத்தைப பாநம்பண்ணிப்போருமவன்.

நவமசதகம் - ஸம்பூர்ணம்.

(அ.) கபில.—படபாநலம் பிங்களவர்ணமாகையாலே தத்ரூபியானவன்.

తం బ్రహ్మాలఙ్కారేణాలఙ్కుర్వన్తి ॥

[626] సఆగచ్ఛత్యమితౌజసం పర్యఙ్కమ్ ॥ ఉపబ్ర్ంహణం తస్మిన్ బ్రహ్మాస్తే తమిత్థంవిత్ పాదేనైవాగ్ర ఆరోహతి । తం బ్రహ్మాహ కోஉసీతి ॥ సాయా బ్రహ్మణోజితిర్యా వ్యష్టిః తాం జితిం జయతి తాం వ్యష్టిం వ్యశ్నుతే ॥

[627] కృతకృత్యస్తదారామో విజ్వరః ప్రముమోద హ ॥

[628] సోஉశ్నుతే సర్వాన్ కామాన్ సహ బ్రహ్మణా విపశ్చితా ॥

[629] అనుత్తమేషూత్తమేషు లోకేషు ॥

ஸ்ரீ:

# தசமசதகம்.

[స్వస్తిదస్స్వస్తికృత్స్వస్తిస్స్వస్తిభుక్స్వస్తిదక్షిణః ॥
అరౌద్రఃకుండలీచక్రీవిక్రమ్యూర్జితశాసనః । శబ్దాతిగ]

స్వస్తిదః-மங்களந்தருமவன், స్వస్తికృత్-ஆசிர்வதிப்பவன், స్వస్తి-மங்களரூபன், స్వస్తిభుక్-மங்களத்தைப்பாதுகாட்பவன், స్వస్తిదక్షిణః-மங்களமே தக்ஷிணையாகக்கொண்டவன், అరౌద్రః-குளிர்ந்தவன், కుండలీ - குண்டலந்தரித்தவன், చక్రీ - சக்கிரமுடையவன், విక్రమీ - பராக்கிரபசாலி, ఊర్జితశాసనః - பெலத்த ஆக்ஞையுடையவன், శబ్దాతిగః- சொல்லேக்கடந்தவன்,

---

(வி) ஸ்வஸ்தித:=இப்படி மஹத்தான மங்களத்தைத்தருமவன்.

ஸ்வஸ்தி க்ருத்=தனது திருக்கல்யாணகுணங்களாலே தனது போகத்துக்கு க்ஷேமத்தைச்செய்து கொள்பவன்.

ஸ்வஸ்தி=தானே மஹத்தான மங்களரூபமானவன்.

ஸ்வஸ்தி புக்=இந்த மங்களத்தையெல்லாம பரிபாலிப்பவன்.

ஸ்வஸ்தி தக்ஷிண:=தனது பரிசரிஷயக்கேற்ற திவ்யசரீரம், திவ்யசக்திமுதலிய மற்றும் மங்களங்களை, தனது திவ்யாத்மஸ்வரூபத்தைத் தருவதென்கிற மஹாயாகத்திற்கு ரித்விக்குக்களாய் விளங்கும் சூரிகளுக்கு தக்ஷிணையாய் வழங்குமவன்.

அரௌத்ர:—பரமைசுவரிய மிருக்கச் செய்தேயும் குணங்களாலே ரொம்பவுங் குளிர்ந்திருந்தமையாலே தணிந்திருப்பவன்.

குண்டலீ=இதற்கேற்க நித்தியமாய் விளங்கும் குண்டலம்முதலான திவ்யபூஷணங்களணிந்தவன். சக்ரீ=அப்படியே அவற்றிற்கேற்ற திவ்யாயுதந்தரித்தவன். விக்ரமீ=காம்பீர்யத்துக்கேற்ற விலாஸம்பொருந்தியவன்; ஊர்ஜிதசாஸந:=பிரமமேந்திராதிகளிலே கடக்கப்போகாத திவ்யாக்ஞைசெய்பவன். சப்தாதிக:=அனேக நாக்குகளுடன்கூடிய அநந்தனுலும், அநந்த சாகைகளோடுகூடின வேதங்களாலும், ஸாக்ஷாத் ஸரஸ்வதியாலும் இப்படியென்று உதகரித்துச் சொல்லப்போகாத மஹிமை பொருந்தியவன்.

---

(அ) ஸ்வஸ்திதக்ஷிண:—மங்களத்தைச் சீக்கிரம் அளிப்பதில் தானே வல்லவன். அரௌத்ர:—கருமம, ராகம், கோபம் என்கிற ரவுத்திரங்கள் மூன்றும் அற்றவன்.

சப்தாதிக.—சப்தங்கள் பிரவர்த்திப்பதற்கு ஹேதுவான ஜாதிமுதலியவைகளில்லாமையாலே சப்தத்தைகடந்தவன்.

[శబ్దసహః శిశిరశ్శర్వరీకరః॥ అక్రూరః
పేశలో దక్షో దక్షిణః క్షమిణాంవరః]

శబ్దసహః-சப்தத்தைச்சகித்தவன், శిశిరః-சீக்கிரஞ்செல்பவன். శర్వరీకరః - ஸம்ஸாரியையும் ஞானியையும் கைக்கொண்டவன், అక్రూరః-அறுக்காதவன், పేశలః -ரமணீயன், దక్షః - விரைபவன், దక్షిణః- அநுகூலன், క్షమిణాంవరః-பொறுப்பவரில்சிறந்தவன்.

(வி) (அவதாரிகை) அநந்தரம் கஜேந்த்ரமோக்ஷம் சொல்லுகிறது.

சப்தஸஹ:=ஸ்பஷ்டமாய் உச்சரிக்கவுமாட்டாத திர்யக்ஜாதியில் பிறந்தோர்களானாலும் ஆர்த்தியோடு கூப்பிட்டார்களாகில் அந்த சப்தத்தைப் பெரும்பாரமாய்ச் சுமப்பவன்[630].

சிசிர:=ஆர்த்த சப்தம் செவிப்பட்டவுடனே அதித்வரையாய் ஓடிவருமவன்[631]. சார்வரீகர:=சத்ருஹிம்ஸை பண்ணவல்ல பஞ்சாயுதங் தரித்தவன். அக்ரூர:=கஜேந்த்ராழ்வானை விடுவிக்கவேண்டி ஆயுதங்கள் கையில்ஸித்தமாயிருக்கச்செய்தேயும் அவஸரப்பட்டுமுதலையை அறுக்காதவன்.

[இப்படியே, முதலையுடன்கூட கஜேந்த்ராழ்வானைக் கரையிலேற்றி அநந்தரம் விடுவித்ததாகச் சொல்லுகிறது[632].]

பேசல:=அதிக பரபரப்போடெழுந்தருளுகிறபோது, திருமாலை, திருவாபரணம்,திருபீதாம்பரங்கள் அலைந்து கலைந்திருக்கையாலே, அதிமநோஹரயாய் விளங்கினவன். தக்ஷ:=சீக்கிரம் எழுந்தருளினவன்.

தக்ஷிண:=தானிப்படி விரைந்தோடி எழுந்தருளியும் "என்னப்ரயோஜநம், ஸமயத்தில உதவப்பெறாமல் தூரத்திலிருந்த வெனனைப்பழிக்க வேணடும்" என்பதுபோலே சிலதிருமொழிகளை யருளிச்செய்து, கஜேந்த்ராழ்வானுக்கு, அநுகூலமாய் நடந்தவன்[633].

க்ஷமிணம்வர:=அவரைக்கண்டபின் தன் ஆற்றாமை தீருகையாலே பொறுமையுடையோரில் சிறந்தவன்.

(அ.) சர்வரீகர:—ஸம்ஸாரிகளுக்கு ஆத்மஞாநத்தையும் ஞானிகளுக்கு ஸம்ஸாரத்தையும் இரவாகச் செய்பவன்.

630 భక్తిం తస్యానువిన్దతి ॥

631 శ్రుత్వా చక్రగదాధరః । సాన్నిధ్యం కల్పయామాస తస్మిన్ సరసి ॥

632 గ్రాహగ్రస్తం గజేన్ద్రం చ తం గ్రాహం చ జలాశయాత్ । ఉజ్జహారాప్రమేయాత్మా తరసా మధుసూదనః ॥

633 ప్రీతిమాన్ పుణ్డరీకాక్షః శరణాగతవత్సలః । భజస్తం గజరాజానం మధురం మధుసూదనః ॥

[విద్వత్తమో వీతభయః పుణ్యశ్రవణకీర్తనః ॥ ఉత్తారణో దుష్కృతిహా పుణ్యో దుస్స్వప్ననాశనః । వీరహా రక్షణస్సన్తో జీవనం]

విద్వత్తమః-அறிந்தவரிற்சிறந்தவன், వీతభయః-பயத்தைப்போக்குமவன், పుణ్యశ్రవణకీర్తనః - கேட்டாலும் சொன்னாலும்பரிசுத்தமாக்குமவன், ఉత్తారణః-கரையேற்றினவன், దుష్కృతిహా-தீம்பு செய்ததை யழித்தவன், పుణ్యః - பரிசுத்திகரன், దుస్స్వప్ననాశనః - துஸ்வப்நத்தைப் போக்குமவன், వీరహా-வீரனைக்கொன்றவன், రక్షణః-இரக்ஷித்தவன், సన్తః - செவ்வையாக்கினவன், జీవనః-பிழைப்பிப்பவன்,

(வி.) வித்வத்தமः=அவருக்குச் செய்யவேண்டும் சிகித்ஸையில் கைவந்தவன்[634]. வீதபயः=தானெழுந்தருளும்பொழுதுண்டானசப்தம்செவிப்பட்ட மாத்திரத்தில் கஜேந்திராழ்வானுக்கு பயம்நீங்கும்படியானவன்.

புண்யச்ரவணகீர்த்தநः=இந்த கஜேந்திரமோக்ஷத்தைக் கேட்டாலும் கீர்த்தநம் செய்தாலும் அவர்கள் பாவமெல்லாம் தொலையும்படியானவன்[635]. உத்தாரணः=கஜேந்திர நக்கிரங்களிரண்டையும் கரையிலேற்றினவன்.

துஷ்க்ருதிஹா=அநந்தரம் துஷ்டமான முதலையைச்சக்கிரத்தால் அழித்தவன்[636]. புண்யः=இந்தகீர்த்தியாலே நம்மைக்கூட பரிசுத்தியாகச் செய்பவன். இப்படிப்பட்டவன் தானென்னில்.—துஸ்வப்நநாசநः—துஸ்வப்நங்களையெல்லாம் போக்கடிப்பவன்[637].

வீரஹா=கஜேந்திரனை வருத்திய வீரமான முதலையை நாசப்படுத்தினவன்[638], ரக்ஷணः=அவரைப் பரிசித்தும், ஆலிங்கநம் செய்தும், நல்வார்த்தைசொல்லியும் ரக்ஷித்தவன். ஸந்தः=இப்படி ஆச்ரிதரை வளர்க்கிறவன். ஆச்ரிதருக்கு இஷ்டத்தைத் தருமவனென்றுமாம்.

ஜீவநः=தனது திருக்கைகளால் கொல்லுகையாலே முதலையைக் கூட கந்தர்வனாகும்படி பிழைப்பித்தவன்[639].

(அ.) வீதபய:—ஸம்ஸாரமென்னும் பயம்நீங்கினவன்.
வீரஹா—ஸம்ஸாரிகளுடைய நாநாவித சக்திகளையும் போக்கடித்தவன்.

634 ఏవముక్త్వా కురుశ్రేష్ఠ గజేన్ద్రం మధుసూదనః । స్పర్శయామాస హస్తేన ॥

635 శ్రుతేన హి కురుశ్రేష్ఠ స్మృతేన కథితేన వా । గజేన్ద్రమోక్షణేనైవ సద్యః పాపాత్ ప్రముచ్యతే ॥ 636 స్థలస్థం దారయామాస గ్రాహం చక్రేణ మాధవః ॥

637 యే మాం త్వాం చ సరశ్చైవ ॥ ఇత్యుపక్రమ్య ॥ దుస్స్వప్నో నశ్యతే తేషామ్ ॥

638 మోక్షయామాస నాగేన్ద్రం పాశేభ్యశ్శరణాగతమ్ ॥

639 స హి దేవలశాపేన హూహూర్గన్ధర్వసత్తమః । గ్రాహత్వమగమత్ కృష్ణాద్వధం ప్రాప్య దివం గతః ॥

[పర్యవస్థితః ॥ అనంతరూపోఽనంతశ్రీర్జితమన్యుర్భయాపహః ।
చతురశ్రో గభీరాత్మా విదిశో]

పర్యవస్థితః - சுற்றுமிருப்பவன்; అనన్తరూపః - அளவற்றரூபந் தரித்தவன், అనన్తశ్రీః - அளவற்றஐசுவரியமுற்றவன், జితమన్యుః - கோபத்தை ஜயித்தவன், భయాపహః - பயத்தைப்போக்கடிக்குமென்றெண்ணத்தக்கவன், చతురశ్రః - சதிராகச்செய்பவன், గభీరాత్మా - கெம்பீரஸ்வபாவன், విదిశః - திசைகளிலிருக்கும்படியானவன் వ్యాదిశః - ஏவுகிறவன்,

(வி.) பர்யவஸ்திதஃ—வாத்ஸல்யாதிசயத்தாலே கஜேந்திராழ்வானைச்சுற்றிச்சுற்றி வருமவன்[640].

அநந்தரூபஃ—இப்படி ரக்ஷணத்தில் ஸம்பாதிக்கக்கூடிய அநந்த திவ்யரூபங்கள் தரிப்பவன். அநந்தஸ்ரீஃ—அவர்களுக்குத் தரும்படி அநந்தமான ஐசுவரியமுமுடையவன்[611]. ஜிதமந்யுஃ—சரணாகதரான கஜேந்திராழ்வானுக்குப் பகையான நீர்ப்பூச்சியினிடத்திலுண்டான கோபத்தை அநந்தரம் ஜயித்தவன்.

பயாபஹஃ—இவ்வளவு வாத்ஸல்யமுடையனாகையாலே 'நம்மைக்காக்கும்படியான நாதனொருவனில்லையே' யென்கிற நம்முடையபயத்தையும் போக்கடிப்பவன்[642].

சதுரச்ரஃ—தனது மஹிமைக்குத் தக்கபடி கர்ஜித்த கஜேந்திரனிடத்திறகு திவ்யபூஷண திவ்யாம்பராதிகள் கொலையும்படி ஓடிவந்தானாகிலும், அற்பமான ஓர் நீர்பூச்சியின்மீது சீறினானாகிலும் செய்தசெயல் யுக்தமாயிருக்கும்படி செய்தவன்.

[ஆச்ரித விஷயத்தில் பரபரப்பும், ஆச்ரிதவிரோதிவிஷயத்தில் அதிக சீற்றமும் யுக்தமேயன்றோ?]

கபீராத்மா—இப்படி கஜேந்திராழ்வானைப்போல் சரணாகதரல்லாதார் சதுர்முகாதிகளானாலும், அவாளால், தான் இருந்தவிடத்தினின்று சிறிது அசைக்கவும் போகாத கம்பீரஸ்வபாவன்.

விதிசஃ—அதிவிநயமாய் கத்கதஸ்வரத்தோடுகூடித் துதிசெய்யும் அந்தப்பிரம்மாதிகளின் வாக்குக்கு எட்டாத திக்கிலிருப்பவன். வ்யாதிசஃ—அவர்களுக்கு இஷ்டமான அந்தந்தப்பிரம்மாதி பதத்தைத்தருமவன்.

(அ) அநந்தரூப:—அநந்தமான பிரபஞ்சரூபமாயிருப்பவன்.

அநந்தஸ்ரீ:—அநந்தமான சக்தியையுடையவன். விதிச:—விவிதமான பலன்களையும் அவ்வவற்றைக் கோரியவருக்கு அளிப்பவன்.

610 ప్రీతిమాన్ పుండరీకాక్షః శరణాగతవత్సలః ॥

641 తతో దివ్యవపుర్భూత్వా హూహూః స్వర్గాత్ పరమాం గతిమ్ । జగామ ॥

642 భయే మహతి మగ్నాంశ్చ త్రాతి నిత్యం జనార్దనః ॥

[వ్యాదిశోదిశః। అనాదిర్భూర్భువోలక్ష్మీస్సు
వీరోరుచిరాంగదః। జననోజనజన్మాదిః ]

దిశః - ஆஜ்ஞாபிப்பவன், అనాదిః - ஆதரிக்கப்படாதவன், భూర్భువః - ஸத்தையைப்பெறுமவருக்கிடமானவன், లక్ష్మీః - ஸர்வஸம்பத்துமானவன், సువీరః - நல்வீரன், రుచిరాంగదః - அழகிய அங்கத்தைக் கொடுப்பவன், జననః - பிறப்பிக்குமவன், జనజన్మాదిః - ஜநங்களின் ஜந்மத்துக்கு ஆதியானவன்,

(வி) திசः—மஹேந்திரனைப்போல் அவர்களை அந்தரங்கமாக்கிக்கொள்ளாமல் மற்றபடி ஆஜ்ஞாபிப்பவன்[643].

(அவதாரிகை.) இப்படி திர்யக்ஜாதியிற் பிறந்தாலும் பக்தர்களாகில அவர்களுக்கு வசப்பட்டிருப்பவன்; பிரம்மாதிகளுக்கு அற்பபலத்தையே தருவதற்குக் காரணமென்னென்னில்:—

அநாதி:—ஸ்வீகரிக்கப்படாதவன்.

[என்றால்:—அவர்கள் அந்யபரராய்க்கொண்டு இவனை ஸ்வாமியாக ஸ்வீகாரமையாலே அற்பபலத்தோடே போக்கிவிடுகிறானென்றபடி.]

பூர்ப்புவ:—அவனுடைய தாஸ்யத்துக்கிசைகையாலே ஆத்மலாபம் உண்டாகப்பெற்றவருக்கு நிலையிடமானவன்[644].

லக்ஷ்மீ:-இப்படி அவர்களுக்கு ஸர்வஸம்பத்துமானவன்[645]

ஸுவீர:—அவர்களுக்கு க்ஷீணகதி நேரிடவொட்டாமல் ஸமர்த்திக்க வல்ல நல்வீரன். ருசிராங்கத:-அவர்களுக்கு அநுபவயோக்கியமாய் அதி மநோஹரமான தனது அங்கத்தைத்தருமவன்[646].

(அவதாரிகை) அநந்தரம் எம்பெருமானுடைய ஸகல வியாபாரங்களுக்கும் பிரயோஜநம் சொல்லுகிறது:—

ஜநந:—தன்னை அநுபவிப்பதற்கேற்ற கரணங்களுடையமற்றும் அநேகரை உண்டுபண்ணுமவன். ஜநஜந்மாதி:—அப்படிப்பட்ட அந்த ஜநங்களுடைய ஜந்மத்திற்குப் பயனானவன்[647].

(அ) அநாதி:—காரணமில்லாதவன். பூர்ப்புவ:—பூதங்களுக்கு ஆதாரன்.

[643]గజేన్ద్రమోక్షణంప్రాప్యసర్వేసేన్ద్రపురోగమాః। బ్రహ్మాణమగ్రతఃకృత్వాదేవాఃప్రశ్లయస్తదా। వవన్దిరేమహాత్మానంప్రభుంనారాయణంహరిమ్ ॥

[644]నివసిష్యసిమయ్యేవఅతఊర్ధ్వంనసంశయః ॥

[645]భవద్గతంమేరాజ్యంచ జీవితంచసుఖానిచ ॥

[646]నతేరూపమ్ ॥ ...భక్తానాం॥

[647]జన్మన్యపిఫలాన్యైకాయాగోవిన్దాశ్రయాక్రియా॥సుజన్మదేహమత్యన్తంతదేవాశేషజన్తుషు ॥ యదేనపుశకోద్యాపి విష్ణునామానికీర్తితే ॥ అద్యజన్మయథార్థాన్మై ॥

[భీమోభీమపరాక్రమః ॥ ఆధారనిలయో
ధాతాపుష్పహాసః ప్రజాగరః ।]

భీమః-பயங்கரன், భీమపరాక్రమః-பயங்கரமான பராக்கிரமன், ఆధార నిలయః - ஆதாரமானவர்க்கிடமானவன், ధాతా - தரிப்பவன், పుష్పహాసః - பூப்போல்மலருமவன், ప్రజాగరః - மிகவுமவிழிப்பான,

(வி) பீம:—அப்படிப்பட்ட மஹாநுக்கிரஹத்துக்கு ஆளாகாதவர்களுக்கு நரகாதிகளைத் தருகையாலே பயங்கரமானவன்.

[இவன்தான், தனக்கு அடிமையாய் உஜ்ஜீவிக்கையென்கிற தங்கள் ஹிதத்தைத் தேடிக்கொள்ளாத சேதநர்களைச் சத்துருவாக மதிப்பவனென்றோ[648]]

பீமபராக்ரம:—மற்றும் லோகத்துக்கு அஹிதம்செய்கின்ற ஹிரண்யாதிகள் விஷயத்தில் பயங்கரமான பராக்கிரமத்தைக் காட்டுமவன்

[இப்படி பயப்படுத்துகைதான், அநுக்கிரஹமேயல்லது நிக்கிரஹமாகமாட்டாது; ஏனெனில்:—பித்தம்பிடித்தவனை விலங்கிட்டுவைப்பது, அவனுக்கும், அவனால் தொந்திரவை அநுபவித்தோருக்கும் ஹிதமேயன்றோ?]

ஆதாரநிலய:=தார்மிகர்களாயிருக்கையாலே ஜகத்துக்கெல்லாம் ஆதாரரான பிரஹ்லாத விபீஷணபாண்டவாதிகளுக்கு உறைவிடமானவன்[649]. தாதா=இன்னும் தர்மாநுஷ்டானத்துக்கு ஆசாரிய பதத்தை நிர்வஹிப்பவன்[650].

புஷ்பஹாஸ:—இப்படி தன்னை அநுபவிக்கும்படி சந்நிதிக்கப் பெற்றவருக்கு, ஸாயங்காலவேளையில் மலரும் புஷ்பம்போல் தனது போக்யதையை விளங்கச்செய்பவன்.

ப்ரஜாகர:—விவசாயம்பண்ணுமவன் வயற்றலையில் கிடப்பதுபோல் அவர்களிடத்தில் இரவும் பகலும் விழித்திருப்பவன்[651].

(அ.) ஆதாரநிலய.—பிரதிவிமுதலிய ஆதாரமான பஞ்சபூதங்களுக்கும் ஆதாரமானவன்.

தாதா—ஸம்ஹாரஸமயத்தில் ஸகலப்பிரஜைகளையும் பானம்பண்ணுமவன்

புஷ்பஹாஸ:—பூமலர்வதுபோல் பிரபஞ்சமாய் மலர்பவன்.

648 తానహంద్విషతః ॥

649 వర్ణాశ్రమాచారపరాః సన్తః శాస్త్రైకతత్పరాః । త్వాం గరేధారయిష్యన్తితేషుత్వద్భారమాహితమ్ ॥

650 నమేపార్థాస్తికర్తవ్యమ్ ॥ ... వర్త ఏవచకర్మణి ॥

651 యస్యేషు సుప్తేషు జాగర్తి కామం కామం పురుషో నిర్మిమాణః ॥

[ఊర్ధ్వగస్సత్పథాచారః ప్రాణదః ప్రణవః పణః ॥
ప్రమాణం ప్రాణనిలయః ప్రాణభృత్ప్రాణజీవనః । ]

ఊర్ధ్వగః - உயரத்திலிருப்பவன், సత్పథాచారః - நல்வழியில் நடத்துமவன், ప్రాణదః - உஜ்ஜீவநத்தைத் தருமவன், ప్రణవః - வணங்குவிப்பவன், పణః - வியவஹரிப்பவன், ప్రమాణమ్ - நம்பத்தகுந்தவன், ప్రాణనిలయః - பிராணிகளுக்கு உறைவிடமானவன், ప్రాణభృత్ - பிராணிகளைப் போஷிப்பவன், ప్రాణజీవనః - பிராணிகளைப் பிழைப்பிப்பவன்,

---

(வி.) ஊர்த்வக:—(அதற்காக இவன் உறங்காமலிருப்பானென்றால்) ஸ்வபாவத்தாலே உயர்ந்தவன்[652].

ஸத்பதாசார—இப்படி தான் உத்துங்கஸ்வபாவனாயிருக்கைக்குப் பிரயோஜநமாய் ஆத்மாக்களை ஸ்வபாவஸித்தமான தனது அடிமையில் பிரவர்த்திக்கச் செய்பவன்[653].

ப்ராணத:—சப்தாதி விஷயங்களென்கிற விஷத்தால் மூர்ச்சையடைந்த ஆத்மகோடிகளுக்கு ஆத்மோஜ்ஜீவநத்தைத் தருமவன்.

ப்ரணவ:—ப்ரணவத்தாலே தனக்கும் சேதநாளுக்கு முண்டான ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தத்தை அவர்களுக்குத் தெரிவித்து "மாம்நமஸ்குரு" என்று தனது சரணாரவிந்தங்களில் வணங்கச்செய்பவன்[654].

பண:—இப்படி தனது ஸ்வாமித்வத்துக்கும் அவர்கள் சேஷத்வத்துக்கும் தகுந்தபடி வியவஹரிப்பவன். ப்ரமாணம்—இப்படி ஸம்சய விபர்யயங்களற வேதரஹஸ்யமான பரமார்த்தத்தில் விசுவாஸத்தை உண்டுபண்ணுவிக்குமவன்.

ப்ராணநிலய:—ஸகலப் பிராணிகளும் கூண்டுக்குள்ளடங்கும் பக்ஷிகள்போல் தன்னுள் ளொடுங்கும்படியானவன்.

ப்ராணப்ருத்—அவர்களை மாதாவைப்போல் போஷிப்பவன்.

ப்ராணஜீவந:—அவர்களுக்கு அந்நபாநாதிகள்போல் ஜீவநஹேதுவாயிருப்பவன். தத்வம்—தயிர்பால்களில் ஸாரமான வெண்ணெய்போல், சித்து அசித்துக்களுள் வியாப்தி முதலியவைகளால் ஸாராம்சமாயிருப்பவன்[655].

---

(அ.) ப்ரணவ:—பிரணவஸ்வரூபன்.

---

652 మహాత్మనా సంశ్రయమభ్యుపేతో నైనావసీదత్యతిదుర్గతో౽పి ॥

653 అనిత్యమసుఖం లోకమిమం ప్రాప్య భజస్వ మామ్ ॥

654 ప్రాణాః సర్వే పరమాత్మని ప్రణామయంతి ఏతస్మాత్ ప్రణవ ఇతి ॥

655 పరమార్థమశేషస్య జగతః ప్రభవాప్యయమ్ । శరణ్యం శరణం గచ్ఛన్ గోవిన్దం నావసీదతి ॥

[తత్త్వంతత్త్వవిదేకాత్మాజన్మమృత్యుజరాతిగః॥ భూర్భువస్స్వస్తరు స్తారస్సవితాప్రపితామహః॥యజ్ఞోయజ్ఞపతిర్యజ్వాయజ్ఞాంగో]

తత్త్వమ్- ஸாரம்சமானவன், తత్త్వవిత్-உண்மையறிபவன், ఏకాత్మా- ஒருவனேசேஷியும்போக்தாவும அபிமானியுமானவன், జన్మమృత్యు జరాతిగః - பிறப்பிறப்புகளைக் கடந்தவன், భూర్భువస్స్వస్తరుః - பூலோகபூவர்லோகஸுவர்லோக வாஸிகளுக்கு விருக்ஷமானவன், తారః- தாண்டுவிப்பவன், సవితా-பிறப்பிப்பவன், ప్రపితామహఃபிதாமகனுக் குபிதா, యజ్ఞః - யக்ஞமானவன், యజ్ఞపతిః - யக்ஞகனுக்குப்பதி, యజ్వా - யச்ஞம்செய்பவன், యజ్ఞాంగః - யக்ஞத்தை அங்கமா

(வி) தத்வவித்=ஆத்மதத்வத்தை யறிந்தவன்[656].

ஏகாத்மா—சேதநாசேதந வாக்கங்களெல்லா வற்றிற்கும் தானொருவனே சேஷியாயும் போக்தாவாயும் அபிமானியாயும் விளக்குமவன்.

ஜந்ம ம்ருத்யு ஜராதிகஃ-இப்படி யிருக்கச் செய்தேயும் அவைகட்குரிய தர்மமான பிறப்பு இறப்புமூப்புமுதலியவை அற்றவன்.

பூர்புவஸ்வஸ்தருஃ=பூலோக புவர்லோக ஸுவாலோகாதிகளில் வஸிக்கும் பிராணிகோடிகளுக்கு, பக்ஷிகளுக்கிடமாய்த்தளித்த பாரிஜாதவிருக்ஷம்போல் ஆச்ரயமானவன்[657].

தாரஃ=அவர்களை ஸம்ஸாரத்தினின்றும் கரையேற்றுமவன்.

ஸவிதா=ஸகலருககும் ஸாக்ஷாத பிதாவானவன்.

ப்ரபிதாமஹஃ=பிதாமஹனென்கிற பிரமமாவுக்கும பிதாவானவன்.

யக்ஞஃ=தன்னை ஆராதிக்கைகயென்கிற ஸம்ருதியில்லாதவர்கள், அந்தஸம்ருத்தியைக்கோரினால், அவர்களுக்குத்தானே யகஞமாமவன.

யஜ்ஞபதிஃ=தனது ஆராதநத்துக்குப் பலனைத்தருகையாலே பதியானவன். யஜ்வா=தனது ஆராதநமான யகஞத்தை அநுட்டிக்கச் சக்தியில்லாதவர்களுக்குப்பதில் தானேஅநுஷ்டிக்கையாலே யஜமாநனானவன்[658].

யக்ஞாங்கஃ = சக்தியுள்ளவர்கள் அநுட்டிக்கும் யக்ஞமும் தனககு சேஷமாகயிருக்கப்பெற்றவன்.

(அ) தத்வம்—அமிருதஸ்வரூபன், ஸத்யஸ்வரூபன். பரமார்த்தம் விசாரிக்கப் புக்கால் தத்வமென்கிறஒருசொல்லால் மாத்திரம்சொல்லக்கூடியவன்.

ஏகாத்மா—ஒரே ஆத்மாவானவன்.

[656] త్వమేవతత్త్వంశ్రేష్ఠ ॥

[657] సమాశ్రితాద్ బ్రహ్మతరోరనన్తాన్నిస్సంశయః పక్వఫలప్రపాతః ॥

[658] తేషాంతు పావనాయాహం నిత్యమేవయుధిష్ఠిర । ఉభే సన్ధ్యేఽనుతిష్ఠామి హ్యస్యహం స్వంశేష్వృత్తంమమ ॥

[యజ్ఞవాహనః ॥ యజ్ఞభృద్యజ్ఞకృద్యజ్ఞీయజ్ఞభుగ్యజ్ఞసాధనః
యజ్ఞాంతకృద్యజ్ఞగుహ్యమన్నమన్నాదఏవచ ॥]

யுடையவன், యజ్ఞవాహనః - யக்ஞத்தைநடத்துமவன், యజ్ఞభృత్-யக்ஞத்தைப்பரிபாலிப்பவன், యజ్ఞకృత్-யக்ஞத்தைப்படைத்தவன் యజ్ఞీ-யக்ஞத்துக்கு சேஷியானவன், యజ్ఞభుక్ - யக்ஞத்தைப்புஜிப்பவன், యజ్ఞసాధనః - யக்ஞத்தைச் சாதிப்பவன், యజ్ఞాంతకృత్ - யக்ஞத்துக்கு நிச்சயத்தைச் செய்பவன், యజ్ఞగుహ్యమ్ - யக்ஞரஹஸ்யமானவன், అన్నమ్-அன்னமானவன், అన్నాదః-அன்னத்தைப் புசிப்ப

(வி) யஜ்ஞவாஹநః= அவர்களுக்கு யக்ஞத்தில பக்தி சிரத்தைகளைத் தந்து நடத்துமவன். யஜ்ஞப்ருத்= அவர்கள் அநுஷ்டிக்கும் யக்ஞத்தில் லோபம் உண்டானால், தன்னை ஸ்மரிப்பதினாலும் தனக்கு பூர்ணாஹுதி பண்ணுவதினாலும் அதை நிறைவேற்றுமவன்[659].

யஜ்ஞக்ருத்= லோகஹிதத்துக்காக யக்ஞத்தை ஆதியில் படைத்தவன்.

யஜ்ஞீ= ஸகல யக்ஞங்களுக்கும் சேஷியானவன்.

யஜ்ஞபுக்= அந்த யக்ஞங்களை புஜிப்பவன்; பரிபாலிப்பவனென்றுமாம். யஜ்ஞஸாதநः= ஞானத்தையுண்டுபண்ணி அவ்வழியாலே தன்னை அடைவிக்கையாலே யக்ஞத்தை ஸ்வப்ராப்திக்கு ஸாதநமாயுடையவன்[660].

யக்ஞாந்தக்ருத்—யக்ஞஞ்செய்வது தன்னுடைய தத்வத்தை அறிகைக்காகவென்கிற ஸித்தாந்தத்தைச் செய்தவன்.

யஜ்ஞகுஹ்யம்= தான் அபேக்ஷயற்றிருக்கச் செய்தேயும் யக்ஞாதிகளில் அபேக்ஷயுடையவன்போல் புரோடாசம் முதலியவைகளைப் புசித்துத் திருப்தியடைவதோடு திருப்தியைச் செய்விக்கிறானென்கிற விஷயம், யக்ஞவிதிமுதலியவைகளை அறிந்தவருக்குத் தவிர மற்றையோருக்குத் தெரியாதபடி ரஹஸ்யமாயிருப்பவன்[661].

அந்நம்—இப்படி அவனை அநுபவிக்கும்படியான சக்தியைச் சம்பாதித்துக்கொண்டவர்க்கு அன்னம்போல் தாரகமாயிருப்பவன்.

அந்நாதः= அவர்களையும் அப்படியே புஜிப்பவன்.

(அ.) யஜ்ஞாந்தக்ருத்—வைஷ்ணவ ருக்கைச்சொல்லி பூர்ணாஹுதியைச் செய்தாலல்லது யக்ஞம் நிறைவேறாமையாலே யக்ஞத்தை நிறைவேற்றுமவன்.

[659] ప్రమాదాత్ కుర్వతాం కర్మ ప్రచ్యవేత్యధ్వరేషు యత్ । స్మరణాదేవ తద్విష్ణోః సంపూర్ణం స్యాదితి శ్రుతిః ॥

[660] సర్వం కర్మాఖిలం పార్థ జ్ఞానే పరిసమాప్యతే ॥

[661] విదుః కృష్ణం బ్రాహ్మణాస్తత్త్వతో యే తేషాం రాజన్ సర్వయజ్ఞాః సమాప్తాః ॥

[ఆత్మయోనిః స్వయంజాతో వైఖానస్సామగాయనః ।
దేవకీనందనః స్రష్టా క్షితీశః పాపనాశనః ॥]

ఆత్మయోనిః - ஆத்மாக்களைக் கலப்பவன், స్వయంజాతః-தானாய்ப்பிறந்தவன், వైఖానః-பெயர்ப்பவன், సామగాయనః - ஸாமகானம்பண்ணுமவன், దేవకీనన్దనః - தேவகியின்மைந்தன், స్రష్టా-சிருஷ்டிப்பவன், క్షితీశః-பூமிபாலகன், పాపనాశనః - பாபத்தைநாசஞ்செய்பவன்,

---

(வி.) ஆத்மயோநி:—பாலோடு சர்க்கரையைச் சேர்த்ததுபோல் போக்தாக்களைத் தன்னோடுசேர்த்துக் கொள்பவன்.

ஸ்வயஞ்ஜாத:—ஒருவருடையப் பிரார்த்தனையில்லாமல் தானே அவதரித்தவன்.

வைகாந:—அவதரித்து ஸம்ஸார துக்கத்தைப்பெயர்ப்பவன்.

ஸாமகாயந:—ஸ்வப்ராப்தியாகிற மதுவைப் பாநஞ்செய்து ஹாவு, ஹாவு, ஹாவு, என்றுஸாமகாநம்பண்ணும்முக்தபுருஷாளை யுடையவன்[662].

தேவகீநந்தந:—இப்படிப்பட்ட வைபவமுடையவந்தான் பராவஸ்த்தையிலெம்பெருமானே யென்னில்-தேவகிதன் சிறுவன்[663]. ஸ்ரஷ்டா—பராவஸ்தையிலிருந்து ஸ்ருஷ்டிக்குமவனும் தானேயானவன்[664].

க்ஷிதீச:—ஸர்வேசனா யிருந்தாலும் ஆர்த்தி விஞ்சியிருக்கையாலே க்ஷிதிபாலகன்,

பாபநாசந:—இங்கு தான் தயிர்வெண்ணெய்களைக் களவுகண்டும், ராஸக்ரீடைசெய்தும் இப்படி பல்படியாகச் செய்தருளும் திவ்யசேஷ்டிதங்களைப் பிரதிபாதிக்கும் கதாம்ருதத்தால் தன தன்பர்களுக்கு உள்ளும் புறம்புமுண்டான பாபங்களை நாசஞ்செய்பவன்.

(அ-கை.) அவதாரத்திலும் தனது பரமைசுவரியத்துக்கு அடையாளமான திவ்யாயுதங்கள் தரிக்கையாலே:—

---

(அ.) சங்கப்ருத்—பூதாதியான அஹங்காரரூப பாஞ்சஜந்யமென்னும் சங்கந்தரித்தவன்.

---

662 ఏతత్సామ గాయన్నాస్తే ॥

663 యఏవ పృథుదీర్ఘాక్షస్సంబన్ధీ తేజనార్దనః ॥

664 యోఽనన్తరూపోఽఖిలవిశ్వరూపో గర్భేపి లోకాన్ వపుషా బిభర్తి ॥

[శంఖభృన్నందకీ చక్రీ శార్ఙ్గధన్వా గదాధరః ॥
రథాంగపాణిరక్షోభ్యస్సర్వ]

శంఖభృత్-சங்கந்தரித்தவன், నందకీ நந்தகமுடையவன், చక్రీ-சக்கரந் தரித்தவன், శార్ఙ్గధన్వా சார்ங்கமென்னும் வில்லுடையவன், గదాధరః கதையைத் தரிப்பவன், రథాంగపాణిః ரதாவயவமான சக்கரத்தைக் கையிற்கொண்டவன், అక్షోభ్యః- கலக்கப்போகாதவன்;

---

(வி) சங்கப்ருத — தனது திருப்பவளத்தி லமுதத்தால் பாஞ்சஜந்யத்தைப் பூரிப்பவன்.

நந்தகீ — எம்பெருமானுங்கூட இது நம்மைக் களிக்கச் செய்யுமென்றுப் பிரார்த்திக்கும்படியான நந்தகமென்னும் கட்கத்தை நித்யமாய்த் தரித்திருப்பவன்

சக்ரீ — எப்போதும் காண்பதற்கினியராய், தமது பரிஜனங்களான தேவதைகளுக்கு விரோதிகளாய்வரும் அசுரராக்ஷஸாதிகளின் ரக்தத்தால் கலுஷிதமான ஜ்வாலைகளுடன் விளங்கும் திருவாழி யாழ்வாரை நித்தியமாய் ஏந்தியருளுமவன்.

சார்ங்கதந்வா — நாணைப்பூட்டிச் செய்த டங்கார த்வனியாலும் பாணவர்ஷங்களாலும் பகைவரை வாட்டும்படியான திருச்சார்ங்கமென்னும் வில்லாண்டவன்.

கதாதர: — எப்புறத்திலும் சுழற்றும்பொழுது பிரளயாக்கினி போல் எங்கும் கொள்ளியை வாரியிறைத்துப் பகைவரையழித்து அதனால் நித்தியமாய் தனக்கு ஸந்தோஷத்தைச் செய்கின்ற கௌமோதகி யென்னும் கதையைத்தரித்தவன்.

ரதாங்கபாணி: — இவைற்றுக்கேற்ற சக்கிரந்தரித்தவன்.

[கீழே சக்ரீ என்றபோது ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தஞ் சொல்லிற்று; இங்கு அந்தசக்கிரம் எப்பொழுதும் பிரகாசிக்குமென்பது சொல்லுகிறது; ஆகையால் புநருக்திதோஷமில்லை.]

அக்ஷோப்ய: — சரணாகதாளுக்கு அபயப்ரதானம் பண்ணுவதிலுண்டான உத்ஸாஹத்தைத் தனது மஹிமையாலும் கலக்கப் போகாமல்விளங்குமவன்.

---

(அ) நந்தகீ — வித்யாமயமான நந்தகமென்னும் கட்கத்தையுடையவன்.

சக்ரீ — மநஸ்தத்வரூபமான சக்கிரந்தரித்தவன்

சார்ங்கதந்வா — இந்திரியாதியான அஹங்காரரூபமான சார்ங்கமென்னும் விலலுடையவன். கதாதர. — புத்தி தத்வமயமான கௌமோதகி யென்னும் கதையைத்தரித்தவன்.

[ప్రహరణాయుధః॥ సర్వప్రహరణాయుధ ఓన్నమఇతి॥]

సర్వప్రహరణాయుధః- ஸகல (விரோதிகளையும்) நிரஸிக்கும்படியான ஆயுதங்களைத்தரித்தவன்,

(வி.) ஸர்வப்ரஹரணாயுத:—தனனையே கடாக நமபியவர்களினுடைய ஸகல அநிஷ்டங்களையும் வேர்பிடுங்கலாக நாசஞ்செய்ய வல்லவைகளாய், எண்ணிறந்த வைகளாய், அபார ஸாமாத்தியம் பொருந்தியவைகளாய், தனக்குத்தகுந்தவைகளாய், அளவற்ற வைகளாய், ஆபரணங்களோவென்று ஸந்தேஹிக்கும்படி விளங்குமவைகளாய், எப்பொழுதும் எங்கும் எல்லாவிடத்திலும், எப்படி அடைந்தோர்களையும ஸம்ரக்ஷிப்பதென்கிற தீக்ஷயான ஸத்ரயாகத்தில் தீக்ஷித்தவைகளாய், ஸர்வைசுவரியபாரதந்த்ரதங்கு மவைகளான மற்றுந் திவ்யாயுதங்களையுடையவன்.

இப்படி ஸகலதோஷங்களுக்கும் எதிர்த்தட்டாய், உபாதி, ஸங்கியை, எல்லை இவைகளைக் கடந்தவைகளாய், உத்துங்க மங்களமாய் விளங்கும் ஸ்வரூப, ரூபம், குணம், விபவம், சேஷ்டிதம் இவைகளையுடையனாய், நிரங்குசமான ஐசுவரியசாலியாய், ஆபத்ஸகனாய், அர்த்திகளுக்குக்கற்பகமாய், அடிக்கீழமர்ந்தவருக்கு ஜீவநஹேதுவாய் ஸ்ரீய: பதியாய் ஷாட்குண்ய பூர்ணனான புருஷோத்தமனை ஆச்ரயித்தவர்களுக்கு ஸகல ஸம்பத்ஸமுதாயங்களும் ஸித்தம்.

(அ.) ஸர்வப்ரஹரணாயுத:—ஆயுதகோடிகளிற் சேராத விரல்முதலியவைகளையும ஆயுதமாகவுடையவன்.

వనమాలీ గదీ శార్ఙ్గీ శంఖీ చక్రీ చ నన్దకీ।
శ్రీమాన్నారాయణో విష్ణుర్వాసుదేవోఽభిరక్షతు॥

தசமசதகம்—ஸம்பூர்ணம்.

(அவதாரிகை.) அநந்தரம் இந்த ஸஹஸ்ரநாமத்தின் பெருமையை அறிவிக்க வேண்டுமென்கிற அபிப்பிராயத்தால் பீஷ்மரானவர், தர்மபுத்திரரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

ఇతీదం కీర్తనీయస్య కేశవస్య మహాత్మనః । నామ్నాం
సహస్రం దివ్యానామశేషేణ ప్రకీర్తితం ॥

ఇతి-இந்தப்பிரகாரம், కీర్తనీయస్య - ஸங்கீர்த்தநஞ்செய்யவேண்டிய, మహాత్మనః - மஹாத்துமாவான, కేశవస్య-கேசவனுடைய, దివ్యానాం-திவ்யமான, నామ్నాం - திருநாமங்களுடைய, ఇదం-இந்த, సహస్రం-ஆயிரமும், అశేషేణ-மிகுதியில்லாமல், ప్రకీర్తితం - பரிஷ்காரமாய்ச் சொல்லப்பட்டது,

["கீர்த்தநீயஸ்ய" என்றதனால் இன்றுமுதல் நீர்பகவானைக்கீர்த்தனஞ் செய்ய வடுக்குமென்றதாகிறது. "கேசவஸ்ய மஹாத்மந:" என்றதனால் கீர்த்தநஞ் செய்கைக்குக் காரணஞ்சொன்னபடி. "திவ்யாநாம்" என்றதனால்பரமபதத்திலும் வியவஹரிக்கத்தக்கதென்றதாகிறது. "அசேஷேண" என்றதனால் இனி உமக்கு அறியவேண்டிய பாகம் யாதொன்றுமில்லையென்றதாகிறது]

(அவதாரிகை.) அநந்தரம் அதிகாரி நிர்ணயமும் பல நிர்ணயமுஞ் செய்யப்படும்.

య ఇదం శృణుయాన్నిత్యం యశ్చాపి పరికీర్తయేత్ ।నాశుభం
ప్రాప్నుయాత్కించిత్సోఽముత్రేహ చ మానవః ॥

ఇదం - இதை, యః-எவன், నిత్యం-தினந்தோறும், శృణుయాత్-கேட்கிறானோ, యశ్చ - பின்னுமெவன், పరికీర్తయేత్ - எங்கும் கீர்த்தநஞ் செய்கிறானோ, సఃఅపి-அந்த, మానవః-மனிதனும், అముత్ర-பரலோகத்திலும் ఇహచ-இங்கும், కించిత్-கொஞ்சமும், అశుభం-அமங்களத்தை, నప్రాప్నుయాత్ - அடையமாட்டான்,

["இதம்ச்ருணுயாத்" இத்யாதியாலே அவரவர் அதிகாரத்துக்குத் தக்கபடி கேட்போருக்கும் சிந்திப்போருக்கும் இஹலோக பரலோகங்களிலுண்டான அசுபங்கள் போய்விடுமென்று பலஞ்சொல்கிறது.]

(அவதாரிகை.) அநந்தரம், பிராம்மணாதி நான்குவருணத்தாருக்கும் பகவத்பக்தி திடமாயுண்டாகாதபோது, அவர்கள் பலனைக்கோராமல் இதைக்கேட்டாலும் ஜபித்தாலும் அவர்களுக்கு இதனால் உண்டாகும் பலன் சொல்லுகிறது:—"வேதாந்தக:" என்று தொடங்கி.

వేదాంతగో బ్రాహ్మణస్స్యాత్ క్షత్రియో విజయీ భవేత్ । వైశ్యో
ధనసమృద్ధస్స్యాత్ శూద్రస్సుఖమవాప్నుయాత్ ॥

బ్రాహ్మణః - பிராம்மணன், వేదాన్తగః - வேதாந்தங்களறிந்தவனாக, స్యాత్ - ஆகுவன். క్షత్రియః - க்ஷத்திரியன், విజయీ - ஜயசீலனாக, భవేత్ - ஆகுவன், వైశ్యః - வைசியன், ధనసమృద్ధః - தனத்தால் நிறைந்தவனாக, స్యాత్ - ஆகுவன், శూద్రః - சூத்திரன், సుఖం - சுகத்தை, అవాప్నుయాత్ - அடைவான்,

அநந்தரம் அவ்வருணத்தார்களே பலாபேக்ஷையுடையராகில் அவர்களுக்குண்டாகும் பயன் சொல்லுகிறது. "தர்மார்த்தீ" என்று தொடங்கி.

ధర్మార్థీ చాప్నుయాద్ధర్మమర్థార్థీ చార్థమాప్నుయాత్। కామానవాప్నుయాత్కామీ ప్రజార్థీ చాప్నుయాత్ప్రజాః ॥

ధర్మార్థీ - தருமத்தைக்கோரியவன், ధర్మం - தருமத்தை, ప్రాప్నుయాత్ - பெறுவன், అర్థార్థీ చ - தநத்தைக்கோரியவன், అర్థం - தநத்தை. ఆప్నుయాత్ - அடைவன், కామీ - காமத்தைக்கோரியவன், కామాన్ - காமங்களை, అవాప్నుయాత్ - அடைவன், ప్రజార్థీ చ - மக்களைக்கோரியவனும், ప్రజాః - மக்களை, ఆప్నుయాత్ - பெறுவான்,

(அவதாரிகை.) அநந்தரம் சிலநியமங்களுடன்கூடி ஜபிக்கையென்கிற ஸங்கீர்த்தநஞ்செய்தால் பக்தனுக்கு ஸகல ஸமிருத்தியுமுண்டாகுமென்கிறது. "பக்திமாந்ய:" இத்யாதி நான்கு சுலோகங்களால்.

భక్తిమాన్యస్సదోత్థాయ శుచిస్తద్గతమానసః। సహస్రం వాసుదేవస్య నామ్నామేతత్ప్రకీర్తయేత్ ॥

యః - எவன், భక్తిమాన్ - பக்தியுடையனாய், సదా - எப்பொழுதும், ఉత్థాయ - உத்யுக்தனாய், శుచిః - பரிசுத்தனாய், తద్గతమానసః - அவனிடத்தில்சென்றமனதோடு, వాసుదేవస్య - வாசுதேவனுடைய, ఏతత్ - இந்த, నామ్నాం - திருநாமங்களுடைய, సహస్రం - ஆயிரத்தை, ప్రకీర్తయేత్ - கீர்த்தநம்பண்ணுவானோ, (அவன்)

యశః ప్రాప్నోతి విపులం యాతి ప్రాధాన్యమేవ చ। అచలాం శ్రియమాప్నోతి శ్రేయః ప్రాప్నోత్యనుత్తమం ॥

---

(அ.) "ப்ராம்மண:— வேதாந்தக:" என்று பிராம்மணனுக்கு ஜபஞ்செய்வதனால், பரமபலமாய் வேதாந்த ஞானமுண்டாகுமென்று சொல்லுகிறதேயல்லது மோக்ஷத்தைச்சொல்லாமைநோக்கின்-ஜபஞ்செய்வதுமுதலிய கருமம் ஒரு ஸமயம் மோக்ஷத்துக்குநேரே காரணமாகுமோ என்கிற சங்கைவர, மோக்ஷத்திற்கு ஞானமொன்றே காரணமேயல்லது கருமமாகமாட்டாதென்பது வெளியாகின்றது.

విపులం விசாலமான, యశః-கீர்த்தியை, ప్రాప్నోతి-அடைகிறான், ప్రాధాన్యంఏవచ - பிரதானமான தன்மையையும், యాతి-அடைகிறான், అచలాం - சலிக்காத, శ్రియం-ஸம்பத்தை, ఆప్నోతి - அடைகிறான், అనుత్తమం-ஈடிலலாத, శ్రేయః - ஸ்ரேயஸ்ஸையும் (மோக்ஷத்தையும்) ప్రాప్నోతి - அடைகிறான்,

నభయంక్వచిదాప్నోతివీర్యంతేజశ్చవిందతి । భవత్య
రోగోద్యుతిమాన్బలరూపగుణాన్వితః

క్వచిత్-ஒரிடத்திலும், భయం-பயத்தை, నాప్నోతి-அடைகிறதில்லை, వీర్యం-வீரியத்தையும், తేజశ్చ- தேஜஸ்ஸையும், విందతి-அடைகின்றான், అరోగః-நோயற்றவனாய், ద్యుతిమాన్-காந்திபொருந்தியவனாய், బలరూపగుణాన్వితః-பலம்ரூபம் குணம்இவைகளோடுகூடினவனாய், భవతి-ஆகிறான்,

రోగార్తోముచ్యతేరోగాద్బద్ధోముచ్యేతబంధనాత్ ।
భయాన్ముచ్యేతభీతస్తుముచ్యేతాపన్నఆపదః ॥

రోగార్తః-நோயாளியானவன், రోగాత్-நோயினின்றும், ముచ్యతే-விடுபடுகிறான், బద్ధః-பந்தத்தில் அகப்பட்டவன், బంధనాత్-பந்தத்தினின்றும், ముచ్యేత-விடுபடுவன், భీతస్తు-பயந்தவனும், భయాత్-பயத்திலிருந்து ముచ్యేత-விடுபடுவன், ఆపన్నః-ஆபத்திலகப்பட்டவன், ఆపదః-ஆபத்தினின்றும், ముచ్యేత-விடுபடுவன்,

(அவதாரிகை) அநந்தரம் பகவானொருவனையே அபேக்ஷிக்கின்ற அநந்யபக்தியான புருஷனுக்கு, அவன் பிரார்த்திக்காமலிருக்கச்செய்தேயும், அநர்த்த நிவ்ருத்தி தன்னடையே உண்டாகுமென்கிறது—"துர்க்காணி" என்றுதொடங்கி.

దుర్గాణ్యతితరత్యాశుపురుషః పురుషోత్తమం ।
స్తువన్నామసహస్రేణనిత్యంభక్తిసమన్వితః ॥

పురుషః-புருஷன், నిత్యం தினந்தோறும், భక్తిసమన్వితః-பக்தியோடு கூடினவனாய், పురుషోత్తమం புருஷோத்தமனை, నామసహస్రేణ - ஸஹஸ்ரநாமத்தால், స్తువన్ - தோத்திரஞ்செய்வானாகில், ఆశు - சீக்கிரமாக, దుర్గాణి-இடுக்கண்களை, అతితరతి-தாண்டுகிறான்,

వాసుదేవాశ్రయోమర్త్యో వాసుదేవపరాయణః ।
సర్వపాపవిశుద్ధాత్మాయాతిబ్రహ్మసనాతనం ॥

(அ-கை.) அநந்தரம் அவர்களுக்கு தத்ப்ராப்தி சொல்லுகிறது.

న వాసుదేవభక్తానామశుభం విద్యతే క్వచిత్ ।
జన్మమృత్యుజరావ్యాధిభయం వాప్యుపజాయతే ॥

మర్త్యః-மனுஷ்யன், వాసుదేవాశ్రయః-வாசுதேவனையே ஆச்ரயித்தவனாய், వాసుదేవపరాయణః-வாசுதேவனேபரமகதியாய் நம்பினனாகில், సర్వపాపవిశుద్ధాత్మా- ஸகலபாபங்களினின்றும்விடுபட்டவனாய், సనాతనం-சாசுவதமான, బ్రహ్మ-பரப்பிரம்மத்தை, యాతి-அடைகிறான்.

వాసుదేవభక్తానాం-வாசுதேவன்பக்தர்களுக்கு, క్వచిత్-ஓரிடத்திலும், అశుభం அமங்களமானது, నవిద్యతే-கிடையாது; జన్మమృత్యుజరావ్యాధిభయంవాపి- பிறப்புஇறப்பு மூப்பு,துன்பம் இவைகளால்பயமும், నఉపజాయతే-உண்டாவதில்லை.

(அ-கை.) நியமத்துடன்கூடிய பக்தனுக்கு ஆநுஷங்கிகமாய் வரும் பலன் சொல்லுகிறது, "இமம்ஸ்தவம்" என்று.

ఇమం స్తవమధీయానః శ్రద్ధాభక్తిసమన్వితః ।
యుజ్యేతాత్మాసుఖక్షాంతిశ్రీధృతిస్మృతికీర్తిభిః ॥

శ్రద్ధాభక్తిసమన్వితః - சிரத்தைபக்தி இவைகளுடன்கூடி, ఇమం- இந்த, స్తవం-தோத்திரத்தை, అధీయానః-அத்தியயநம்பண்ணும், ఆత్మా- சேதநன், సుఖక్షాన్తిశ్రీధృతి స్మృతికీర్తిభిః-சுகம், பொறுமை, செல்வம், தைரியம், நினைவு, முதலியவைகளோடு, యుజ్యేత-கூடியிருப்பன்.

(அ-கை.) பகவத்பக்தியானது மஹத்தான ஸுக்ருதபலன்; ஆதலால் அதுண்டானால் குரோதம் முதலிய தோஷங்கள் தன்னடையே ஒழிந்து போமென்கிறது, "நக்ரோத:" என்றுதொடங்கி.

న క్రోధో న చ మాత్సర్యం న లోభో నాశుభా మతిః ।
భవంతి కృతపుణ్యానాం భక్తానాం పురుషోత్తమే ॥

కృతపుణ్యానాం-புண்ணியஞ்செய்தவர்களாய் அதனால், పురుషోత్తమే-புருஷோத்தமனிடத்தில், భక్తానాం-பக்தியுடையோருக்கு, క్రోధోన-கோபமிராது, మాత్సర్యంచన-அசூயையிராது, లోభఃన ஆசையிராது, అశుభామతిః கெடுமதி, న-இராது.

(அவதாரிகை.) இப்படிசொன்ன பலன்களெல்லாம் அர்த்தவாதமென்பதாக பகவத்பக்திஹீநர்கள் சங்கிப்பார்களென்று நினைத்து, எம்பெருமானுடைய ப்ரபாவத்துக்குக் கூடாதது ஒன்றுமில்லாமையாலே, இதை

அதிவாதமென்றாவது மற்றும் வேறுப்ரகாரமாயாவது நினைக்கத்தகாதென்கிற அபிப்பிராயத்தால், பகவத் பிரபாவத்தைச் சொல்லுகிறார், "த்யெளஸ்ஸசந்த்ர" என்று தொடங்கி.

ద్యౌస్సచంద్రార్కనక్షత్రంఖందిశోభూర్మహోదధిః ।
వాసుదేవస్యవీర్యేణవిధృతానిమహాత్మనః ॥

ద్యౌః-சுவர்க்கமும், సచంద్రార్కనక్షత్రం சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்களுடன்கூடின, ఖం-ஆகாசமும், దిశః-திக்குகளும், భూః-பூமியும், మహోదధిః-பெருங்கடலும், మహాత్మనః-மஹாத்மாவான, వాసుదేవస్య வாசுதேவனுடைய, వీర్యేణ-வீரியத்தாலே, విధృతాని-தரிக்கப்பட்டன.

(அவதாரிகை.) ஸகலமும் அவன் சக்தியால் தரிக்கப்பட்டிருக்கிறதென்பதாகச்சொல்லி, அப்படியே ஸகலமும் அவனுக்கு வசப்பட்டிருக்குமென்கிறது "ஸஸுராஸுர" என்று தொடங்கி.

ససురాసురగంధర్వంసయక్షోరగరాక్షసం ।
జగద్వశేవర్తతేదంకృష్ణస్యసచరాచరం ॥

ససురాసురగంధర్వం-தேவர் அசுரர் கெந்தருவருடன்கூடி, సయక్షోరగరాక్షసం-இயக்கர், உரகர், அரக்கர் இவர்களுடன் கூடி, సచరాచరం சராசரரூபமான, ఇదం இந்த, జగత్-பிரபஞ்சம், కృష్ణస్య-கிருஷ்ணனுடைய, వశే-ஆதீனத்தில், వర్తతే-இருக்கின்றது.

(அவதாரிகை.) வசப்பட்டிருக்கைதான், சரீரமானது ஆத்மாவுக்கெப்படியோ அப்படியென்கிறது, "இந்த்ரியாணி" என்று தொடங்கி.

ఇంద్రియాణిమనోబుద్ధిస్సత్త్వంతేజోబలంధృతిః ।
వాసుదేవాత్మకాన్యాహుఃక్షేత్రంక్షేత్రజ్ఞఏవచ ॥

ఇంద్రియాణి-புலன்கள், మనః-மனது, బుద్ధిః-புத்தி, సత్త్వం-ஸாத்துவம், తేజః-ஒளி, బలం-பெலம், ధృతిః-தைரியம் (இவையெல்லாமாகிற) క్షేత్రం சரீரமும், క్షేత్రజ్ఞఏవచ-ஆத்மாவும், వాసుదేవాత్మకాని -வாசுதேவரூபங்களென்று, ఆహుః-சொல்லுகிறார்கள்,

(அவதாரிகை.) இப்படி தத்வசாஸ்திரங்களெல்லாம் அவன் ஆதீநமென்பதாய்ச்சொல்லி, இப்பொழுது மந்தாதிகாரிகளின் பயத்தைப்போக்குவதற்காக அநுஷ்டாந சாஸ்திரமும் அப்படியே அவன் ஆதீனமென்கிறது "ஸர்வாகமாநாம்" என்று தொடங்கி.

సర్వాగమానామాచారఃప్రథమఃపరికల్ప్యతే ॥
ఆచారప్రభవోధర్మోధర్మస్యప్రభురచ్యుతః ।

సర్వాగమానాం-ஸகல சாஸ்திரங்களுக்குள்ளும், ఆచారః-நன்னடக்கையானது, ప్రథమః-முதன்மையாக, పరికల్ప్యతే-எண்ணப்படுகிறது, ఆచారప్రభవః-அந்தநன்னடக்கையினின்றுமுண்டானது, ధర్మః தருமம், ధర్మస్య-தருமத்திற்கு, ప్రభుః-ஸ்வாமி, అచ్యుతః-அச்சுதன்.

(அவதாரிகை.) தர்மத்தைச் சேர்ந்தவர்களும் அவனிடத்தினின்று முண்டானவர்களென்கிறது. "ரிஷய:" என்று தொடங்கி.

ఋషయః పితరో దేవాః మహాభూతాని ధాతవః ॥

జంగమాజంగమం చేదం జగన్నారాయణోద్భవం ॥

ఋషయః-ரிஷிகளும், పితరః-பிதருக்களும், దేవాః-தேவர்களும், మహాభూతాని-மஹாபூதங்களும், ధాతవః- தாதுக்களுமாய், జంగమాజంగమం చ- அசைவதும்அசையாததுமான, ఇదం-இந்த, జగత్- ஜெகம், నారాయణోద్భవం- நாராயணனிடத்திலிருந்து உண்டானது,

(அவதாரிகை.) ஞானத்துக்கும அவனே காரணமென்கிறது. "யோக ஜ்ஞானம்" என்று தொடங்கி.

యోగజ్ఞానం తథా సాంఖ్యం విద్యాశ్శిల్పాదికర్మ చ ।

వేదాశ్శాస్త్రాణి విజ్ఞానమేతత్సర్వం జనార్దనాత్ ॥

యోగ జ్ఞానం-யோகக், ஞானம், తథా-அப்படியே, సాంఖ్యం-தத்வ நிச்சயம, విద్యాః-வித்தைகள், శిల్పాది-சிற்பமுதலிய, కర్మ చ - கைத்தொழில், వేదాః-வேதங்கள், శాస్త్రాణి-சாஸ்திரங்கள், విజ్ఞానం-ஆதியசாஸ்திரம், ఏతత్సర్వం-இதெல்லாம், జనార్దనాత్-ஜநார்த்தனனிடத்தினின்று (முண்டாயின)

(அவதாரிகை ) இப்படிப்பட்ட மஹாவிபூதியினது விசித்திரத்தாலே எம்பெருமானுடைய மஹாநிர்வாஹம் சொல்லப்படுகிறது.

ఏకో విష్ణుర్మహద్భూతం పృథగ్భూతాన్యనేకశః ।

త్రీన్లోకాన్వ్యాప్య భూతాత్మా భుఙ్క్తే విశ్వభుగవ్యయః ॥

విష్ణుః-விஷ்ணுவானவர், ఏకః-ஒருவரே, అనేకశః-அனேக விதமாய், పృథక్-வேறுபட்ட, భూతాని-மஹாபூதங்களையும், త్రీన్ లోకాన్ மூன்றுலோகங்களையும், వ్యాప్య-வியாபித்து, భూతాత్మా-அப்பூதங்களுக்கு ஆத்மாவாய், విశ్వభుక్ - ஸகலவிதத்தாலும் பரிபாலித்துக் கொண்டு, అవ్యయః-விகாரமற்று, మహద్భూతం-வாக்குக்கும் மனதுக்குமெட்டாதபடி பெரியராய்க்கொண்டு, భుఙ్క్తే-(போகஸத்தை) அனுபவிக்கிறார்.

(அவதாரிகை.) அபாரமஹிமைசாலியான பகவான் இந்த ஸ்தோத்திரத்துக்கு விஷயம்; அவனையும் விளாக்கொலை கொள்ளும்படியான ஞான

மும் வாக்குமுடையவரான ஸ்ரீவியாஸபகவான், இதற்கு ஸ்தோதா; மங்களமான அவ்விருவருடைய மஹிமையுமாயிருக்கிறது இந்த ஸ்தோத்திரரத்நம்; இதைக்கொண்டு போக்கும்படியான மஹாதாரித்திரியமுடையதான இஜ்ஜகமெல்லாம் இதற்கு அதிகாரியாகக்கூடும்; ஆகையால் யாரேயாகிலுமாம்; பரமான அல்லது அவரமான ச்ரேயஸ்ஸைக்கோரின சேதநன்; இதைத் தாராளமாய் ஸேவிக்கலாமென்கிறார். "இமம்ஸ்தவம்" என்று தொடங்கி.

ఇమం స్తవం భగవతో విష్ణోర్వ్యాసేన కీర్తితమ్ ।
పఠేద్య ఇచ్ఛేత్పురుషః శ్రేయః ప్రాప్తుం సుఖాని చ ॥

యః-எந்த, పురుషః-புருஷன், శ్రేయః-மோக்ஷத்தையும், సుఖాని చ இஹலோகஸுகங்களையும், ప్రాప్తుం-அடைய, ఇచ్ఛేత్-விரும்புகிறானோ அவன், వ్యాసేన-வியாஸராலே, కీర్తితం-சொல்லப்பட்ட, భగవతః-ஷாட்குண்ய பூர்ணரான, విష్ణోః-விஷ்ணுவினுடைய, ఇమం-இந்த, స్తవం-தோத்திரத்தை, పఠేత్-படிக்கக்கடவன்.

இப்படி ஸ்வபாவத்தாலேயே ஸகல கல்யாணகுணங்களுக்கு மிருப்பிடமாய், ஆச்ரிதாளுக்குக் கற்பகமாய், புண்டரீகம்போன்ற திருக்கண்களுடையனா யெழுந்தருளியிருக்கும் ச்ரிய:பதியான வெம்பெருமானை ஸேவிப்பவருக்கு அவனே ஸகல ஸாம்ராஜ்யமாயிருக்கையாலே ஸத்துக்களாயிருப்பார்களுக்கு ஸம்பத்துக்கள் வாசாமகோசரமாயிருக்கின்றன. ஆனபின்பு ஸம்ஸாரத்தில் உழன்று பரிபவப்படுவது எதற்காக என்று முடிவாகச்சொல்லுகிறார், "விச்வேச்வரம்" என்று தொடங்கி.

విశ్వేశ్వరమజం దేవం జగతః ప్రభుమవ్యయమ్ ।
భజంతి యే పుష్కరాక్షం న తే యాంతి పరాభవమ్ ।
న తే యాంతి పరాభవమోన్నమ ఇతి ॥

విశ్వేశ్వరం-ஜகதீசனாய், అజం-பிறப்பற்றவனாய், దేవం-ஸ்வயம்பிரகாசமானவனாய், జగతః-லோகத்திற்கு, ప్రభుం-ஸ்வாமியாய், అవ్యయం அழிவற்றவனான, పుష్కరాక్షం-புண்டரீகாக்ஷனை, యే-எவர்கள், భజన్తి ஸேவிக்கிறார்களோ, తే-அவர்கள், పరాభవం-பரிபவத்தை, న యాన్తి-அடைகிறதில்லை.

இவ்வாதத்தை சபதபூர்வகமாய் திடப்படுத்திச் சொல்லுவாராய் "அவர்களுக்குப பரிபவமில்லை" யென்பதை இரட்டித்துச் சொல்லுகிறார்.

అస్మాకమత్ర చ పరత్ర చ సర్వసౌఖ్యముత్పాద్య సంపదమశేషవిధాం విధాయ ।
శ్రీరఙ్గరాజమహిషీ స చ వైష్ణవానాం సజ్జనసుఖం సమాజయేన సదా క్రియాస్తామ్,

ஸ்ரீ-ஸஹஸ்ரநாம பாஷ்யம-ஸம்பூர்ணம்.

# ஸ்ரீ ஸஹஸ்ரநாம ப்ரசம்ஸை.

అర్జునఉవాచ॥పద్మపత్రవిశాలాక్షపద్మనాభసురోత్తమ।
భక్తానామనురక్తానాంత్రాతాభవజనార్దన॥

పద్మపత్రవిశాలాక్ష-தாமரையிதழ்போல்விசாலமான திருக்கண்களையுடையவரே! పద్మనాభ-பதுமத்தைநாபியிலுடையவரே! సురోత్తమ தேவர்களிற்சிறந்தவரே! జనార్దన-ஓ ஜநார்த்தந! అనురక్తానాం-அதிகப்பிரீதிபண்ணுகின்ற, భక్తానాం-(தேவரீருடைய) பக்தாளுக்கு, త్రాతా-ரக்ஷகராக, భవ-ஆகவேண்டும்.

శ్రీభగవానువాచ॥ యోమాంనామసహస్రేణస్తోతుమిచ్ఛతిపాణ్డవ
సోహమేకేనశ్లోకేనస్తుతఏవనసంశయః॥ స్తుతఏవనసంశయఓన్నమఇతి

పాండవ ஓ பாண்டுநந்தந! యః யாவன், నామసహస్రేణ - நாமமாயிரத்தாலும், మాం என்னை, స్తోతుం-தோத்திரம்பண்ண, ఇచ్ఛతి-இச்சிக்கிறானோ, (அந்த உன்றாலே) సోహం-அந்தநான், ఏకేనశ్లోకేన- ஒருசுலோகத்தாலே, స్తుతఏవ-தோத்திரம்பண்ணப்பட்டவனே, నసంశయః ஸம்சயமில்லை.

వ్యాసఉవాచ॥ వాసనాద్వాసుదేవస్యవాసితంతేజగత్త్రయమ్।
సర్వభూతనివాసోసివాసుదేవనమోస్తుతే॥
శ్రీవాసుదేవనమోస్తుతఓన్నమఇతి॥

వాసనాత్-வஸிக்கையாலே, వాసుదేవస్య-வாசுதேவனெனப்படுகிற, తే-உம்மாலே, జగత్త్రయం-உலகம்மூன்றும், వాసితం-வாஸம்பண்ணப்பட்டது, సర్వభూతనివాసః-ஸகலபூதங்களுக்கும் உறைவிடமாக, అసి-ஆகிறீர், వాసుదేవ-ஓ வசுதேவர்மைந்த, తే-உமக்கு, నమః நமஸ்காரம், అస్తు-ஆகக்கடவது.

పార్వత్యువాచ॥కేనోపాయేనలఘునావిష్ణోర్నామసహస్రకమ్।
పఠ్యతేపండితైర్నిత్యంశ్రోతుమిచ్ఛామ్యహంప్రభో॥

లఘునా-அற்பமான, కేన-எந்த, ఉపాయేన-உபாயத்தாலே, విష్ణోః-விஷ்ணுவினுடைய, నామసహస్రకం-நாமமாயிரமும், పండితైః-பண்டி

தாளாலே, నిత్యం தினந்தோறும், పఠ్యతే-படிக்கப்படுகிறதோ (அதை), ప్రభో-வல்லவரே! శ్రోతుం-கேட்க, ఇచ్ఛామి-விரும்புகிறேன்.

ஈசுவரன் சொல்லுகிறார்.

ఈశ్వరఉవాచ ॥ శ్రీరామరామరామేతిరమేరామేమనోరమే ।
సహస్రనామతత్తుల్యంరామనామవరాననే ॥

మనోరమే-மனதிற்கினியவளான, రామే-எந்தராமனிடத்தில், శ్రీరామరామరామేతి-ஸ்ரீராமராமராமஎன்று, రమే-ரமிக்கிறேனோ, వరాననే-ஓ செம்முகத்தாய்! రామనామ-ராமஎன்னும் நாமம், సహస్రనామతత్తుల్యం- அவ்வாயிரநாமத்துக்கும் ஈடானது.

బ్రహ్మోవాచ ॥ నమోస్త్వనంతాయసహస్రమూర్తయేసహస్రపాదాక్షిశిరోరుబాహవే । సహస్రనామ్నే పురుషాయ శాశ్వతే సహస్రకోటీయుగ ధారిణేనమః ॥

అనన్తాయ-அபரிச்சின்னனாய், సహస్రమూర్తయే-ஆயிரம் மூர்த்தியுடையனாய், సహస్రపాదాక్షిశిరోరుబాహవే-ஆயிரம் திருவடிகளும் திருக்கண்களும் திருமுடிகளும் திருத்தொடைகளும் திருத்தோள்களுமுடையனாய், సహస్రనామ్నే-ஆயிரம் திருநாமங்களுடையனான, సహస్రకోటీయుగధారిణే -ஆயிரங்கோடியுகங்தரித்திருக்கின்ற, శాశ్వతే పురుషాయ-சாசுவதபுருஷனுக்கு, నమః-நமஸ்காரம் உண்டாகுக.

ஸஞ்சயர் சொல்லுகிறார்.

సఞ్జయఉవాచ ॥ యత్రయోగేశ్వరఃకృష్ణోయత్రపార్థోధనుర్ధరః ।
తత్రశ్రీర్విజయోభూతిర్ధ్రువానీతిర్మతిర్మమ ॥

యత్ర-எங்கே, యోగేశ్వరః-யோகேசுவரனான, కృష్ణః-கிருஷ்ணனோ, యత్ర-எங்கே, ధనుర్ధరః-விற்பிடித்த, పార్థః-அர்ச்சுனனோ, తత్ర-அங்கே, శ్రీః-செல்வமும், విజయః-வெற்றியும், భూతిః-ஐசுவரியமும், నీతిః-நீதியும், ధ్రువా-நிச்சயம் (என்று) మమ-எனது, మతిః-மதிப்பு.

భగవానువాచ ॥ అనన్యాశ్చింతయన్తోమాంయేజనాఃపర్యుపాసతే
తేషాంనిత్యాభియుక్తానాంయోగక్షేమంవహామ్యహమ్ ॥

యేజనాః-எந்தஜனங்கள், అనన్యాః-மற்றொன்றைநாடாமல், మాం-என்னை, చిన్తయన్తః-சிந்தித்தவர்களாய், పర్యుపాసతే-பல்படியு முபா

ளிக்கிறுர்களோ, నిత్యాభియుక్తానాం - நித்தியாளாகைக்குத்தகுந்த, తేషాం அவர்களுக்கு, యోగక్షేమం - எனது பிராப்தியையும் அதின் பத்திரத்தையும், అహం நான், వహామి-அளிக்கிறேன்.

పరిత్రాణాయసాధూనాంవినాశాయచదుష్కృతామ్ ।
ధర్మసంస్థాపనార్థాయసంభవామియుగే యుగే॥

సాధూనాం-ஸாதுக்களுடைய, పరిత్రాణాయ-ரக்ஷணத்திற்காகவும், దుష్కృతాం-பாபிகளுடைய, వినాశాయచ-நாசத்திற்காகவும் ధర్మసంస్థాపనార్థాయ-தருமத்தைநிலைநிறுத்துவதற்காகவும், యుగేయుగే-யுகந்தோறும், సంభవామి-அவதரிக்கிறேன்.

ఆర్తావిషణ్ణాశ్శిథిలాశ్చభీతా ఘోరేషుచ వ్యాధిషువర్తమానాః ।
సంకీర్త్య నారాయణశబ్దమాత్రంవిముక్తదుఃఖాస్సుఖినోభవంతి ॥

ఆర్తాః ஸம்ஸாரத்தில் அடிகொதிப்பவரும், విషణ్ణాః- கிலேசமடைந்தோரும், శిథిలాశ్చ-இஷ்டஸித்தியில் நின்றும் தவிர்ந்தபேர்களும், భీతాః-பயந்தவர்களும், ఘోరేషు-பயங்கரமான, వ్యాధిషు-நோய்களில், వర్తమానాశ్చ இருப்பவர்களும், నారాయణశబ్దమాత్రం-நாராயண என்னும் சப்தத்தைமாத்திரம், సంకీర్త్య-ஸங்கீர்த்தனஞ்செய்து, విముక్తదుఃఖాః-துயர்நீங்கினவர்களாய், సుఖినః-சுகத்தையநுபவிக்குமவராய், భవన్తి ஆய்விடுகின்றனர்.

ஸ்ரீஸஹஸ்ரநாம ப்ரசம்ஸை.

ஸம்பூர்ணம்.

# ப்ரமாணார்த்தஸங்கிரஹம்.

1ஸத்தியம்! ஸத்தியம்! திரும்பவும் ஸத்தியம்! கையை உயரவெடுத்துச் சொல்லப்படுகிறது; வேதமென்னும் சாஸ்திரத்திற்காட்டில் மேலான (பரமாணங்) கிடையாது; கேசவனிற்காட்டில் மேலான (ப்ரமேய)ங் கிடையாது.

2இதிஹாஸ புராணங்களாலே வேதத்தை விரித்துரைக்கவேண்டும்; ஏனெனில்:—வேதபுருஷன், அற்பந்தெரிந்தவனைக்கண்டால் 'இவன் என்னை வஞ்சிக்கப்போகிறானே' என்று பயப்படுகிறான்.

3மதியென்னும்மத்தைநாட்டி எவரால் வேதமென்னுங் கடலிலிருந்து இந்த மஹாபாரதமென்னும் சந்திரன், லோகஹிதத்துக்காக உண்டு பண்ணப்பட்டதோ?

4புகவரிய சாஸ்திரத்தைக்கண்டு மனிதன் கொடுமையான ஔஷதத்தைக் கண்டாற்போல் பயப்படுகிறான்; ஆகையால் சாஸ்திர ஸாரமான இந்தப் பாரதம் காவ்யரூபமாகச் செய்யப்பட்டது.

5மஹாபாரதமென்னும் சந்திரன் எவரால் பிரகாசமாய் விளங்கினதோ, அப்படிப்பட்ட த்வைபாயநரென்னும் புத்திரனாய் விஷ்ணுவானவர்தாமே எவருக்குப் பிறந்தாரோ.

6கிருஷ்ண த்வைபாயநரென்னும் வியாஸரை ஸர்வவியாபகனான நாராயணனென்றறியும்; ஏனெனில், ஓமைத்திரேய! புவியில்வேறுயாவன் மஹாபாரதத்தைச் செய்யமாட்டுவன்?

7வேதமென்னும் மலையினின்று இழியுமதாய், குத்ஸித தர்மங்களென்னும் மரங்களைப்பிடுங்கிக்கொண்டு வருகின்றதான வியாஸவாக்கியமென்னும் நீர் வெள்ளத்தால் பூமியானது துகளற்றதாகப் பண்ணப்பட்டது.

8த்விஜனாய்ப்பிறந்து யாவனொருவன் நான்குவேதங்களையும் ஸாங்கமாய் உபநிஷத்துக்களோடுங் கற்றவனாயும், இந்த பாரதமென்னும ஆக்கியானத்தை யறியாமற்போகிறானோ, அவன் வல்லவனாகவேமாட்டான்.

9இதிலுள்ளதுதான் புறம்பும்; இதிலில்லாதது வேறெங்குமில்லை.

10ஹேராஜந்! தருமங்கள் முழுமையும் கேட்கவிரும்புவீராகில், ஓபெருந்தோளுடையீர் குருவம்சத்திற்குமூதுவராய்விர்த்தரானபீஷ்மரிடம்போம். அவர் ஸர்வரஹஸ்யங்களிலும் உம்மனதிலுள்ள ஸம்சயங்களைப் போக்கவல்லவர்; கங்கையின் புதல்வனான அவர் ஸர்வஜ்ஞர்; ஸகலதத்வங்களையுங் கண்டவர் பிரத்தியக்ஷமாய்க் கண்டார் இந்திரன் முதலிய ஸகலதேவதைகளையும்,எவருக்கானால், பரமபாகவதாளாகியப் பிரம்மரிஷிகளெல்லாம் நித்தியமாய் ஸபிகளாயிருப்பார்களோ; எவருக்கானால் அறியவேண்டுமவைகளில் அறியப்படாத ஞானம் யாதொன்றுங் கிடையாதோ;தர்மக்ஞராய் ஸூக்ஷ்மார்த்தங்களினது தத்துவத்தைக் கண்டறிந்த அவர்உமக்குத் தருமங்களைச் சொல்லுவர்.

11கணையணையிற்கிடந்த புருஷசிரேஷ்டரான பீஷ்மர் அணையப்போகிற அக்கினிபோல் விளங்கி, என்னைத் தியானிக்கின்றார்; ஆகையால் என்மனம் அவ்விடம்சென்றுவிட்டது மகாபராக்கிரமியானயாதொருபுத்திமான், திவ்யாஸ்திரங்களையும்ஸாங்கமானநான்குவேதங்களையுந்தரித்திருக்கின்றாரோ, அவரைநான்மனதால் அடைந்தேனாகிறேன். அவரோபூதபவிஷ்யத்வர்த்தமானங்களை அறிந்ததர்மவித்துக்களில்தலைவர், ஆகையால்என்மனம் அவரிடம்சென்றது. கௌரவாளுக்கெல்லாம் துரந்தரரான அந்தபீஷ்மர்முடிந்தாராகில் ஞானமார்க்கங்கள் குறைவுபட்டுப்போம் ஆகையால்உம்மைத்தூண்டுகின்றேன்! ..ஓ பீஷ்மரே! உம்மை அநுவர்த்தித்துக் கேட்கும் தருமபுத்திரருக்கு நீர் எவைகளைச் சொல்வீரோ, அவை வேதவாக்கியங்கள்போல பூதலத்தில் நிலைபெற்றிருக்கும். ஏனெனில்:—ஓ பரதகுலச்சிரேஷ்ட! பூதபவிஷ்யத்வர்த்தமானங்களெல்லாம் ஞானவிர்த்தரான உமது கையிலிலங்குவதுபோல; ஓ குருஷச்சிரேஷ்ட! நீர் சராசராத்மகமான லோகங்களை உமது தவத்தால் படைக்கமாட்டுவீரென்று உம்மை நானும்அபிமானிக்கின்றேன். உமக்கு வாட்டமின்று, மயக்கமின்று; ஓ பீஷ்மரே! உமது மனமானது எப்போதும் ஸத்வத்தில்தானே இருக்கப்போகிறது; அதுவும ரஜஸ்மஸ்ஸுக்களோடு கலசாமல் மேகங்களைவிட்டு நீங்கிய சந்திரன்போல் விளங்கும்.

12இவர், நான்குவருணத்துக்கும் வேண்டிய பலவகைத் தருமங்களையும் அறியும்; ஆதலின் மனதிலுள்ள ஸந்தேஹங்களை விரைவில் கேட்டுக்கொள்ளுங்கள்.

13ஹேகோவிந்த! ஆசை, மயக்கம், சிரமம், வாட்டம், நோய் இவையெல்லாம் உமது அநுக்கிரஹத்தால் இப்பொழுது போய்விட்டது; பூதபவிஷ்யத் வர்த்தமானம் எல்லாம், ஓ அச்சுத! மிகவுங் கையிலிலங்குவது போல் பார்க்கிறேன். வேதவேதாங்கங்களில் சொன்ன தர்மங்களையெல்லாம் தேவரீர் வரந்தந்ததனால் நன்றாய்க்காண்கிறேன் தேவரீரை இடைவிடாமல தியானிப்பதனால் புஷ்டனாய் யௌவனமடைந்தவன்போல் ஆய்விட்டேன்; ஹேஜநார்த்தந! தேவரீர் அநுக்கிரகத்தால் இனி சிரேயஸ்ஸைச் சொல்ல வல்லவனாகிறேன்.

14இதுதான் ஸகல தருமங்களிலும் ரொம்பவும் உத்கிருஷ்டமாக என்னால் நிர்ணயிக்கப்பட்டது.

1 ,தேவன் நாமமாயிரமுடையவன்,

16ஆயிரம் திருநாமங்களுடையனாய், ஆதிதேவனாய், பிறப்பற்றவனான வியாபகனை.

1'/ஆயிரம்முடிகள் பொருந்தி சராசரங்களுக்குப்பதியான விஷ்ணுவை ஸஹஸ்ரநாமங்கொண்டு துதித்தானாகில் ஜ்வரங்களையெல்லாம் போக்கடிக்கிறான்.

18ஜபிக்கத்தக்கது புருஷஸூக்தம்; அப்படியே பாரதத்திற்சொன்ன நாமஸஹஸ்ரமும்.

19 அப்படியே பகவானுடைய நாமஸஹஸ்ரத்தைக் கீர்த்தநம் பண்ணக்கடவன்.

20 ஹோமமோ முன்போலவே; ஜபிக்கவேண்டுவதோ ஜகத்கர்த்தாவினது நாமஸஹஸ்ரத்தை.

21 [இதற்குப்பாடம் பேதப்பட்டிருக்குமென்கிற அபிப்பிராயத்தாலே அர்த்தம் எழுதப்படவில்லை ]

22 ஒவாது நாராயண ஸஹஸ்ரநாமம்படிக்கப்படுகிற (ஸௌதிகாகிருஹம்.)

23 பிராம்மணன் மற்றது செய்யட்டும் செய்யாமலிருக்கட்டும்; ஜபமாத்திரத்தால் ஸித்தியடைகிறான்; என்று மைத்திரப் பிராம்மணவார்த்தை.

...திரவிய யக்ஞத்தைவிட ஜபயக்ஞம் பத்து பங்கு விசேஷம்...யக்ஞங்களுக்குள் ஜபயக்ஞமாகிறேன்.

24 காணக்கூடாதவனாய், எண்ணக்கூடாதவனாய், சொல்லக்கூடாதவனாய், விஷயமாகாதவனாயிருக்கிற கீழ்ச்சொன்ன பரமாத்மாவினிடத்தில் இந்தபுருஷன் எப்பொழுதானால் இடைவிடாத நிஷ்டையடைகிறானோ, அப்பொழுது அவன் நிர்ப்பயனாகிறான். இவன் எப்பொழுதானால் துளி இடைவிடுகிறானோ அப்பொழுதே இவனுக்கு பயம்வந்துவிட்டது,

25 வாசுதேவனை ஒருமுகூர்த்தம், அல்லது ஒருக்ஷணம் சிந்திக்காமலிருந்தானாகில், அதுதான் இவனுக்கு ஹாநி, அதுதான் மஹத்தான (ஆபத்துக்கிடமான) சந்து; அதுதான் மதிமயக்கம்; அதுவேதான் விபத்துதசை ...அக்கினிஜ்வாலையின் நடுவிலுள்ளதோர் கூண்டிலிருப்பு மிகநன்றாம்; ஸ்ரீசௌரியைச் சிந்திப்பதில் முகம்திருப்பாதப பிராணிகளிடையில் வஸிப்பது அருமரணமாம். ...எம்பெருமானைச் சிந்திக்காமல் ஒருமுகூர்த்தம் கடந்தாலும், திருடர் நமது ஸகல ஸாம்ராஜ்யத்தையும கொள்ளைகொண்டாப்போல் மிகவும் வாய்விட்டுக்கதறியழுவமையும்.

26 ஸகலமுங்கூடின ஆசாரியனாய், பிதாவாய், பெரியவனாய் அர்ச்சிக்க யோக்கியனாயிருக்கிற (கண்ணனை) அருச்சிக்க விரும்புகிறோம்; நீவிர் யாவரும் ஸம்மதிக்கக் கடவீர்கள். அந்த ஜநார்த்தனனைவிட்டால் வேறு ஸர்வப்பிரகாரத்தாலும் பூஜிக்கத்தக்கவன், ஒருவனுமில்லையென்று நான் மதிக்கிறேன்... பிரமனையும், நீலகண்டனையும், மற்றுமுண்டான தேவர்களையும் விவேகமுள்ளபேர் ஸேவிக்கமாட்டார்கள்; ஏனெனில்: — அவர்களால் கிடைக்கும்பலம் அளவுடையது...அவர்கள் தரும் பலம் அந்தமுடையது.

27 என்னிடத்தில்தானே சிந்தையைவைத்து என்னுடைய பிராணனுடையரான (மஹாத்துமாக்கள்.)

28 யக்ஞாதி சுருதிகளுண்டாகையாலே ஸகலமும்வேண்டும்...சமதமாதிகளுடன்கூடியிருக்கக்கடவன் ...சாஸ்திரம் விதிக்கையாலே பலதடவை நடக்கவேண்டும்.

29 அவனைஇப்படிஅறிந்தவன்.... பிரமத்தை அறிந்தவன் பரமபுருஷனை அடைகிறான்...வர்ணாஸ்ரமவிருத்தமல்லாத யக்ஞத்தாலும் தானத்தாலும், தவ

த்தாலும், அந்தஃகரண நிக்கிரஹமுடையனும் பஹிஃகரண நிக்கிரஹமுடையனும்.

30வேதநமென்றது உபாஸனையை; இவ்விஷயத்தில் சுருதிசொல்லுகையாலே.

31இவன்ரூபம் கண்ணுக்குவிஷயமாய் நிற்பதன்று; இவனை ஒருவனும் கண்ணால் காணமாட்டான்; உருக்கத்துடன்கூடிய மனதாலே கிட்டக்கூடியவன்...இவனை எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் மரணாதிகளுக்கு ஆட்படாமல் விளங்குவர்கள என்றும், ..''கண்முகப்பில் நிற்பவனல்லன்'' என்றுதொடங்கி பக்தியாலும் தாரணையாலும் செவ்விபட்டமனதுடன் கூடியவன் ஞாநஸ்வரூபனை இங்கே நன்றாய்க்காண்கிறான்.

32ஸர்வஸ்மாத்பரனான பரமபுருஷன், ஓ அர்ச்சுன! அவனுக்கே அற்றுத்தீர்ந்த பக்தியால் அடையக்கூடியவன்....அந்யவிஷயத்தில் மாறாது தனக்கென்றே தீர்ந்த பக்தியால் அடையக்கூடியவன்....பக்தியால் என்னை நன்கறிவான்.

33பக்தியிடையறாதாகில் முக்தி.

34பரமாத்மாவான கோவிந்தனிடத்தில் ஊறுதபக்தியுண்டாகில் அது மனிதருக்கு முக்தியைத்தருகிறது, இதில் உனக்கு ஸம்சயம்வேண்டாம்.

35எவர்களானால் புரு ஷபுருஷனை உன்னிடத்தில் திடமான பக்தி பண்ணுகிறார்களோ, அவர்கள் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் எப்போதும் அபீஷ்டங்களைப் பெறுவர்கள்; பக்திமான்கள் அமோகமாய் விளங்குவர்கள்

36எவர்களுக்கு விஷ்ணுவானவர் எப்போதும் பிரியரோ, அவர்கள் விஷ்ணுவுக்கு எப்போதும் பிரியர்: அவர்கள் அவருக்குப்பக்தர்களாய் அவரே கதியாயிருக்கையாலே அவர்கள் மறுபடியும் பிறப்பதில்லை.

37ஸேவை, பக்தி, உபாஸ்தி (இம்மூன்றும்) பக்திக்குப்பெயர்.

38''பஜ'' என்கிற இந்த தாது, ஸேவையில் சொல்லப்பட்டது; ஆகையாலே பண்டிதர்கள் ஸேவையென்பதைப் பலவிடங்களில் பக்தி சப்தத்தாலே கூறினார்கள்.

39ஞானிக்கு மிகவும் பிரியனன்றோ?...பிரீதியுடன் பஜிப்பவருக்கு...ஸந்தோஷிக்கிறார்கள், ரமிக்கிறார்கள்...ஓ நாத! ஆயிரஞ்சன்மமெடுத்தாலும ஆவைகளில் (உனது பக்தியே உண்டாயிருக்கவேண்டும்) ...அவிவேகிகளுக்கு (சப்தாதி விஷயங்களிலுண்டான) ப்ரீதி (உன்னிடத்தில் உண்டாக வேண்டும்)...அவனைத் தியானிப்பதிலுண்டான ஸந்தோஷத்தில் விருந்தவராய (பிரஹ்லாதன் பாம்புகள் கடிப்பதையும கணிசித்திலர் என்று மேலேகூட்டுவது.) அவன் நாமஸ்மரணத்தால் தேஹம் புளகித்தார்; அசுரர் தலைவன், ...ஞானவாஸனையுடன் பண்ணப்பட்ட ஸேவை, பக்தியென்னப்படும; அது உண்டாயிற்றாகில் அநந்தநம் தன்னுடையே

ஸ்நேஹபாவ முண்டாய்விடும்...பரமாத்மாவிடத்தில் ராகமுண்டானவன் த திரவிஷயங்களில வைராக்கிய முடையனுய் ராஷ ஞத்திரயமுமறு பிக்ஷைகொண்டு காலங்கழிக்கு மதிகாரியாவான்....அந்த தேவன்நம்மை நல்ல நினைவுடன் கூட்டக்கடவன்.

40என்னைமேலாச் சிந்திததுகொண்டு,...அாச்சுந! என்னைச் சிந்தித்துக்கொண்டு...கிருஷ்ணனை ஸ்மரிப்பது உத்கிருஷ்டம்.

41எப்பொழுதும (என்னைக்) கீரத்தனம்செய்பவர்...என்னிடத்தில் மனமாயிரு.

42மிகவும் ரஹஸ்யமான இதை...இதையறிந்தால் வேறுஅறிய வேண்டியதில்லை....மிகவும் ரஹஸ்யமானதை.

4 பல ஜந்மங்களுக்குப் பின்பு ஞாநவானுய் என்னை அடைகின்றுன்....எனக்கெல்லாம் வாஸுதேவனே என்கிற அப்படிப்பட்டமஹாத்மா அதிதுாலபன்...சன்மங்கள் பலவுமெடுத்துத் தவம்தியாநம் ஸமாதிகள்செய்து, நரர்களுக்குப் பாவந்தொலைந்ததாகில் கண்ணனிடத்தில் பக்தியுண்டாகும்,

44எவனைத் துதித்தால் துதிப்பவனும தோத்திரத்துக் கேற்கிருனே?

45ஒரு பூர்ணகும்பம், ஓரஞ்சலி பாத்யம், குசலப்பிரச்நமான ஒருசொல் இவைகளைத் தவிர ஜநார்த்தனன் வேறொன்றையும் அபேக்ஷிப்பதில்லை,

46செய்தற்கு மிகவும் சுகமானது.

47ஆர்த்தியடைந்தோரும், மனோவியாதியுடையோரும், மற்றும் வருத்தமடைந்தோரும், பயந்தோரும், கோரமான வியாதியடைந்தோரும் 'நாராயண' வென்கிற சொல்லைமாத்திரம் பக்தியுடன் சொன்னுர்களாகில் ஸகல துன்பங்களும் விட்டு சுகமாய்வாழ்வர்கள்.

48தன்னையறியாமல் அவன் நாமத்தைச்சொல்லினும் (பாவந்தொலையும.)

49அறிந்தாகிலும், அறியாமலாகிலும் வாஸுதேவனைப் பேசுவதால் அந்த பாபமெல்லாம் ஜலத்திலிட்ட உப்புபோல் கரைந்துபோம்-

50நெருப்பை யணைக்க நீரும், இருளுக்குச் சூரியோதயமும் போரும்; அப்படியே கலியில் உண்டான பாவ ஸமுதாயத்துக்கு ஹரிநாம ஸங்கீரத்தனஞ் செய்தால்போரும்...எவனுடையநாமத்

தை ஸங்கீர்த்தனம் செய்தமாத்திரத்தில் மஹாபயத்தினின்றும் விடுபடுகிறானோ?...ஹரி: என்கிற இரண்டு அக்ஷரத்தை எவன் ஒருக்கால உச்சரித்தானோ அவன் மோக்ஷம்போவதற்குக் கிருத கிருத்தியனாய் விட்டான்...எவன் நாமத்தை நினைத்தமாத்திரத்தில் மனிதன் பிராணனை உத்க்ரமித்த பிறகு புநராவ்ருத்தியில்லாத வைஷ்ணவ ஸ்தானத்தை அடைகிறானோ...அச்சுதன் அநந்தன், கோவிந்தன், என்கிற நாமத்தை உச்சரிக்கிறதென்கிற மஹௌஷதத்தால் ஸகலரோகங்களும் நசிக்கும்; இது ஸத்யம் ஸத்யம் நான் சொல்லுகிறேன்....ஜகந்நாதனையாவது கீர்த்தனஞ்செய்வது; வேதத்தையாவது ஓதுவது செயல்வேண்டும்.

51இவனது யாதேனும் ஒருநாமத்தை யறிந்தபோதே சாசுவதராய் நித்திய சூரிகளுடன்கூடி விளங்குவார்

52பிரத்தியக்ஷமாய் காணக்கூடியது.

53நான் ஸர்வபூதங்களிலும் ஸமமானவன்; எவ்வளவு கெட்ட நடவடிக்கையுடையவராயினும், ஓ அர்ச்சுந! எப்படிப்பட்ட பாப ஜந்மாக்களானாலும் என்னை ஆச்ரயித்தமையால் (பரகதியடைகின்றார்கள்.)

54கெட்டசெய்கையிலிருந்து நிவ்ருத்தனாகாமலும் இந்திரிய ஜயம் பண்ணாமலும் ஸமாதியில் நிலையில்லாதவனும் (இவனை அடையக்கூடியவனல்லன்.

55விரைவில் தர்மாத்மாவாகிறான்.

56சமதமாதிகளுடன்கூடி யிருத்தல்வேண்டும்.

57ஓநாத! உன்னிடத்தில் பக்தியுடன்கூடி யாவனொருவன்நம: என்றே சொல்லுகிறானோ, அவன் சண்டாளனாகிலும் அவனுக்கு அக்ஷயமான லோகங்கிடைக்கும்.

58சக்கிராயுதன் நாமங்களை எப்போதுமெங்குஞ் சொல்லலாம்; ஸமஸ்தபாபங்களையும் அபஹரிக்கும் அவன் பரம பாவநனன்றோ?.. காலையில் தேவனென்றும் கிருஷ்ணனென்றும், கோவிந்தனென்றும் பாடுவோருக்கு மத்தியான்னத்திலும் அபரான்னத்திலும் என்னவருத்தம்சொல்?

59இத்தருமம் கொஞ்சமானாலும் மஹாபயத்தினின்றும் காப்பாற்றும்.

60இதில் ஆரம்ப நாசமில்லை. ..எனது பக்தன் நசிப்பதில்லை. ...அவனை வணங்கி வருத்தமுறான்.... வாசுதேவனை வணங்கி வரு

த்தமூறுவதில்லை. ... ஜநார்த்தனனைப் பணிந்தவன் வருந்துகிற தில்லை.

61 பிரத்யவாயமில்லை, ..மோக்ஷம்போகைக்கு அவன் பரிகாரந் தேடிக்கொண்டான்.

62 அவன் நல்ல நிச்சயமுடையவனன்றோ? ...பத்திரமோ புஷ்பமோ பலமோ தீர்த்தமோ (எதையுந் திருவுள்ளம்பற்றுமவன்) ...எவனாலும் தனத்தாலாவது, விபவங்களாலாவது பூஷணங்களாலாவது ஸந்தோஷியாமல் கேவல இருதயத்தாலேயே ஸந்தோஷிக்கிறானோ அந்த ஈசனை எவந்தான் பூஜிக்கமாட்டான்.

63 பாவனொருவன் புருஷஸூக்தத்தாலே புஷ்பங்களையோ, தீர்த்தத்தையோ கொடுக்கிறானோ, அவனால் இந்த சராசரரூபமான ஸகல ஜகத்தும் அர்ச்சிக்கப்பட்டதாகும்.

64 இரத்தினத்தால் நிறைந்த பூமியை ஒருவன் கிருஷ்ணனுக்குக் கொடுத்தாலும் அவன் அன்னிய விஷயத்தில் மனமுடையனாகில் அவனுக்கு ஜநார்த்தனன் சுலபனல்லன்.

65 மனிதர்களுக்கு ஸகல வஸ்துக்களிலும் ஹிருதயசுத்தியொன்றே பிரமாணம்; பிரியநாயகியை ஒருவித சினேகத்தால் ஆலிங்கநம் செய்கிறார்கள்; பெண்ணை ஒருவித சினேகத்தால் ஆலிங்கனம் பண்ணிக்கொள்ளுகிறார்கள். ... தவக்குற்றங்குற்றமன்று; அத்தியயனக்குற்றங்குற்றமன்று; ஸ்வாபாவிகமான வேதவிதிக்குற்றங்குற்றமன்று; பலாத்கரித்து மனதைப்பிழுக்கையும் குற்றமன்று; மற்றப்படி அபிப்பிராயத்தால்வந்த குற்றமே குற்றமாவது.

66 கங்கைமுதலிய தீர்த்தங்களில் மத்ஸ்யங்கள் வஸிக்கின்றன; தேவாலயத்தில் பக்ஷிஸங்கங்கள் நித்தியமாய் வஸிக்கின்றன. அவைகட்கு அபிஸந்தியில்லாமையாலே பலன்பெறுவதில்லை. ஆகையால் தீர்த்தங்களும் புண்ணிய க்ஷேத்திரங்களுமே முக்கியமன்று.

67 கிருதயுகத்தில் தியானித்தும், திரேதாயுகத்தில் யக்ஞங்களால் யஜித்தும் துவாபரயுகத்தில் அர்ச்சித்தும் எதை அடைகிறானோ அதைக்கலியில் கேசவனைப்பாடிப் பெறுவான்.

68 ஸகல தர்மங்களிலும் வைஷ்ணவ விதியானது உத்தமம். ஸ்ரீ விஷ்ணுபகவான் பக்தர்களைத் தனது சரீரம்போல் ரக்ஷிக்கிறார். கோவிந்தன் பக்தியைக்காட்டிலும் சிறந்த வேறு சிரேயஸ் கிடையாது.

69 பரஞ்சோதியை அடைந்து...சூரியன் அவன காந்தியையடைந்து விளங்குகிறான்.

70 ஏவனாலல் தேவர்களெல்லாம் நாற்புறமும் தபிக்கிறாளோ ஈசுவரருக்கெல்லாம் பரம மஹேசுவரனான அவனை....இவன் ஸர்வேசுவரன்.

71 இவனையோ ஒருவனும் தபிப்பதில்லை...அதெப்படியெனில்: தாமரையிலையில் தண்ணீர் ஒட்டாவாப்போல...அதெப்படியெனில்.—பஞ்சானது அங்கினியில்போட்டால் அதுகருகிப்போவதுபோல், புண்ணிய பாவங்களை உதருகின்றது...அப்பொழுது ஞானியானவன் புண்ணியபாவங்களை உதறி...க்ஷேத்திரக்ஞனென்கிற ஜீவனுக்கு ஈசுவரக்ஞானத்தால் பரமசுத்தியுண்டாவதாகச் சொல்லப்படுகிறது...ஸ்நாநம்முதலிய கருமங்களில் தேவனான ஸ்ரீமந்நாராயணனைத் தியானிக்கக்கடவன்...அதை ஸகல பாபங்களுக்கும பிராயச்சித்தமாக வன்றோ சுருதி; ஓ ரகுசிரேஷ்ட! ஸகலலோகத்துக்கும் தேவரீரே பரிசுத்திகரன்.

72 கருமாதீனமாய்ப் பிறக்கும் மற்றத்தேவர்களெல்லாம் அசுத்தர்கள்; உலகத்திலிருக்கும் பிரமன்முதல் புல்லளவானப் பிராணிகளும்,கருமத்தால வரும் ஸம்ஸாரவசமாயிருப்பவைகள்.

73 ஹரியானவர் தியானிக்கப்பட்டவராய்க்கொண்டு பிற்காலத்தில் மோக்ஷத்தைத் தருமவராய், இஹத்தில் ரூபம், ஆரோக்கியம், அர்த்தங்கள்; போகங்கள் இவைகளைக்கொடுக்கின்றார் ஹரியானவர் தியானிக்கப்படுவாராகில் ஸகலக் கிலேசங்களுக்கும் ஹானியைக்கொடுப்பார்; ஆகையால் இதர ஸமஸ்த விஷயங்களையுந் துறந்து அவரை யேன்சிந்திப்பதில்லை? ...ஸ்நாநாதிகாரியங்களில் நாராயணனைத் தியானிக்கவேண்டும்; ஏனெனில் அது ஸகலபாபங்களுக்கும் பிராயச்சித்தமென்றன்றோ சுருதி?...அதிபாதகம் செய்தவனும் அச்சுதனை நிமிஷமாத்திரம் தியானிப்பானாகில் அவன் கிரமமாய் தபஸ்வியான நிலைக்குவந்து பங்கியைப் பரிசுத்தம்பண்ணவல்ல பெரியவர் கோஷ்டிக்குதக்கவனாய்விடுவன்...ஸகல சாஸ்திரங்களையும், ஆராய்ந்தும், மறுபடி மறுபடி விசாரித்தும் ஈதொன்றே தேறியது; எது? நாராயணனொருவனையே சிந்திக்கவேண்டுமென்பதாம்;...ஸத்துவத்தில் நிலைநின்ற நீங்கள் ஹரி ஒருவரையே எப்போதும் தியானிக்கக்கடவீர்கள்; ஓப்பிராமணர்காள்! ஓம் என்றுசொல்லி இப்படியே படித்துக் கொண்டு கேசவனைத் தியாநம் செய்யுங்கள்...பராபரனான அவனைக்கண்டமாத்திரத்தில் இருதயத்தில் முடிச்சு அவிழ்ந்து ஸகல ஸந்தேஹங்களுமறுபட்டு இவன் செய்யுங்கருமங்களெல்லாம் அழிவுறுகின்றன....ஓமைத்ரேய? யாதொரு பரம புருஷனுடைய உத்தமமான திருநாமங்களைப் பக்தியுடன் பாடுவதானது, தாதுவர்க்கங்களுக்கு நெருப்புபோலே ஸகலபாபங்களையும் நசிக்கப்பண்ணுமது....தன்னையுமறியாமல் ஒருவாறு அவன் திருநாமத்தைக் கீர்த்தநம் செய்தாலும் உடனே ஸிம்மத்தைக்கண்ட மிருகங்கள்போல ஸகல பாபங்களும்புருஷனைவிட்டோடுகின்றன...கிருதத்திலோ த

த்வாபரயுகங்களில் முறையே தியானித்தும், யக்ஞம் செய்தும், அர்ச்சனை பண்ணியும் அடையுமதை யெல்லாம் கலியுகத்தில் கேசவனைப்பாடுவதனால் பெறலாகும். துஷ்டமதியுடன் நினைத்தாலும் ஹரியானவர் பாபங்களைப் போக்கடிக்கிறார்; இச்சையின்றி தொட்டாலும் அக்கினிபொசுத்தே விடுமன்றோ?...அறிந்து அல்லது அறியாமல் வாசுதேவனைப்பாடினால் நீரில்கரைத்த உப்புபோல்பாவமெல்லாம் லயித்துப்போம்..எவனிடத்தில் மனம்வைத்தவன் நரகம்புகானோ எவனைச் சிந்தித்தால் சுவர்க்கமும் இடையூறாய்த் தோன்றுமோ, எவனிடத்தில் ஆத்மாவையும் மனத்தையுஞ் செலுத்தினவனுக்குப் பிரம்மலோகமும் அதிக அற்பமோ, எவனானவன் நிர்மல மனஸ்ஸுக்களான புருஷர்களுள்ளத்திலிருந்தபடியே அவர்களுக்கு முக்தியைத் தருகின்றானோ, அந்த அச்சுதனைப்பாடினால் பாவந்தொலையுமென்கிறதென்ன ஆச்சரியம்...நெருப்புக்கு நீரும் இருளுக்குச் சூரியனும் போல், கலியில் பாவத்துக்கு ஹரிநாமஸங்கீர்த்தநமாம். ஹரியினது திருநாமமே எனக்கு மூன்று தரத்துக்கும் ஜீவநம், கலியில் வேறுகதியில்லவேயில்லை யென்பதையும் மூன்றுதரம் சபதமாய்ச்சொல்லுகிறேன்...மனிதன் ஸர்வவியாபகனான வாசுதேவனைத் துதித்து பாவத்தைத் தீர்க்கின்றான். நித்தியமாய் விஷ்ணுவைப் பூஜிப்பதனால் ஸகலபாபமும் நசிக்கும்...ஸம்ஸாரமென்னும் பாம்புதீண்டினமையால் கைகாலசைக்கமாட்டாமல்கிடக்கும் பிராணிக்கு மருந்தாய் விளங்கும் "கிருஷ்ண" என்னும் வைஷ்ணவ மந்திரத்தைக்கேட்டு மனிதன் முக்தியடைகின்றான் எவர்களுள்ளத்தில் மங்கள ஸ்தாநமான ஸ்ரீ ஹரியானவர் விளங்குகிறாரோ, அவர்களுக்கு ஒருபோதும் எந்தகாரியத்திலும் அமங்களமுண்டாகமாட்டாது...யோகத்திலிருந்து இவன் நித்தியமாய் ஜநார்த்தனனைச் சிந்தித்திருக்கிறான்;. ஆகையால் இவனுக்கு நல்ல ரக்ஷணமுண்டாயிருக்கிறதாக நான் மதிக்கிறேன், ஏனெனில்—அச்சுதனை அடுத்தவனை யெவன்கொல்லமாட்டுவன்....ஆயிரம் கங்காஸ்நாநத்தாலும் கோடி புஷ்கர ஸ்நாநத்தாலும் போகவேண்டிய பாபம் ஹரியை நினைத்தமாத்திரத்தில நசித்துப்போம்...கருமரூபங்களாயுள்ள ஸகலப் பிராயச்சித்தங்களையுங் காட்டில் ஸ்ரீகிருஷ்ணனை ஸ்மரிப்பது தரம். ஒருவன் ஒருமுகூர்த்தமாவது நாராயணனைச் சேம்பலில்லாமல் தியாநம்செய்தானாகில் அவனும ஸித்தி அடைகிறானென்றால் அவனேகதியா யெந்தவேளையும் இருப்பவனுக்குக் கேட்கவேண்டுமோ.... தியானமின்றி ஒருமுகூர்த்தகாலம் போனாலும் ஸகல ஸாம்ராஜ்யத்தையுங் கொள்ளைகொடுத்தவனைப்போல் கதறியழவடுக்கும...கோவிந்தனை ஒருக்கால் நினைத்தாலும் அவன், மனுஷியாளுடைய அநேகஜந்மார்ஜிதமான பாபராசியையும் பஞ்சுப்போதியைக் கொளுத்தும் நெருப்புப்போல் பொசுக்கிவிடுவன். இப்படியே ஏகாக்கிரசித்தனாய்க்கொண்டு மதுசூதனனை ஆச்ரயித்தவனாய், பிறப்பு இறப்பு மூப்பென்னும் முதலையுடன்கூடிய ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டிவிடுவாய்...நெருப்பானது காற்றுடன்கூடி ஜ்வலியா நின்றுகொண்டு புதரைப் பொசுக்குவதுபோல விஷ்ணுவானவர் உள்ளத்திலிருந்தபடியே பிராணிகளினது ஸகல பாபத்தை

யும் போக்கடிக்கிறார்...ஸகல பூதங்களுக்கும் பதியாய், ஜகத்குருவான ஜநார்த்தனனை இடைவிடாது சிந்திக்கும் மனுஷியன், ஓ மாமுனியே! ஸகல பாபங்களையும் போக்கடித்து தானிஷ்டப்பட்ட ஸகலகாரியங்களையும் ஸாதித்துக்கொள்ளுகிறான்...தோஷம் நிறைந்த இந்த கலியுகத்தில் விஷயத்தில் மண்டிய மனத்தோடு புருஷன் ஸகலபாபத்தையும் பண்ணினாலும், கோவிந்தனை நினைத்தானாகில பரிசுத்தனாய் விட்டான்...வாசுதேவனிடத்திலும், அவனுடைய ஜபம், ஹோமம், அர்ச்சனைமுதலியவைகளிலும் எவனுக்கு மனதோ அவனுக்கு தேவேந்திரனாயிருக்கைமுதலிய புருஷார்த்தங்களெல்லாம் விக்கினமாய்த் தோன்றும்...மூவுலகத்துக்கும் காவலனாய், ஈடில்லாத பரபாவனாய், ஸ்வயம் ஸமர்த்தனாய், ஸர்வநியந்தாவான விஷ்ணுவைக் கொஞ்சம்வணங்கினானாகில் நரனானவனுக்கு ஆயிரம் பிரளயம் ஆயிரம கல்பமாய் தானெடுத்த ஜந்மாந்தரபாபமும் உடனே அழிந்து போம்...கண்ணனை ஒருக்கால வணங்குவது பத்து அசுவமேதத்துக் கொப்பு; ஆனால் பத்து அசுவமேதம் பண்ணவன் மறுபடி பிறக்கிறான்; கிருஷ்ணபரணாமஞ்செய்தவன் மறுபடியும் பிறவியெடுக்கமாட்டான்...காயாம்பூ மேனியும் பீதகவாடையுமான ஆச்ரிதரக்ஷைகவிடாத கோவிந்தனை எவர்கள் வணங்குகின்றார்களோ அவருக்கு பயமில்லை...சக்கிரபாணியைக் குறித்து வஞ்சகமாயொருநமஸ்காரம்பண்ணினாலும் ஸம்ஸாரமூலமான பந்தத்துக்குத் தீங்கைச்செய்யுமன்றோ?

74விஷ்ணுவினது இடது திருவடிகளி லிருந்து புறப்பட்ட ஜலத்திற்கு இந்த மஹிமை.

75ஜலம் விஷ்ணுவுக்கு இடமன்றோ? ஆகவேயன்றோ அவனை அபாம்பதி யென்கிறது?

76எங்கும் பரந்த வாசுதேவனை அறிந்த விப்பிரன் தத்வ தரிசியாகையால் விப்பிரத்தன்மையை நிலைக்கபபார்த்தவனாகிறான்.

77வேதங்கள் நாராயணன் பரமானங்கள்...சுருதியும் ஸ்மிருதியும் நம்முடைய ஆக்ஞையே.

78"துவாரகை புண்ணியமானது" என்றுதொடங்கி, "இதராளோடு ஸமமாய் எண்ணப்போகாத ஸ்வரூபனான ஸ்ரீ மதுஸூதனன் அங்குதானிருக்கிறார்; ஆகையால் அதுதான் புண்ணியம்; அதுதான் பரப்பிரம்மம், அதுதான் தீர்த்தம்; அதுதான் தபோவநம்...பரிசுத்தமானவைகளுக்குள் மிகவும் பரிசுத்தனாக ஸ்ரீகோவிந்தன் சொல்லப்படுகிறான்; புண்ணியங்களுககும் இது புண்ணியம்.

79எவனிடத்தினின்று பிறவைகளோ.

80எதனிடத்தினின்றும் இதற்கு உற்பத்திமுதலியவையோ.

81பிரம்மமே வனம்; பிரம்மமே விருக்ஷமாச்சுது...பிரதிக்ஞைக்கும்திருஷ்டாந்தத்துக்கும் சேருகையாலே உபாதாககாரணமும் [பானைக்கு மண்ணை உபாதாநகாரணமென்கிறதென்றறிக.]

101விசுவத்துக்குப் பதியை . பதிகளுக்குப்பதியை...பூதங்களுக்குப் பதி ஒருவனே ஆனான ..பிரபஞ்சம் அந்த புருஷனுடையது...இத்திசைகளிலுள்ளவையெல்லாம் எவனுடையதோ . சராசராத்மகமான இந்த விசுவமெல்லாம் கிருஷ்ணனுக்காகவன்று, ..கேசியைக்கொன்ற கேசவன், முக்காலத்திலுமுள்ள பொருள்கட்கும்நாதன் ..ஓராஜந்! ஜகந்நாதனுடைய.

102இதெல்லாம் பிரம்மத்தாலேயே படைக்கப்பட்டது....எவனிடத்தினின்றுமிவை.

103லோகத்துக்கெல்லாம் நாபிஸ்தானமாய்க்கொண்டு ஸகலத்தையும் பரிக்கின்றான்... அதாவதெப்படி யெனில—வண்டியினது சக்கரமானது இலைகளில்கோக்கப்பட்டு, அவ்விலைகள் குடத்தில புனைக்கப்பட்டிருப்பது போலவே, இந்தப் பூதங்கள் யாவும பிரக்ஞாமாத்திரமான ஆத்மகோடிகளில் கோக்கப்பட்டு, அந்தப் பிரக்ஞாமாத்திரங்களெல்லாம பிராணஸ்வரூபியானபரமாத்மாவினிடத்தில கோக்கபபட்டிருக்கின்றன ..ஸத்தை ஆதாரமாயுடைய பிருதிவியை ..நிர்விகாரனான ஈசுவரன் பரிக்கின்றான்.

104எவன் பிருதிவியில் இருக்கிறானோ,...எவன் ஆத்மாவில் இருக்கிறானோ,...எவனுக்குப் பிருதிவியானது சரீரமோ,...வெனுக்கு ஆதமா சரீரமோ,.. இவன் ஸகல பூதங்களுக்கும் அந்தராத்மா.. ஜகமெல்லாம உனக்குச்சரீரம.. அவையாவும் அவன் சரீரம் . அவையாவும் ஹரியின் சரீரம.

105பூதங்களைக் காபபவனே பூதங்களுக்கீசன் இவன் பூதஙகளைபபரிபாலிப்பவன். 106பரனுக்கென்றே இருக்கையாலே இவன் சேஷபூதன்.

107போகத்தைப்புசிக்கும் இதைப் பிறப்பிலலாத மற்றொருவன விடுவிக்கிறான்...தான் புசியாமல் மற்றொருவன் எங்கும் பிரகாசிக்கின்றான். இவன் ஸகலபூதங்களுக்கும் அந்தராத்மா; பாவந்தொலைததவன்...என்னைக் கருமங்கள் ஒட்டமாட்டா...ஓநாரத! தேவனுடைய மஹிமையையும பெருமையையும் பார்; அவன் நல்லதுந் தீயதுமான கருமங்களால் ஒருக்காலும ஒட்டப்படுகிறதில்லை.

108போகத்தில் பற்றுண்டென்னவேண்டா; விசேஷித்துச் சொல்லுகையாலே. 109தனக்குத்தானே ஈசுவரனை...அவனைக்காட்டிலும் வேறொரு பரன்கிடையாது ..அவனுக்கு ஸமனானது அதிகனாவது காணப்படவில்லை . என்னைக் காட்டிலும பரமாய் வேறொன்று இல்லை...ஓ பரதச்சிரேஷ்ட! புண்டரீகாக்ஷனைக் காட்டிலும் மேலானதுகிடையாது;...புண்டரீகாக்ஷனைவிட வேறொருமேலானவஸ்து இதுவரையிலும்இல்லை இனி உண்டாகப்போகிறதுமில்லை.. கேசவனைத்தவிரமேலாய் விளங்குமதில்லை. ...அளவற்றவனாய் ஆதிமத்தியாந்த ரஹிதனான பரமபுருஷனைவிட வேறொன்று கிடையாது...என்னைக்காட்டிலும் வேறொரு பரவஸ்துகிடையாது.. விசுவரூபனான இவனைக்காட்டிலும வேறு நித்தியமான பரவஸ்துகிடையாது...பரமான (ஆத்மகோடிகளுக்கெல்லாம) பரனாய், தன்னைபபோல் வேறொருவரின்றிக்கே விளங்குமவன் பரமாத்மா.

110அது (ஆத்மா) புண்ணிய பாவங்களை உதறுகின்றது....குதிரைமயிர்களை உதறுகிறதுபோல் பாவத்தை உதறி ..நாமரூபஙகளைவிட்டு...அபபொழுது வித்வான் புண்ணியபாவங்களினின்று விடுபட்டவனாய்...தேவனை அறிந்து ஸகல பாசங்களினின்றும் விடுபடுகிறான். . இருதயத்தில் உண்டான முடிச்சு அவிழ்ந்துபோகிறது ..அவர்கள் இந்த மாயையைக்கடக்கிறார்கள். .எவர்களானால் பதினாறுகுணங்களாலும் கருமங்களாலும் விடுபட்டவர்களாய் பதினைந்து கலைகளையும் விடுகிறார்களோ அவர்கள் முக்தர்களென்று நிச்சயம்.

111திவ்யநேத்திரமான மனதினால் இந்த புருஷார்த்தங்களையெல்லாங் கண்டனுபவிக்கிறான் ..ஹேயஸம்பந்தமற்று மிகவும் ஸமானமாய் விளங்குகிறான்....எனது ஸாத்ருச்யத்தை அடைந்தவர்கள்.. இப்படியும் உபன்னியஸிக்கையாலே பூர்வபபோல் சரீரம் உண்டாயிருப்பதில விரோதமில்லையென்று பாதராயணாபேச்சு ..அவன் ஒருபடியாகிறான்; இரண்டுபடியாகிறான்; . புசித்தும் கிரீடித்தும் ரமித்தும் போருகிறான் ..இஷ்டமான அனேகம் ரூபந்தரித்துப் (பரமாத்மாவைப்) பின்சென்றவனாய் காமங்களையெலலாம் நுகர்கின்றான் ..அவனிடத்தில பிரம்மகந்தம் பிரவேசிக்கிறது, அவனிடத்தில் பிரம்மரஸம் பிரவேசிக்கிறது; அவனைப் பிரம்மாலங்காத்தாலே அலங்கரிக்கின்றார்கள்—துவாதசாஹம்போல் இரண்டுபடியும் பாதராயணர் ஒபபுக்கொள்ளுகிறார்.

112ஸகலருக்கும் பரனாய் நித்தியனான பகவானாலே விடுபடுகிறார்கள்... மஹிமைதங்கியவர்களாய் சேருகின்றனர்...பரமாத்மாவோடு ஸமாந தர்மத்தை அடைந்தவர்கள்...அவர்கள் என்னை அடைகின்றனர். 113ஸகல குண ஸம்பந்நனாய், ஸ்வேதரஸமஸ்தவஸ்து விலக்ஷணனாய் தனக்குச்சேஷியான எம்பெருமானைக் கண்டவனாய் சோகமெல்லாந்தீர்ந்து அவனுடைய மஹிமையை அடைகின்றான்...பிரகிருதிக்கு அவ்வருகான ஆத்மாவையும் அவனுக்கு நியாமகனான பரமாத்மாவையு மறிந்து ..திவமென்கிற பரமாகாசத்தில் விளங்கி தன் அநுபவத்தை வெகுசாய்க் கொடுக்கும் பகவானைக் கிட்டுகிறான்....விதம் விதமாய்ப்பார்க்கவல்ல ஞாநசாலியான பரமாத்மாவுடன்கூட...பரஞ்சோதியைச் சென்றடைந்து.. முக்தர்கள்சென்றணுகும்படியானதாக பரமாத்மஸ்வரூபத்தைச் சோதிக்கையாலும்.

114ஸகலத்துக்கும் அந்தரியாமியாய்க்கொண்டு எங்கும் நிறைந்து இருக்கின்றவனை நாராயணனென்றெண்ணத்தக்கது; அவநதான் தாமரையில் நீர்போல் கருமஙகளால் ஒட்டப்படுகிறதிலலை; அவனைக்காடடில் குறைந்தவனாய் கருமத்துக்கு வசபபட்ட ஜீவாத்மாவே மோக்ஷபந்தங்களிரண்டுக்கும ஆளாகிறான். இவந்தான் பதினேழு ராசியோடும் சேருகின்றான்.

115தேவர்முதலிய பேதங்கள் ஒழிந்ததாகில் (ஆத்மாக்களுக்கு தாரதம்மியமோ) கிடையாது..ஏனெனில-அவை (சரீரத்தைபபற்றிக்கொண்டு) ஆத்மாவுக்கு ஆவரணமாகவன்றோ இருக்கின்றன?

116ஆநந்தமயனான இந்த ஆத்மாவைச் சென்றடைந்து...அநுஸரித்துச் சென்றவனாய்..எப்படியெப்படி தன்சேஷியோகிறானோ அப்படி அப்படி அவனுடன்கூடச் செல்லுகின்றான்; அதாவதெப்படி யென்றால்:—அப்பொழுதீன்ற பசுவானது தனகன்றையும், அக்கன்று அத்தாயையும்போல ...நிழல்போல் அந்த சுத்தஸத்வனைப் பின்செல்வான்...அவனெப்படியோ அப்படியே.

117தனது ரூபத்தோடுகூடி விளங்குகிறான்....இரத்தினத்திற்கு மேலுண்டான அழுக்கைப் போக்குவதொழிய காந்தியை ஊட்டாததுபோலே, (ஆத்மாவின்மீது கிடந்த பிரகிருதியினது) ஹேயமான குணங்களெல்லாம் ஒழியவே ஞானம்முதலிய குணங்கள் பிரகாசிக்கின்றன; அதுவேயல்லது அவைபுதிதாய் உண்டுபண்ணப்படுகிறதில்லை; ஏனெனில்—அவையாவும் ஆத்மாவுக்கு நித்தியமாயுண்டானவையன்றோ?...ஞானம் வைராக்கியம், ஐசுவரியம், தருமம்(இந்நான்கும,) ஓமனிசர்பெருமானே! பரமாத்மாவுடன ஸாம்யம்பெற்ற ஆத்மாவுக்கு நித்தியமாய் விளங்கக்கூடியது...பரமாத்மாவோடு இவன் சேரும்பொழுது (இவனது குணங்களெல்லாம்) ஆவிர்ப்பவிக்கும்; பரமாத்ம தர்மமுண்டாமென்பதாகச் சுருதியாகையாலே.

118ஜகத்தைச்சேர்ந்த வியாபாரம் நீங்கலாக...போகத்தால் மாத்திரம் இவனோடு அவனுக்கும ஸாம்மியம் ...பந்தத்தினின்று விடுபட்டவன் பரம புருஷனிடத்தில் பாரதந்திரியத்தைப்பெற்று, (முன்போல் பிரகிருதிக்கு வசப்படுகையன்றிக்கே) ..ஈடில்லாத சுதந்திரத்தை அடைந்து ..சேதனனிடத்திலுள்ளது சொத்தாயிருக்கை; பிரம்மத்தினிடத்தி லுண்டானது ஸ்வாமித்வம், இவ்விருவருக்குமுண்டான இந்த (ஸ்வ ஸ்வாமிபாவ) ஸம்பந்தமே எனக்குவேண்டுவது; வேறு எவ்வித ஸம்பந்தமும் எனக்கு உகப்பைத்தாராது.

119மூப்பும், இறப்பு மொழிகைக்காக என்னை ஆச்சிரயித்து யத்தினம் செய்கிறார்கள் யாவர்..தமது ஆத்மாவுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணக் கோரிய யோகிகளுக்கு சாசுவதமான ஸ்த்தானம்.

120அது எல்லை; அது பரகதி ..விசுவத்துக்கு ஆத்மாவாய் பரம புருஷார்த்தமானவனை...என்னையே மேலான கதியாக...அவன் மார்க்கத்துக்கு மேலானவனை அடைகிறான்...ஆத்மலாபத்தைவிட மேலான புருஷார்த்தம் கிடையாது.

121இதினால் அடையுமவர்கள் இந்த மானிடப்பிறவிக்குத் திரும்பிவருகிறதில்லை...மறுபடி திரும்புவதில்லை, மறுபடிதிரும்புவதில்லை...திரும்புதலில்லை; சாஸ்திரமுண்டாயிருக்கையால் திரும்புதலில்லை சாஸ்திரமுண்டாயிருக்கையால்...ஸூக்ஷ்மனாகையால் பிரகிருதிக்குப் பரனாய், எங்கும் நிறைந்தவனாய் யாவர்க்கும் கதியாய், ஸர்வஸ்வாமியாய், பரமான வைகுண்டமென்னும் ஸ்தானத்தையுடைய பரமாத்மாவையடைந்து ஸத்வநிஷ்டனாக விருக்கிறான்.

122இவனேயன்றோ ஆனந்திப்பிக்கிறான்? ஸர்வஜ்ஞனை பரப்ரம்மத்தோடுகூட அவன் அநுபவிக்கிறான்...திவ்யநேத்திரமான மனதினால் இந்த புருஷார்த்தங்களை யெல்லாம்பார்த்து ரமிக்கிறான்....புஜிக்கிறான்; கிரீடை செய்கிறான்; ரமிக்கிறான்....அவன் அங்கே செல்லுகிறான்... பல உருவங்கள் தரித்து காமமென்கிற பகவத்குணங்களை (அனுபவிக்கிறான்.)

123...ஸர்வஜ்ஞமான பிரம்மத்தோடு.

124ஆகாசத்தைச் சரீரமாயுடையப்பிரம்மம். 125முக்தருக்குக்கதியான பிரம்மத்தை க்ஷேத்திரக்ஞமென்று வழங்குகிறது.

126பரமாகாசத்தில் அவன் அனுபவிக்கிறான்...அவர்கள் சுகஸ்வரூபமான பரமபதத்தில் மஹிமைதங்கியவர்களாய் விளங்குகிறார்கள். சுவர்க்கத்தின்மீது விளங்குகிறான்... அவன் மூன்றாவது உலகத்தில் களிக்கிறான் ...மறுபடி பிறக்க மனமில்லாதவர்க்கு அபீஷ்டத்தை வளர்த்துக்காக்குமது ...இரவும் பழமையான ஆகாசத்தில் உத்கிருஷ்டமான நமது ஸ்தாநமிருக்கிறதன்றோ? „அதை யடைந்தவன் மறுபடி பிறவிக்குவாரான்....எதை யடைந்து திரும்புகிறதில்லையோ அது நமது மேலானபரமபதம்.

127வேதமுதலியவைகளிற் சொன்னபடி மோக்ஷாதிகாரி யானவன் தனக்குவேண்டும் அமாநித்வாதி கல்லியாணகுண ஸம்பந்நனாய்க்கொண்டு பகவத் உபாஸனத்தைச் செய்துவந்து, அதினால் ஜராமரணாதிகளைக் கடந்தவனாய், அநந்தரம் பந்தஹேதுவான அவித்தைமுதலியவைகளும், அதின் பயனான பந்தமும் நீங்கவே தேவமனுஷியாதிகளோடொக்க நினைக்கும்படியான லக்ஷணங்களெல்லாம் நீங்கி, கேவலம் ஞாநாநந்தாதி மாத்ர ஸ்வரூபனாய், பிரகிருதி ஸம்பந்தமற்ற பரமாகாசத்தை (யடைந்து நித்தியமாய் வாழ்வான்.)...எந்தயோகிகளானால் பரப்பிரம்மமொன்றையேநாடி எப்போதும் அதையே சிந்தித் தவண்ணமாயிருக்கிறார்களோ, அவர்களுக்கு,நித்தியசூரிகள் ஸதா அநுபவிக்குமிடமான விடங்கிடைக்கும்.

128பரிச்சேதிக்கவொண்ணாத பரமாகாசமென்று சொல்லப்படுமெதுயாது, அதுதான் மோக்ஷம்; அதுதான் விஷ்ணுவினது பரஞ்சோதிஸ்வரூபமான ஸ்த்தாந விசேஷம் என்று வேதாந்தநிச்சயம்.

129எதுவானால் வேதங்களாலும் அறியப்போகாமல் விளங்குகின்றதோ அந்த இந்தலோகத்தை உம்மிடத்தில் அன்பினால் ஓ பிராம்மணோத்தம! உமக்குக்காண்பிக்கப்பட்டது. ஓ பகவானே! ஸகல லோகங்களுக்கும் சிரேஷ்டமான இந்தலோகம தேவரீருடைய ஸ்வரூபமாய் விளங்குகிறது. பிரம் மருத்திராதிகளின் லோகமெல்லாம் பார்த்தேன்; இது அவைபோலன்றிக்கே அபூர்வமாய் விளங்குகின்றது.

130காரியங்களுக் கெல்லாங் காரணமாய் வாக்குக்கெல்லாம் உத்தமமானபொருளாய், யோகிகளுக்கெல்லாம் உத்தமமானபொருளாய், யோகிகளுக்கெல்லாம் உத்தமமான ஸித்தியாய் விளங்கும் உமது ஸ்தாநத்தைப் பரமபதமென்பாகள்.

131ஓ பாரதி! பிரம்மாவினது லோகத்துக்கும் மேலாய் ஒருஸ்தானவிசேஷம் விளங்குகிறது; அதில்புகுந்தவர்கள் மறுபடி இவ்வுலகுக்குவருவதில்லை.

132ஓ பரதசிரேஷ்ட! பரமான எனது பிரகிருதியானது (கோபுரப்பிராகாராதி ரூபமாய்க்கொண்டு) வியக்தமாயும், (ஆகாசாதி ரூபமாய்க்கொண்டு) அவ்யக்தமாயுமிருக்கும்; அந்த விடத்தில முக்தாகளெல்லாம் பிரவேசித்து ஸ்வஸ்வரூபம ஆவிர்ப்பவிக்கபெற்று விளஙகுகிறார்கள்.

133ஹிருதய பதமத்தின் கர்ணிகைக்குள்ளாக, புருஷனை, ஸர்வஜ்ஞாமுகனாய், ஸர்வஜ்ஞனாய், எங்கும் செலபவனாய் எல்லாபபிரகாரமு மானவனாய், எலலாவற்றையும் வியாபிததுக்கொணடு விளஙகுகின்றான். அவனைக்காட்டிலும் மேலாய் சூக்ஷமமாய், சுத்தஸ்படிகமபோல நிாமலமாய் நித்தியாநந்தரூபமான பரமபதம் விளஙகுகின்றது, ததை மறிந்தவர்கள் அந்தவிடத்தை யடைந்தவாகளாய் சுபாசுபரூபமான இருவினைகளையுங்கடக்கின்றனர், திரிஸரேணுவென்கிற ஒருசிறிய அளவையுடயரான அவர்கள் கோடிகிரணஙகளால அலங்கரிக்கப்பட்டவர்களாய் மௌமேலும அந்த விடத்தில தானே வஸிக்கப்பெற்று நித்தியமாய் விளஙகுகிறாகள்.

134பரனை யடைகையாலே அவத்யமெல்லாந் தீர்ந்து, பிரகிருதியில் அதிஷ்டானமற்று நிர்விகாரனாய் விளங்குகிறான்.

135இவனேயன்றோ ஆநந்தமுறச செய்கிறான்....அவன் காரணமென்று சொல்லுகையாலும். .நான் உன்னை ஸகலபாபங்களினின்றும் விடுவிக்கிறேன்.

136அவர்களை அநுக்கிரஹிப்பதற்காகவே, ...அவர்களை நான் உத்தரிப்பிக்கிறேன்.

137ஒன்றோடொன்றுசேர்ந்து வியக்தமாயும் அவ்யக்தமாயு மிருக்கின்ற (புலன்களுக்குப் புலப்படுமதாயும் புலப்படாததாயும் விளங்குகின்ற) சேதநாசேதநரூபமான ஸகலப்பிரபஞ்சத்தையும் ஸர்வ நியந்தாவான பகவான் பரிக்கின்றான்; அதில் ஜீவாத்மா கருமத்துக்கு வசப்பட்டு அதின் பயனை அநுபவிப்பவனாய் பரவசப்பட்டிருக்கையாலே பந்தத்தில்கட்டுப்படுகிறான்; பிறகு தேவனை யறிந்தானாகில் ஸகல பாசங்களினின்றும் விடுபடுகிறான்... பிரதாநமென்கிற அசேதநத்துக்கும் க்ஷேத்திரக்ஞனென்கிற சேதனனுக்கும்பதி-குணங்களுக்கீசன். க்ஷரமென்கிற அசேதநத்தையும் ஆத்மாவையும் ஸ்வயம் பிரகாசனான பகவான் ஆள்கின்றான்.

138ஸகலப் பிராணிகளுக்கும் ஈசுவரன ..குணமயமான இந்தப் பிரகிருதி தேவனுடையதன்றோ?...கிரீடாபரனான தேவனுடையதேவி...விளையாடுங்கருவி...ஸம்ஸாரத்தினின்று விடுபடுகைக்கும், ஸம்ஸாரத்தில கட்டுப்படுகைக்கும காரணன்.

139இவ்விரண்டு புருஷர்கள் உலகத்தில் .புவி, நீர், தீ. கால் ..எவன் என்னைப்பிறவியற்ற அனாதியா யிருப்பதாய்...விகாரமின்றி பரிசுத்தனாயிருக்கின்ற...பரரானவர்களுக்கெல்லாம் மிகவும் பரனானவன்.

140அஸத்தும் ஸத்துமான ஸகலத்துக்கும் பிறப்பிடமும் இருப்பிடமுமாய் ஸகலத்தையும் எப்பொழுதும் அறிகையாலே இவனை ஸர்வனென்று

சொல்லுகிறது....எவனால் இதெல்லாம் கோக்கப்பட்டதோ....அவனே இதெல்லாம ..ஸகலத்தையும் வியாபிக்கிறீரானதுபற்றி ஸகலமுமாயிருக்கிறீர.

141எப்பொழுது முள்ளதும், மங்களமானதும், நழுவாததும்....அவனை நினைத்தபோதே ஸகல கல்யாணத்துக்கும் பாத்திரனும்...மங்கள ரூபனாய் ஷாட்குண்ய பரிபூர்ணன் விஷ்ணு ..மங்களத்துக் கிருப்பிடம் ஹரி.. மங்களங்களுக்கெல்லாம் மங்களம்,..மங்களத்தைச்செய்யவல்ல மங்களமான விஷ்ணுவை.

142ஒருவனைக்கொண்டு பலருக்கு யாவனொருவன் ஸகலாபீஷ்டங்களையும் அளிக்கிறானோ . அக்ஷரஸ்வரூபனான இவனையே அறிவானாகில், யாவன் யாதொன்றை விரும்புகிறானோ அவனுக்கது . அவன அருள்புரிவானாகில் அடையத்தகாத தெது தானுளது?...ஸமஸ்தபலன்களையுங் கொடுப்பவரனன்றோ விஷ்ணு? .இரத்தினப் பருவதத்தின் மீதேறி எப்படி இரத்தினங்களை மனிதன் தனது பெலனுக்குததக்கபடி எடுத்துக் கொள்ளுகிறானோ, அப்படி கண்ணனிடத்திலிருந்து மனதில விரும்பியவைகளையெல்லாம்கொள்ளுகிறான் .விஷ்ணுவை ஆராதிததானாகில பூமியிலுள்ள கோரிக்கையையும், சுவர்க்கத்தையும், அச் சுவர்க்கவாஸிகள் கொண்டாடும்படியான பசத்தையும், அதிதுர்லபமான முக்தியையும் பெறுவான்.. எது பெறவரியதோ, எதுகிட்டவரியதோ, எது மனதிற்கெட்டாததோ அதையும பிரார்த்தியாம லிருக்கச்செய்தேயும தியானமாததிரத்தால மதுஸூதனன் கொடுக்கிறார்.

143எஙகளுககிந்த பரமாத்மா இல்லாதவரையில் பிரஜைகளைக்கொண்டு யாம் செய்யும் காரியம் என்? ..எங்களுக்கெல்லாம் இவன் ஆண்டவனாகப் போகிறபடியால் யாங்கள் ஸகல ஸம்ருத்தியும பொருந்தி ஸர்வாபீஷ்டங்களும பெற்றவர்களாவோம்.

144அது, எப்படி சுவர்ணமயமான நிதி குகைக்குள் வைக்கபபட்டதோ அப்படி. 145பல்படியும் பிறக்கிறான...பல ஜனகதுக்கழிந்தன..எபபொழுதெப்பொழுது தருமத்துக்கு. 146சாதுக்களைப் பாதுகாக்கு நிமித்தம்.

147பிறவாதவன்...தீரர்கள் அவனது உற்பததியைப பரிசீலித்து அறிகிறார்கள். இவன் கர்ப்பமானதன்மையை அடையவிலலை, ஸ்வயம் ஸமர்த்தனான இவன் யோனியில் வாஸஞ்செய்யவுமில்லை...தனது தேஜஸாலே கிருஷ்ணன்ஸகலருக்கும் கதியை உணடபணணுகிறார். அளவிடபபோகாமல் அந்தமின்றி பிறவியற்றிருககச்செய்தேயும் தனது இச்சையால்மனிதரிடத்தில் பிறந்திருக்கிறானென்பதாக பாணடவனானவன கணணனுடைய தைவீகமான தொழில்களைககண்டு ஸஹித்துக்கொண்டான்

148மானிட சரீரம்பூணடவனை...மேலான தன்மையை அறியாதவர்களாய்.. பூதங்களுக்கெலலாம் ஈசுவரனாயிருந்தவைத்தும்.

149தனக்குததானே தோன்றிய ப்ரம்மமானது கவிகளான நித்தியசூரிகளுக்கும் மேலானது...எனது சொந்தமான பிரகிருதியைக்கொண்டு அதிஷ்டித்து. 150பிரமத்தின் தேஜோரூபமாய் திவ்யமான ஆச்சரியத்தைக்

